சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி
வெளியீடு—1.

திருக்குறள் ஆராய்ச்சி : 1

# யாப்பு அமைதியும் பாட வேறுபாடும்

பொதுப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனர்
தமிழ்த் துறைத் தலைவர்
சென்னைப் பல்கலைக் கழகம்

சென்னைப் பல்கலைக் கழகம்
1971

# A STUDY OF PROSODY AND VARIOUS READINGS IN TIRUKKURAL

M. SHANMUKHAM PILLAI
Lecturer in Tamil
Tirukkural Endowment Research Centre
University of Madras

UNIVERSITY OF MADRAS
1971

திருக்குறள் ஆராய்ச்சி: 1

# யாப்பு அமைதியும் பாட வேறுபாடும்

ஆசிரியர்:

**மு. சண்முகம் பிள்ளை**

தமிழ் விரிவுரையாளர்

திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி

சென்னைப் பல்கலைக் கழகம்




சென்னைப் பல்கலைக் கழகம்

1971

# துணைவேந்தரின் அணிந்துரை

திருக்குறள் தமிழில் மலர்ந்தது; பல மொழிகளில் பெயர்ந்தது; உலகம் முழுவதும் மணம் பரப்பி வருவது. இது தமிழ் மறை; உலகப் பொது மறை.

காலஞ்சென்ற டாக்டர் ஆல்பர்ட் சுவைட்சர் உலகப் பெருந் தொண்டர்களில் ஒருவர்; மாந்தர் தொண்டிற்குத் தம் வாழ்வைப் படைத்த நல்லார்; நுண்மாண் நுழைபுலமிக்க அறிஞர்; சிறந்த சிந்தனையாளர். அப் பெரியார்,

> "ஒழுக்கமே மனிதனுடைய உயர்ந்த குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதை மிகுந்த உறுதியோடு வள்ளுவர் கூறியிருக்கிறார். ஒவ்வொருவனும் தனக்குத் தானே செய்ய வேண்டிய கடமை என்ன? மற்றவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன? என்பனவற்றையெல்லாம் சிறந்த பண்பாட்டோடும் மதிநுட்பத்தோடும் வள்ளுவர் பேசுகிறார். உலக இலக்கியத்தில், இத்தகைய மாண்புமிக்க மெய்யறிவு வேறு எந்நூலிலும் இத்துணைச் சிறப்பாகப் பொலிவுறவில்லை என்று சொல்லலாம்"

என்று போற்றியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருக்குறள் தோண்டத் தோண்டத் துலங்கும் மணிச் சுரங்கமாய் விளங்குகிறது. அவ்வக் காலத்திற் கேற்ற அறிவொளியை வழங்கி எக்காலத்திற்கும் எல்லார்க்கும் உரிய வாழ்க்கை இலக்கியமாய் விளங்குவதே திருக்குறளுக்குரிய சிறப்பாகும். திருக்குறளுக்கு இது வரையில் எத்தனையோ ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்துள்ளன.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் திருக்குறள் ஆராய்ச்சி வெளியீட்டு வரிசையில் முதல் இடம் பெறும் இந்நூலைப் புலவர் திரு. மு. சண்முகம்பிள்ளை அவர்கள் அரிதின் ஆராய்ந்து இயற்றி யுள்ளார். 'திருக்குறள் யாப்பு அமைதியும் பாட வேறுபாடும்' என்னும் தலைப்புக் கொண்ட இந் நூல் ஒரு புதிய முயற்சி. இப் பொருள் பற்றி முதன்முதல் எழுதப் பெற்ற முழுமையான நூல் இது.

இந்நூலுள் குறள் வெண்பாவின் இலக்கண அமைதியும், வள்ளுவர் குறள் வெண்பாவைத் தேர்ந்து எடுத்துக் கொண்டமைக் குரிய காரணமும், அதனால் அற நூலாகிய திருக்குறள் அடைந் துள்ள சிறப்பும் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. மேலும்,

திருக்குறளில் உரையாசிரியர்கள் காட்டுகின்ற பாட வேறு பாடுகளும், அவற்றிற்கு அவர்கள் வரைந்துள்ள உரை விளக்கத்தால் தெளிவுறும் மூல நூலாசிரியரின் நுட்பமான கருத்துக்களும் ஆராயப் பெற்றுள்ளன. பண்டை உரையாசிரியர்கள் மட்டும் அல்லாமல், அண்மைக் காலத்திய பதிப்பாசிரியர்கள் மேற்கொண்ட பாடங்களும், அவற்றின் வன்மை மென்மைகளும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

இந் நூல், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராய் இருந்த டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் மேற்பார்வையில் தகுதிமிக்க அறிஞர்களுள் ஒருவரான, புலவர் மு. சண்முகம்பிள்ளை அவர்களால் நடத்தப்பெற்ற ஆராய்ச்சியின் பயனாக வெளிவரும் ஆய்வுரையாகும்.

இத்தகைய விழுமிய ஆராய்ச்சி நூல்கள் திருக்குறளைப் பற்றி இயற்றப் பெறுவதற்குக் காரணமாக இருப்பது, தமிழக அரசு இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் போது, மனமுவந்து நிறுவிய திருக்குறள் ஆராய்ச்சி அறக் கட்டளையே ஆகும். தமிழக அரசின் நல்லுதவி கிடைத்திராவிட்டால் இத்தகைய ஆராய்ச்சியும், இதன் விளைவான அரிய நூல்களும், ஊமையன் கண்ட கனவாகியிருக்கும். தமிழக அரசு காலத்தினாற் செய்த இப் பேருதவி, தமிழை வளர்க்கும் ஈரம். இவ்வறக் கட்டளையை நிறுவிய தமிழக அரசுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் பெரிதும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது. தமிழ் தழைக்கத் துணை நிற்பதன்றித் தமிழக அரசுக்கு வேறு என்ன கைம்மாறு செய்ய வல்லோம்?

தமிழ்ப் பொது மறை மக்கள் நெறியாகுக! அன்பும் அருளும் அறனும் பொதுவாகுக! அவற்றிற்கு இத்தகைய நூல்கள் துணை ஆகுக!

**நெ. து. சுந்தரவடிவேலு**
14—4—71
(தமிழ்ப் புத்தாண்டு நாள்)

# நூன்முகம்

'திருக்குறள் யாப்பு அமைதியும் பாட வேறுபாடும்' என்னும் இந்நூல், பெயருக்கு ஏற்ப இரு பகுதிகளாக உள்ளது. முதற் பகுதி 'திருக்குறள் யாப்பு அமைதி'; இரண்டாம் பகுதி 'திருக்குறள் பாட வேறுபாடு'. 'யாப்பு' என்பதைக் குறிப்பதற்கு, பா, பாட்டு, தூக்கு, தொடர்பு, செய்யுள் என்னும் சொற்களும் வழங்கும்.

'யாப்பும்
தூக்கும் பாட்டும் தொடர்பும் செய்யுளை
நோக்கிற் றென்ப நுணங்கி யோரே'

எனவரும் ஒரு பழஞ் சூத்திரத்தாலும் இது விளங்கும். இப்பெயர்கள் எல்லாம் காரணப்பெயர்களே. பா, பாட்டு, தூக்கு என்பன ஓசையும் தாளமும் ஒக்க அமைந்து பாடுவதற்குரிய பண்புகள் வாய்ந்தது என்னும் இயல்புபற்றிப் பிறந்தவையாம். 'யாப்பு' என்பது கட்டப்படுவது என்றும், 'செய்யுள்' என்பது செய்யப் படுவது என்றும் பொருள்படும். 'தொடர்பு' என்பதும் சொற்கள் தொடர்ந்து கட்டுக் கோப்புக்குள் அமைந்து இசைத் தொடர்புபட வருவது என்னும் கருத்தால் எழுந்ததாகும்.

யாப்புக்குரிய இலக்கணம் வகுத்த சான்றோருள் ஒருவராகிய தொல்காப்பியர் தமது நூலுள் 'செய்யுளியல்' என்று வழங்கு கின்றார். பிற்கால இலக்கண நூலார்களோ 'யாப்பு' என்பதை நூற்பெயராக, அல்லது இயலின் பெயராக ஆண்டுள்ளனர். ஆகவே, 'செய்யுள்', 'யாப்பு' என்னும் இரண்டும் பெருவழக்காக வருவன என்பதும், 'யாப்பு' என வழங்குதலே பிற்காலப் பெரு வழக்காயிற்று என்பதும் தமிழ்வரலாற்றால் தெரியவரும். எனவே, செய்யுளின் இயல்புகளை ஆராயும் இந்நூலுக்கும் 'யாப்பு அமைதி' என்று பெயர் சூட்டப் பெற்றது.

வள்ளுவப் பெருந்தகையாரும் கட்டு, பிணைப்பு என்னும் பொருளில் 'யாப்பு' என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். 'கழல் யாப்பு' (குறள், 777), 'யாப்பினுள் அட்டிய நீர்' (குறள், 1093) எனவரும் திருக்குறள் தொடர்கள் மேலதற்குச் சான்றாகும். என்றாலும், இங்கே செய்யுள் என்னும் பொருள் கருதப்படவில்லை. 'இசைப்பாட்டு' என்னும் பொருளில் வள்ளுவர் வழங்கிய சொல் 'பாடல்' என்பதாம். 'பண் என்னும் பாடற்கு இயைபின்றேல்' (குறள், 573) என்னும் திருக்குறள் தொடர் பண்ணொடு பயின்று வருவது 'பாடல்' என்று அழைக்கப்பெறும் என்பதை அறிவிக் கிறது. ஆகவே, பாவின் பொது இயல்புகளைக் கருதும்போது 'செய்யுள்' அல்லது யாப்பு என வழங்குதலே நேரிது என்பது புலனும்.

'திருக்குறள் யாப்பு' என்னும் போது குறள் யாப்பே இந் நூலில் இடம் பெற்றுள்ளமை யாவரும் அறிந்ததே. குறள் யாப்பின் இயல்புகளைக் காண்பதற்கு உறுதுணையாகப் பொதுவகையில் யாப்பின் உறுப்புகளைப்பற்றிய இயல்புகள் நன்கு தெளியப்படல் வேண்டும் அன்றோ? ஆகவே, பாவின் பொது இயல்புகளையும் எடுத்துக்காட்டி, அவற்றுள் குறள் யாப்பில் பயின்று வரும் இயல்புகள் சிறப்பாக இந்நூலுள் விளக்கப்பட்டுள்ளன. பாவின் கட்டுக் கோப்புக்கு நிலைக்களமாகிய தொடைகளின் இயைபுகள் இதில் பெரும் பகுதியாக அமைகின்றன. `திருக்குறளில் யாப் பிலக்கண நூலார் வகுத்துரைக்கும் தொடை வகைகள் எல்லாம் பொருந்தி வருகின்ற பான்மை ஏற்ற எடுத்துக் காட்டுகளால் விளக்கப் பெற்றுள்ளன. எல்லாவற்றையும் பொருத்திப் பார்க்கும் போது பிறர் எவ்வெவ்வகையான செய்யுள் மரபுகளை மேற் கொண்டிருக்கின்றார்களோ, அவ்வகை மரபுகள் எல்லாம் திருக் குறள் பாக்களிலும் விரவி வருதல் வியப்புத் தருவதாயுள்ளது. திருக்குறளே எல்லாவற்றிற்கும் மூலபண்டாரமாக ஒளிவீசித் திகழ்வது என்னும் உண்மையும் இதனால் புலப்படும். இவ்வகை அமைப்புகளால் வள்ளுவருடைய ஆழ்ந்தகன்ற பெரும் புலமை நமக்குத் தெள்ளிதின் விளக்கமாகும்.

'பாட வேறுபாடு' என்பது பாட்டின் வடிவம்பற்றியதோர் கூறுபாடு. ஆதலால், யாப்பு அமைதியோடு இது பெரிதும் இயை புடையதாகும். எனவே, திருக்குறள் பாடவேறுபாடுகளையும் உடன் ஆராய்ந்து, யாப்பு அமைதியோடு சேர்த்து வெளியிடுதல் தக்கது எனக் கருதிப் பின்னர் அவ்வேறுபாடுகளும் ஆராய்ந்து தொகுத்து, அவைபற்றியும் விளக்கம் எழுதப்பெற்றது. திருக் குறள் பாடவேறுபாடுகளின் வரலாறுகள் உரையாசிரியர்களின் காலம் முதற்கொண்டு முறையே விவரிக்கப்பட்டுள்ளன. பாட வேறுபாடுகளின் தொகுப்பு அட்டவணையும் நூலின் இறுதியில் தனிப் பிற்சேர்க்கையாக இணைக்கப் பட்டிருக்கிறது.

பொருள் விளக்கத்திற்கு மேலும் இன்றியமையாதனவான குறிப்புகள் அந்தந்தப் பக்கங்களிலேயே அடிக்குறிப்பாகத் தரப் படாமல், ஒவ்வொரு பகுதியின் முடிவிலும் 'குறிப்புகள்' என்னும் தலைப்பின்கீழ் ஒருசேரத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. நூலினுள் குறிப்புகள் வரும் இடங்களைச் சுட்ட ஒன்று முதலாகத் தொடர் எண் கொடுக்கப் பட்டிருக்கிறது. இக்குறிப்புகள் ஆராய்ச்சி யாளர்க்கு மட்டுமே தேவைப்படுவதாதலாலும், பொருட் பகுதியில் படிப்பார்க்கு இடையறவு செய்யும் ஆதலாலும், இறுதியில் தொகுத்து அமைப்பது இக்கால ஆசிரியர்களிடையே காணும் ஒரு முறைமையாகும். இம் முறைமை இந்நூலுள் மேற்கொள்ளப் பெற்றிருக்கிறது.

நூலின் இறுதியில் 'பொருட் குறிப்பு அகராதி' என்னும் ஒரு பகுதியும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது நூலின் இருபகுதிகளுக்கும் பொதுவாக நூல் முழுமைக்கும் உரிய அகராதி ஆகும். மேற்கோளாக நூலுள் எடுத்தாளப் பெற்ற நூற்பெயர், ஆசிரியர் பெயர், விவரிக்கப் பெற்ற பொருட் பகுதிகள், மரபுவழிப் பெயர்கள் முதலியனவெல்லாம் இதில் இடம்பெற்றுள்ளன.

இந் நூலுள் கூறப்பெற்ற கருத்துகள் யாவும் அறுதியிட்ட முடிபுகள் என்று உறுதியாகச் சொல்ல இயலாது. கிடைத்த சில சான்றுகளைக் கொண்டு விருப்பு வெறுப்பு இன்றி ஆராய்ந்து சிற்சில முடிபுகள் கொள்ளப்பட்டுள்ளன. இவற்றுள்ளும் கூட சில ஐயுறத் தக்கனவாகவும், சில ஊகமாகக் கருதத்தக்கனவாகவும் இருக்கலாம். இன்னும் சில இனிமேல் கிடைக்கும் சான்றுகளால் மாற்றம் பெறவோ வளம்பெறவோ நேரலாம்.

இவ்வாராய்ச்சி நூல் உருப்பெற்று வந்தபோது, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராக வீற்றிருந்து, இப்பொழுது மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராகத் திகழ்ந்து வரும் பேராசிரியர் டாக்டர். மு. வரதராசனார் அவர்கள் திருக்குறள் ஆராய்ச்சிப் பணிக்குத் தக்க முறைகளை எடுத்துரைத்து வழிகாட்டி வந்தார்கள். இப்பொழுது தமிழ்த்துறைத் தலைவராக விளங்கி வரும் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் இவ்வாராய்ச்சியைக் கூர்ந்து பார்த்துத் தங்களுடைய கருத்துக்களைத் தெரிவித்து ஊக்குவித்தார்கள். திருக்குறள் ஆராய்ச்சித்துறை விரிவுரையாளர் திரு. க. த. திருநாவுக்கரசு அவர்களும் அவ்வப்போது தம் கருத்துக்களைத் தெரிவித்து உதவி வருகிறார்கள். இந்நூல் அச்சாகும் காலத்தில் திரு. க. த. திருநாவுக்கரசு அவர்களும், ஆராய்ச்சித் துணைவர் திரு. இ. சுந்தரமூர்த்தி அவர்களும் அச்சுத் தாள்களைத் திருத்துவதிலும் உதவிபுரிந்துள்ளார்கள். இவர்கள் எல்லோருக்கும் எனது உளமார்ந்த நன்றியும் வணக்கமும் உரியன.

திருக்குறள் ஆராய்ச்சித்துறையில் பணிபுரியும் வாய்ப்பை எனக்கு அளித்து, இங்கே நான் எழுதிய ஆராய்ச்சி யுரையையும் நூல்வடிவில் வெளியிடுவதற்கு ஆவனசெய்த பல்கலைக்கழக ஆட்சிக் குழுவினருக்குப் பெரிதும் நன்றிக் கடப்பாடுடையேன்.

இந்நூலிற்கு அணிந்துரை வழங்கிய தாமரைத் திருவினர் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்கு என் நன்றி நிறைந்த வணக்கங்கள் உரியன.

சென்னை-5
23—4—'71

மு. சண்முகம்

# உள்ளுறை

எண் பக்கம்

## முதற்பகுதி

### திருக்குறள் யாப்பு அமைதி



## இரண்டாம் பகுதி

### திருக்குறள் பாட வேறுபாடு

## பொது

# 1. பாவின் பொது இயல்பு

### *பாவகை நான்கு*

தமிழில் உள்ள பாவகையை வகுத்துரைக்கப் புகுமிடத்து ஆசிரியர் தொல்காப்பியர், 'நாலியற் றென்ப பாவகை விரியே' (தொல். செய்யு. 105) எனக் கூறுகின்றார். இங்கே அவர் வகுத்துரைத்த நான்கு பாக்களாவன: ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என்பன. இவ்வகைக் கூறுபாடு ஆசிரியர் தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்ட ஆன்றோராலும் கொள்ளப்பெற்றது என்பது 'என்ப' என அவர் மேலை நூற்பாவில் எடுத்துக்காட்டுவதால் உணரலாகும்.[1]

### *முதற்பா*

மேலும், அந் நால்வகைப் பாக்களுள்ளும் 'முதற்பா' என்னும் சிறப்புக்குரியவை ஆசிரியமும் வெண்பாவுமே. வஞ்சிப்பாவை ஆசிரிய நடைத்து என்றும், கலிப்பாவை வெண்பா நடைத்து என்றும் கொண்டனர். இக் கொள்கையும் ஆசிரியர் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே நிலவியதாகும்.

> 'பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
> ஆசிரி யப்பா வெண்பா என்றாங்கு
> ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப'.
>
> (தொல். செய்யு. 107)

> 'ஆசிரிய நடைத்தே வஞ்சி, ஏனை
> வெண்பா நடைத்தே கலியென மொழிப'
>
> (தொல். செய்யு. 108)

எனவரும் சூத்திரங்களில் கூறிய கருத்துக்களை 'என்ப,' 'மொழிப' என முந்தையோர் கொள்கையாம் என்றும்,

அதுவே தம் காலத்து வழங்கும் வழக்குமாகும் என்றும் தொல்காப்பியர் எடுத்துக்காட்டுகின்றார்.

### அளவடியினால் அமைந்துவரும் பாக்கள்

'முதற்பா' எனப் போற்றப்பெறும் ஆசிரியமும் வெண்பாவும் நாற்சீர் கொண்ட அளவடியினால் அமைந்துவரும் பாக்களாம். அடி என்று சொல்வதே நாற்சீர் அடியைத் தான் குறிக்கும்.

> 'நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே'
>
> (தொல். செய்யு. 32)

என்பது தொல்காப்பியர் விதி. இருசீர், முச்சீர், ஐஞ்சீர், அறுசீர் கொண்டுவரும் அடிகளை விடவும் இஃது சிறந்தது என்பதைக் காட்டுவதற்கு 'நாற்சீர் கொண்டது அடி எனப் படும்' என அவர் சிறப்பித்தார். இந் நாற்சீரடி 'அளவிற் பட்டமைந்தமையானும் அது பயின்று வருதலானும்' மற்றக் குறளடி, சிந்தடி, நெடிலடி, கழிநெடிலடி என்பவற்றினும் சிறந்தது எனப் பேராசிரியர் விளக்கம் தருகின்றார். நாற்சீரடியை 'நேரடி' என ஆசிரியர் தொல்காப்பியர் வழங்குவதும் (தொல். செய்யு. 38) இதன் சிறப்பினைக் குறித்து எழுந்த பெயரேயாகும்.

### பாவும் அடியும்

> 'அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே'
>
> (தொல். செய்யு. 35)

என்னும் தொல்காப்பியச் சூத்திரவுரையில் பேராசிரியர் அளவடியினாலே முந்தையோர் பா இயற்றிவந்த மரபை எடுத்துக்காட்டியுள்ளார். அவர் உரை வருமாறு:

> "அடியின் சிறப்பு என்பது அடி இரண்டும் பலவும் அடுத்து வந்த தொடையே பாட்டு என்றவாறு. தலை 'இடை கடைச் சங்கத்தாரும் பிற்சான்றோரும் நாற்சீரடியான்வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும்பான்மையும் செய்தார்; வஞ்சிப்பா சிறுவரவிற்று எனக் கொள்க."

இவ்வுரைப் பகுதியில், 'அடி இரண்டும் பலவும் அடுத்து வந்த தொடையே பாட்டு' எனப் பேராசிரியர் குறிக்கும்

விளக்கம் கூர்ந்து நோக்கத் தக்கது. குறைந்த அளவு பாட்டிற்கு இரண்டு அடிகள் அமைந்திருக்கவேண்டும் என்பதாம். இந்த இயல்பைக் குறட்பாவில் காண்கிறோம். 'ஒரு தொடை ஈரடி வெண்பாச் சிறுமை' என்பது காக்கை பாடினியார் வரையறை. அடிவரையறை இல்லாது வரும் நூற்பாவோ ஓரடியாயும் வரும் இயல்புடையதா யிருக்கின்றது. இரண்டடி கொண்டுவரும் நூற்பாக்கள் ஓரளவு குறட்பாவை ஒத்த அமைப்பைக் கொண்டிருப்பினும் குறட்பாவின் போக்கும் நூற்பாவின் நடையும் வேறுபட்டனவே யாகும்.

மேலும், பாடல்களுக்கு உறுப்பாக எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பனவற்றைக் குறிப்பிடுவர். இந்த உறுப்புக்களை ஏற்றபெற்றி அமைத்துக் கவிஞர் தாம் கருதிய பொருள் பொலிவுற, அணிநலம் திகழ, அமைக்கப் பெறுவதே யாப்பு அல்லது செய்யுள் என்று ஆன்றோரால் குறிக்கப்படும்.

> 'பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
> சொல்லாற் பொருட்கிட னாக உணர்வினின்
> வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்' (நன். 268)

எனப் பவணந்தி முனிவர் தமது நன்னூலில் செய்யுளின் இயல்பை விளக்கியுள்ளார். இதனால், எழுத்து, அசை முதலியன எல்லாம் உடலாகப் பாவிற்கு உயிராக அமைவது கவிஞர் பாவின்வழி உலகிற்குத் தரும் பொருளே என்பது உளங்கொளத்தக்கது.

# 2. வெண்பா இயல்

## தொல்காப்பியர் கூறும் குறுவெண்பாட்டு

குறட்பாவினைத் தொல்காப்பியர் 'குறுவெண் பாட்டு' என அறிமுகப்படுத்துகிறார். இவர் கூறும் குறுவெண் பாட்டு குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா ஆகிய வற்றைக் குறிப்பிடுகிறது.

> 'நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
> கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோடு
> ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின'
>
> (தொல். செய்யு. 118)

எனவரும் இச் சூத்திரத்தில் வெண்பாவின் வகைகளையும், அப் பாவகைகளினால் அமைந்துவரும் பொருள்களையும் ஒருங்கு கூறுகின்றார். இவற்றுள் குறுவெண்பாட்டைக் குறித்துப் பேராசிரியர் தரும் விளக்கம் பின்வருமாறு :

> "குறுவெண்பாட்டு என்பன இரண்டடியான் மூன்றடியான் வருவன ; குறள் வெண்பா சிந்தியல் வெண்பா எனப்படலும் ஒன்று. எனவே, நான்கடியான் வருவன அளவியல் வெண்பா எனப்படும்."

இதனால், குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, அளவியல் வெண்பா, நெடுவெண்பாட்டு (பஃறொடை வெண்பா) என்பனவும் பழமையாகவரும் வெண்பாவகைகள் என்பது விளங்கும்.

## வெண்பாவிற்கு அடி வரையறை

வெண்பாவிற்கு இரண்டு அடி இழிபும் பன்னிரண்டு அடி ஏற்றமுமாக அமையும்.

'நெடுவெண் பாட்டே முந்நா லடித்தே
குறுவெண் பாட்டின் அளவெழு சீரே'
(தொல். செய்யு. 158)

என வெண்பாவிற்கு அடிவரையறை செய்கின்றது இத் தொல்காப்பியச் சூத்திரம். குறுவெண்பாட்டு எழுசீரால் அமைந்துவரும் இரண்டடி கொண்டது என்று இது அளவிட்டு உரைக்கின்றது. குறள் வெண்பாவின் முதலடி நாற்சீராயும் இரண்டாம் அடி முச்சீராயும் வருவதால், ஒன்றே முக்கால் அடி கொண்டது என்னும் கருத்தில் இதனை 'ஓரடி முக்கால்' எனவும் வழங்குவர் (யா. காரிகை. 25 உரை).[2]

'எப்பாலும் ஏத்துவாம் இன்பம் பொருள்அறமா
முப்பாலும் ஆயிரத்து முந்நூற்று—முப்பதா
ஓரடி முக்கால் உரைத்ததிரு வள்ளுவனார்
ஈரடி முக்காலு மே' (செந்தமிழ். தொகுதி 1, பக். 294)

என்று ஒரு பழம் பாடல் திருவள்ளுவர் ஓரடி முக்காலாம் குறட்பாவினால் அறம் பொருள் இன்பம் வகுத்துரைத்த மையைச் சிறப்பித்துக் கூறுகிறது. இவ்வகை வெண் பாவினை 'வன்பா' என வழங்குவர் என்று யாப்பருங்கல விருத்தியுரைகாரர் குறிப்பிடுகின்றார் (யா. வி. பவானந்தர் பதிப்பு. பக். 208).

### வெண்பாவின் சிறப்பு

வெண்பா ஏனைய பாக்களைப் போல வேற்று ஓசை விரவாது தனக்கெனத் தூய இயல்பினைக்கொண்டு அமைவதாகும். இதனால் இதனை நால்வகைப் பாக்களுள்ளும் தலைமையாக வைத்து ஆன்றோர் சிறப்பித்தனர். இதன் தலைமைச் சிறப்புக் குறித்து யாப்பருங்கல விருத்தியுரைகாரர் தரும் விளக்கம் கற்று இன்புறுவதற்குரியது. அவர் தரும் விளக்கம் வருமாறு :

"வேற்று வண்ணம் விரவாது தூய்மை பெற்ற வெள்ளை வண்ணம் எல்லா வண்ணத்துள்ளும் சிறப்புடைத்து. அவ்வாறே வேற்றுத்தளையும் அடியும் விரவாது தூய்மை பெற்று எல்லாப் பாவினுள்ளும் சிறப்புடைத்தாதலின் வெள்ளை என்பது காரணக்குறி. திருவே போலச் சிறப்புடையாளைத் திருவென்றாற்போலக் கொள்க"

எனவும்,

"நாற்சீரடியான் நடைபெறுதலும் வேற்றுப்பாவினுல் இருமையும் எல்லாப் பொருள் மேலும் சொல்லப்படும் என்றிவற்ருல் ஆசிரியத்தோடு ஒத்தலும் உயர்ந்த ஓசைத்தாகலும் உத்தம சாதியாகலும் வேற்றுத்தளையும் வேற்றடியும் வேற்றுப்பாவும் விரவாமையும் என்னும் அதிக குணமுடைமை நோக்கி வெண்பா ஆசிரியப்பாவின் முன் வைக்கப்பட்டது"

(யா. வி. உரை. பக். 207-208)

எனவும் விளக்கம் தந்துள்ளார். இவற்ருல் பிற பாக்களைக் காட்டிலும் வெண்பாவிற்குரிய ஏற்றத்திற்கான ஏதுக்களை நாம் கண்டு கொள்ளலாம்.

## வெண்பாவின் பொது இயல்பு

இனி, வெண்பாவின் பொது இயல்புகளை நோக்குவோம். செப்பல் ஓசைத்தாய், ஈற்றடி முச்சீராய், ஏனையடி நாற்சீராய், வெண்சீரும் இயற்சீரும் வந்து, வெண்டளை மட்டும் பெற்று, வேற்றுத்தளை விரவாது, காசு, பிறப்பு, நாள், மலர் என்னும் வாய்பாட்டால் இறுவது வெண்பாவின் பொது இயல்பு.

'செப்பல் இசையன வெண்பா மற்றவை
அந்தடி சிந்தடி யாகலும் அவ்வடி
அந்தம் அசைச்சீர் ஆகலும் பெறுமே' (யா. வி. சூ. 57)

என்பது வெண்பாவின் பொது இயல்பு கூறும் யாப்பருங்கலச் சூத்திரம்.

# 3. குறள் வெண்பா மரபுகள்

**குறள் வெண்பா**

இப்பொது இயல்பில் இரண்டடி கொண்டு அமையும் பாட்டைக் 'குறள் வெண்பா' என்பர். 'ஈரடி குறள்' என்று யாப்பருங்கலமும் (சூ. 59), 'ஈரடி வெண்பாக் குறள்' என்று யாப்பருங்கலக் காரிகையும் (23) குறட்பா இயல் பினைக் கட்டுரைக்கின்றது. இதனையே,

'தொடையொன்று அடியிரண்டு ஆகி வருமேல்
குறளின் பெயர்க்கொடை கொள்ளப் படுமே'

எனவரும் காக்கைபாடினியார் சூத்திரம் மேலும் தெளிவு பெற விளக்குதல் காணலாம். இங்ஙனமாக இலக்கண நூலார் தரும் குறட்பா இயல்புகளைத் தொகுத்தும் வகுத்தும் பார்ப்போம்.

**வடிவம் :** குறட்பாவின் வடிவம் இரண்டடி கொண்டது.

**அடி :** முதல்அடி நாற்சீர்; இரண்டாம்அடி முச்சீர். இம் முச்சீரிலும் இறுதிச்சீர் ஓரசைச்சீர். ஓரசைச் சீர் களாகிய நேர் நிரைகளையடுத்துக் குற்றுகரவெழுத்துப் பெற்று வருவதும் உண்டு. இவற்றை முறையே முற் காலத்தில் நேர்பு, நிரைபு என்றும், பின்னுளில் காசு, பிறப்பு என்றும் பெயரிட்டு அழைக்கலாயினர்.

**சீர் :** வெண்சீர், இயற்சீர், அசைச்சீர்.

**வெண்சீர் :** நேரசையால் இறும் மூவசைச்சீர்; தேமாங் காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் எனவரும் நான்கு காய்ச்சீர்கள்.

**இயற்சீர்** : தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என வரும் நான்கு ஈரசைச் சீர்கள்.

**அசைச்சீர்** : இது ஓரசைச்சீர் ஆகும்; வெண்பாவின் இறுதியாகவரும் சீர் : நாள், மலர், காசு, பிறப்பு.

இவற்றுள் காசு, பிறப்பு என்பன ஈரசையுடையன போல் தோன்றினும், இவற்றின் ஈற்றில் வரும் குற்றியலுகரம் மெய்யெழுத்துப் போன்ற அளவுடைய எழுத்தே. எனவே, பாடல்களின் ஈற்றில் வரும் இக் குற்றெழுத்து அலகு பெறாது. ஆதலால், இவையும் ஓரசைச் சீர்களே.

**தளை** : வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை.

**வெண்சீர் வெண்டளை** : மூவசைச்சீர்களுள் காய்ச்சீர்களின்முன் நேரசைகொண்ட சீர் வருதல்.

**இயற்சீர் வெண்டளை** : ஈரசைச்சீர்களுள் மாமுன் நிரையசையும் விளமுன் நேரசையும் கொண்ட சீர்வருதல்.

ஆக, மாமுன் நிரையும் விளமுன் நேரும் காய்முன் நேரும் வருவதே வெண்டளைக்குரிய அமைதியாகும். தேமா அல்லது புளிமா முன் மலர், புளிமா, கருவிளம் அல்லது கருவிளங்காய்ச் சீர்வருதல் அமைவுடையது. இங்ஙனமே கூவிளம் அல்லது கருவிளச்சீர்களின் முன் நாள், தேமா, தேமாங்காய் கூவிளங்காய்ச் சீர்கள் வருதல் முறையாகும். தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் எனவரும் நான்கு காய்ச் சீர்களோடு நாள், தேமா, தேமாங்காய், கூவிளங்காய் என்னும் நேர் முதல் சீர்கள் பொருந்தி வரும். இவ்வமைப்பினைப் பின்வருமாறு அட்டவணை முறையில் காண்போமானால், நன்கு தெளிவாகப் புலனாகும்.

| | | |
|---|---|---|
| தேமா | — | மலர் (பிறப்பு) |
| புளிமா | — | புளிமா |
| | | கருவிளம் |
| | | கருவிளங்காய் |

| | | |
|---|---|---|
| கூவிளம் | — | நாள் (காசு) |
| கருவிளம் | — | தேமா |
| | | தேமாங்காய் |
| | | கூவிளங்காய் |

| | | |
|---|---|---|
| தேமாங்காய் | — | நாள் (காசு) |
| புளிமாங்காய் | | தேமா |
| கூவிளங்காய் | | தேமாங்காய் |
| கருவிளங்காய் | | கூவிளங்காய் |

**பாவுறுப்பும் பாவும்**

எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலியன எல்லாம் காரணம் பற்றி அமைந்த பெயர்களாகும். இவற்றின் பெயர்க்காரணங்களைப் பின்வரும் இலக்கண விளக்க நூற்பா தெளிவுற எடுத்துக்காட்டுகின்றது.

'எழுதப் படுதலின் எழுத்தே ; அவ்வெழுத்து
அசைத்திசை கோடலின் அசையே ; அசையியைந்து
சீர்கொள நிற்றலின் சீரே ; சீர் இரண்டு
தட்டு நிற்றலின் தளையே ; அத்தளை
அடுத்து நடத்தலின் அடியே ; அடிஇரண்டு
தொடுத்துமன் சேறலின் தொடையே ; அத்தொடை
பாவி நடத்தலின் பாவே ; பாவொத்து
இனமாய் வழங்கலின் இனமெனப் படுமே'.

(இலக். விளக். செய்யு. 2)

எழுத்து என்பது எழுதப்படுதலினுல் வந்த பெயர் ; எழுத்துக்கள் தனித்தும் சேர்ந்தும் வந்து இசையறுதி செய்து நிற்கும் பகுதியே அசை. அசைகள் தம்முள் இயைந்து, நேரும் நிரையுமாக ஒத்தும் ஒவ்வாதும், தாளவறுதிபடச் சொற்களைக் கூறுபடுத்தி நிற்பதனுல் சீர் என்றனர். இரண்டு சீர் சேர்ந்து வரும்பொழுது அவற்றிடையே ஏற்படும் பிணைப்பே தளை. 'தளையாம் சீர்தம்முள் தலைப்படும் கட்டே' என வீரமாமுனிவர் தமது 'தொன்னூல் விளக்கத்தில்' (யாப்பதி. 5) அமைதி கூறுதலும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும். அத் தளை பல அடுத்து நடத்தலின் அடி எனப்பட்டது. அடி இரண்டு முதலாகத் தொடுத்துவருமிடத்துப் பிறங்கும் ஒலிக்கட்டுக்கோப்பு ஆதலின் தொடை எனப்பட்டது. பூந்தொடை போல இச்

செய்யுள் தொடையும் செய்யுளுக்குச் சந்த இன்பம் தந்து; அதனைக் கற்பார்க்குச் சுவை பயந்து நிற்கிறது. தொடை காரணமாகப் பிறக்கும் சந்த நடையே பாவாகும்.

### ஓசை

'பா' என்றாலே ஓசை என்பது பொருள் என்பர். "சேட் புலத்து இருந்த காலத்தும் ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமல் பாடமோதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை இன்ன செய்யுள் என்று உணர்தற்கு ஏதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை" (தொல். செய்யு. 9 உரை) என்று பேராசிரியர் 'பா' என்பதற்கு விளக்கம் தருகிறார். ஆகவே, ஒவ்வொரு பாவிற்கும் உரிய அசை சீர்களை ஓசைப்படப் படித்தலே முறையாகும்.

### வெண்பாவின் ஓசை

'செப்பலிசையன வெண்பா' என்று வெண்பா இயல்பு கூறத் தொடங்குகிறார் யாப்பருங்கல முடையார். எனவே வெண்பா செப்பல் ஓசையைத் தனக்குரிய ஓசையாகக் கொண்டு அமையும் என்பது விளங்கும். செப்பலோசை யாவது அகவிக் கூறாது ஒருவனுக்கு ஒருவன் இயல்பு வகையாலே ஒரு பொருளைக் கட்டுரைக்கும் காலத்திலே எழும் ஓசை என்பர். இத்தை மார்பிலிருந்து மேலெழு கின்ற ஓசை என்கிறார் திரிசிரபுரம் உறையூர் வித்துவான் முத்துவீர உபாத்தியாயர். 'உரத்தெழு செப்பலோசையைத் தழுவி' என்பது அவர் ஆக்கிய முத்துவீரிய நூற்பாப் பகுதி (யாப்பதி. செய்யு. 2).

### மூவகைச் செப்பலோசை

இந்தச் செப்பலோசை ஏந்திசைச் செப்பல், தூங்கி சைச் செப்பல், ஒழுகிசைச் செப்பல் என மூவகைப்படும் என்று கூறி, இவற்றின் இயல்புகளையும் விவரித்துரைக் கிறார் சங்க யாப்புடையார்.

> 'ஏந்திசைச் செப்பலும் தூங்கிசைச் செப்பலும்
> ஒழுகிசைச் செப்பலும் உண்ணும் வெண்பா
> செப்ப லோசை வெண்பா ஆகும்'.

'வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
ஏந்திசைச் செப்பல் என்மனூர் புலவர்'.

'இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
தூங்கிசைச் செப்பல் என்மனூர் புலவர்'.

'வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய பாட்டே ஒழுகிசைச் செப்பல்'.
(யா. வி. பக். 214—216)

**ஏந்திசைச் செப்பலோசை :** வெண்சீர் வெண்டளை கொண்டு வரும் பா.

'யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு'. (குறள் 397)

**தூங்கிசைச் செப்பலோசை :** இயற்சீர் வெண்டளை பெற்று வரும் பா.

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்'. (குறள் 1121)

**ஒழுகிசைச் செப்பலோசை :** வெண்சீர் வெண்டளை இயற்சீர் வெண்டளை இரண்டும் கலந்துவரும் பா.

'கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு'. (குறள் 984)

### வெண்பாவின் ஓசை பற்றி ஒருசாரார் கருத்து

நிற்க, மற்றும் ஒருசார் ஆசிரியர் செப்பல், வெண்கூ, அகவல் என மூவகை ஓசை உடைத்து வெண்பா என்று கூறும் கருத்தையும் யாப்பருங்கல விருத்தியுரைகாரர் மேற்கோளுடன் விளக்கியுள்ளார் (யா. வி. பக். 217-219). அஃதாவது செப்பல் வெண்பா என்பது எழுசீர்க் குறள் வெண்பாவால் நடப்பது என்றும், வெண்கூ வெண்பா என்பது நேரிசை வெண்பா இனவெழுத்து மிக்கிசைப்பது என்றும், அகவலிசையாவது இன்னிசை வெண்பா என்றும் விளக்கம் தருகிறூர்.

### திருக்குறளில் செப்பல் ஓசை

திருக்குறளில் ஏந்திசைச் செப்பலோசை உடையதாய் வருவது 'யாதானு நாடாமால்' எனத் தொடங்கும் 397

ஆம் குறள் ஒன்றே. இயற்சீர் பெற்றுவரும் தூங்கிசைச் செப்பலோசைக் குறள்கள் 110.[3] இங்கே காட்டிய 111 பாடல்களைத்தவிர மற்றவை எல்லாம் இயற்சீரும் வெண் சீரும் கலந்துவரும் ஒழுகிசைச் செப்பலோசைப் பாடல் களாம். 12, 110, 735, 758ஆம் எண்களுக்குரிய நான்கு பாடல்களிலும் இயற்சீர் ஒவ்வொன்றே உள்ளது என் பதும், முதற் குறளில் ஒரே ஒரு வெண்சீரே உள்ளது என்பதும் கவனிக்கத்தக்கன.

# 4. தொடை நயம்

## தொடை

பாட்டில் ஓசைக்கு நிலைக்களமாக அமைவது அடிகளிலும் சீர்களிலும் உள்ள எழுத்துச் சொல் ஆகியவற்றின் ஒத்த அமைப்புநிலை. முக்கியமாக மோனை, எதுகை அமைப்பில் பாவின் கட்டுக்கோப்புப் பொருந்தி வருவதாகும். இந்த அமைப்பினைத் 'தொடை நயம்' என்பர். தொடையாவது இரண்டு அடிகள் இயைந்து வரும் போது தோன்றுவது.

'தொடையே அடி இரண்டு இயையத் தோன்றும்'

என்பது யாப்பருங்கலச் சூத்திரம் (யாப். வி. சூ. 33). இதனையே சற்று விளக்கி உரைப்பது போன்று பின்வரும் காக்கை பாடினியார் சூத்திரம் காணப்படுகிறது.

'தொடையெனப் படுவது அடைவகை தெரியின்
எழுத்தொடு சொற்பொருள் என்றிவை மூன்றின்
நிரல்பட வந்த நெறிமைத் தாகி
அடியோடு அடியிடை யாப்புற நிற்கும்
முடிவினது என்ப முழுதுணர்ந் தோரே.'

தொடை நயம் இல்லாக்கோப்பு 'பா' எனப்படாது. இரண்டடிகளிடையே பொருளுக்கு ஏற்ற ஓசையமைப்பில் பொருத்தமான ஒத்திசைச் சொற்களைத் தக்கவண்ணம் கவிஞர்கள் கோத்தமைப்பதால் பா ஓசையும் பொருளும் சிறந்து விளங்குகிறது. இரண்டு அடிகளிடையே வரும் தொடையமைதியை 'முதற்றொடை' என்றும், அடைமொழியின்றித் 'தொடை' என்றும் வழங்குவர்.

### தொடைப் பயன்

எழுத்தும் அசையும் சீர்களை ஆக்கும். தொடையோ சீர்க்கும் சீர்களினால் அமையும் அடிக்கும் அடியினால் ஆகும் செய்யுளுக்கும் சிறப்புத்தந்து, அச்செய்யுளின் ஓசையின்பத்திற்கு அடிநிலையாய் அமைகின்றது. மோனையும் எதுகையும் பாட்டின் வடிவத்தை வரையறுத்து, நாம் அப் பாட்டை எளிதில் உணர்ந்து கொள்வதற்கு உறுதுணையாக நிற்கும். மோனையால் ஓரடியின் அமைப்பும் சீர்களின் நிலையும் புலப்படும். எதுகையால் அடுத்துவரும் அடிகளின். அமைப்பு தெளிவாகும்.

### அசையும் சீரும் இசையொடு கூட்டி உணர்தல்

'சீர்' என்பது தாள அறுதியைக் குறிப்பது என்று நச்சினார்க்கினியர் மதுரைக் காஞ்சி உரையில் (அடி. 160) குறிப்பிடுகின்றார். தாளத்திற்கு முதல் உறுப்பாகப் பாணி, தூக்கு என்பனவும் உண்டென்றும் தெரிய வருகிறது.

> 'பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
> மாணிழை அரிவை காப்ப
> ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி'

எனவரும் கலித்தொகையின் முதற் பாடற் பகுதியில் வரும் குறிப்பால் இது விளங்கும். இங்கே பாணி என்றது தாளத்தின் முதற்கூறு; தூக்கு என்பது இடைக்கூறு. இறுதிக்கூறுதான் சீர். இவ்வியல்புகளை அப் பாவில்தானே காணும் 'முதற் பாணி', 'வளர் தூக்கு', 'கொண்ட சீர்' என்னும் அடைகளால் நன்கு தெளியலாம். இசைக்குத் தக்கவாறு தாளவறுதியை அடிகளில் வரும் சீர்கள் கொண்டமையும் தன்மையை உரிய ஓசையுடன் படித்து உணரலாம்.[4]

> 'அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
> வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே'
>
> (தொல். செய்யு. 11)

எனத் தொல்காப்பியர் சீர்களை இசையொடு கூட்டி உணர வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். இவ்வாறு ஓசையொடு சேர்த்து உணர்தல் பயிற்சியுடைய வல்லார்க்கே இயல்வதாகும். "பெரிதும் எஃகு செவியும் நுண்ணுணர்

வும் உடையார்க்கன்றி உணரலாகா" எனப் பேராசிரியர் இச் சூத்திர உரையில் கூறியுள்ளமையும் கவனிக்கத்தக்க தாகும்.

இசைக்கு ஏற்பத் தாளவரையறை செய்து பாடுதலை 'ஒத்தறுத்துப் பாடுதல்' என்பர்.

'கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலும்'
(பெரியபுரா. திருஞான. 103)

என்றும்,

'மைந்நிறைந்த மிடற்றானை மடையில் வாளைகள் பாய
என்னும் வாக்கால்
கைந்நிறைந்த ஒத்தறுத்துக் கலைப்பதிகம்
கவுணியர்கோன் பாடுங்காலை'
(பெரியபுரா. திருஞான. 102)

என்றும்,

'எடுத்ததிருப் பதிகத்தின் இசைதிருத் தாளத்தினால்
இசைய ஒத்தி
அடுத்த நடைபெறப் பாடி ஆர்வமுற வணங்கி'
(பெரியபுரா. திருஞான. 108)

என்றும் திருஞானசம்பந்தர் திருப்பதிகம் பாடிய முறையைச் சேக்கிழார் பெருமான் எடுத்துக்கூறுவது பாடலைப் படிக்கவேண்டும் முறையினை அறிவுறுத்துவதாகும்.

## முதற்றொடை ஐந்து

தொடைகள் முக்கியமாக அடிகளுக்குள்ளே ஐந்து வகைப்பட அமையும். அவையாவன மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்பனவாம். இவற்றுள் முதல் நான்கையுமே தொல்காப்பியர்,

'மோனை எதுகை முரணே இயைபென
நானெறி மரபின் தொடைவகை என்ப'
(தொல். செய்யு. 88)

என்று உரைக்கின்றார். இதனால் மோனை, எதுகை, முரண், இயைபு என்னும் நான்கும் ஆன்றோர் ஆட்சி மிகுதியும் உடைய என்பது தெரியவரும். அளபெடைத் தொடை

அத்துணைச் சிறந்ததன்று என்பது அவர் கருத்து. இதனால் அவர் அளபெடைத் தொடைபற்றிய செய்தியை அடுத்துத் தனிப்பட,

'அளபெடை தலைப்பெய ஐந்து மாகும்'
(தொல். செய்யு. 89)

என்று குறிப்பிடுகின்றார். அளபெடை ஓசையமைப்புப் பற்றியதே யன்றித் தனியெழுத்தாகக் கொள்ளப்படும் தகுதி படைத்த தன்று. இது செய்யுட்களில் ஓசை குன்ற வருமிடத்து அதனை நிரப்ப வழுவமைத்துக்கொண்ட ஒரு சார்பெழுத்தே யாகும். ஏற்கெனவே இருக்கும் எழுத்தின் ஓசை நீட்சியே அளபெடையாதலின் எழுத்து ஒப்புமை ஏற்கெனவே அளபெடை வருமிடங்களில் இருக்குமாயினும், ஓசைச் சிறப்புக் கருதி அளபெடைத் தொடை என்பது தனியாகவும் வகுக்கப் பெற்றதாதல் வேண்டும்.

# 5. தொடை வகைகள்

## தொடை விகற்பம்

அடிகளிடையே வரும் தொடையமைதி இங்ஙனமாக, ஒவ்வோர் அடியிலும் வரும் சீர்களிடையிலும் மோனை, எதுகை முதலிய தொடையமைதி கொள்ளப்படும். நாற் சீர் கொண்ட அடிகளில்தான் சீர்களிடை அமையும் தொடை நயம் சிறப்புற விளங்கும். ஓரடியில் சீர்களிலே வரும் தொடையமைதியைத் 'தொடை விகற்பம்' என்றும், 'விகற்பத் தொடை' என்றும், 'உறழ்ச்சித் தொடை' என்றும் கூறுவர்.[5] இவற்றைத் 'தொடைவகை' என வழங்குதலும் உண்டு. அவை முக்கியமாக இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என ஏழு வகைப்படும் என்று யாப்பருங்கல விருத்தி, யாப்பருங் கலக் காரிகை முதலிய பிற்கால யாப்பியல் நூல்கள் பகுத் துரைக்கின்றன. எதுகை முதலிய ஐந்தனுள் ஒவ்வொன் றும் அடிகளிடை ஒன்றும் சீர்களிடை ஏழும் ஆக எட்டுப் பாகுபாடுடையனவாக வரும். உதாரணமாக, மோனையை எடுத்துக்கொண்டால் அடிமோனை, இணைமோனை, பொழிப்பு மோனை, ஒரூஉ மோனை, கூழைமோனை, மேற்கது வாய் மோனை, கீழ்க்கதுவாய் மோனை, முற்றுமோனை என எட்டு வகைப்பட வரும். இவ்வாறே மற்றும் எதுகை, முரண், இயைபு, அளபெடை ஆகியவற்றிற்கும் எட்டெட் டுப் பாகுபாடு வரும் என்பது அறியத்தக்கது. இதனையே,

> 'மோனை யெதுகை முரணியை பளபெடை
> பாதம் இணையே பொழிப்போ டொரூஉத்தொடை
> கூழை கதுவாய் மிசைய தூஉம் கீழ தூஉம்
> சீரிய முற் றெடு சிவணுமா ரவையே' (யாப். வி. சூ. 34)

எனவரும் யாப்பருங்கல விருத்திச் சூத்திரம் தெளிவுபட உரைக்கின்றது. இவற்றைப் பின்வருமாறு அடைவுமுறை செய்து காட்டலாம்.

| முதற்றொடை [தொடை] | தொடை விகற்பம் [உறழ்ச்சித்தொடை] | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| | இணை | பொழிப்பு | கூழை | ஒரூஉ | மேற்கதுவாய் | கீழ்க்கதுவாய் | முற்று |
| 1. மோனை | | | | | | | |
| 2. எதுகை | | | | | | | |
| 3. முரண் | | | | | | | |
| 4. இயைபு | | | | | | | |
| 5. அளபெடை | | | | | | | |

இவை தவிரச் செந்தொடை, நிரனிறைத் தொடை, இரட்டைத்தொடை, அந்தாதித்தொடை, விட்டிசைத் தொடை என்னும் அமைப்புக்களும் இலக்கண நூல்களில் விவரிக்கப்பட்டுள்ளன.

## பொழிப்பும் ஒரூஉவும்

ஆசிரியர் தொல்காப்பியர் தம் பெருநூலில் பொழிப்பு, ஒரூஉ என்னும் இரண்டனையுமே அடிகளின் சீர்களில் அமையும் தொடை விகற்பமாகக் கொண்டனர். முதற் சீரிலும் மூன்றாம் சீரிலும் அமையும் பொழிப்புத் தொடையும், முதற் சீரிலும் நான்காம் சீரிலும் அமையும் ஒரூஉத் தொடையுமே பழமையான தொடைகள். பாடலின் ஓசையமைதிக்கு இவை மிக இன்றியமையாதன.

'பொழிப்பும் ஒரூஉவும் செந்தொடை மரபும்
அமைத்தனர் தெரியின் அவையுமார் உளவே'
(தொல். செய்யு. 90)

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் இது விளங்கும். ஆதலால், இணை, கூழை முதலிய அமைப்புக்கள் பிற்கால வளர்ச்சி நிலையில் பிறந்தனவாகும். இப் பிற்கால வழக்குகளைப் பேராசிரியர், 'மெய்பெறு மரபின் தொடைவகை தாமே' என்னும் செய்யுளியல் சூத்திரவுரையிலே (தொல். செய்யு. சூ. 101) தெளிவுற விளக்கியுள்ளார்:

> "அவை இணை, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், கடையிணை, கடைக்கூழை, இடைப்புணர், பின் எனச் சொல்லுப. பிறவும் வேறுபடுத்துக் கூறுவார் கூறுவனவெல்லாம் இதனுனே தழீஇக் கொள்ளப்படும்" (தொல். செய்யு. சூ. 101 உரை)

என்பது அவர் தரும் விளக்கம்.

### நிரனிறைத் தொடையும் இரட்டைத் தொடையும்

ஆசிரியர் தொல்காப்பியர் தம் நூலுள் கூறும் நிரனிறைத் தொடையும் இரட்டைத் தொடையும் முற்கூறிய எதுகை, மோனை முதலியவற்றுள் அடங்குவனவாம்.

> 'நிரனிறுத் தமைத்தலும் இரட்டை யாப்பும்
> மொழிந்தவற் றியலான் முற்றும் என்ப'
> (தொல். செய்யு. 91)

என்பது தொல்காப்பியர் விதிச் சூத்திரம். இவற்றுள் நிரனிறையோ சொல்-பொருள் வகையால் தொடுக்கும் தொடையாம். ஒரு பாட்டின் முதலடியில் அமைந்துள்ள அடைவிலேயே பொருத்தமான சொற்பொருள்கள் அடுத்த அடியிலும் நிரல்பட அமைவதாக வரும் அமைப்பு. இரட்டைத் தொடை என்பது முதலில் வந்த சீரே நான்கு முறை மடித்துவரும் நிலையது. எனவே, ஓசை நயம் கருதுங்கால் இவை முற்கூறிய மோனை முதலியனவாக அடங்கும்.

### மோனையும் எதுகையும்

மோனையாவது முதல் எழுத்து ஒப்புமை. ஒரு பாடலில் முதலடியின் முதலில் வந்த எழுத்தே மற்றைய அடிகளின் முதலிலும் வந்தால் அடிமோனைத் தொடை என்பர். இவ்வாறே சீர்களின் முதல் எழுத்து ஒப்புமை

நோக்கி இணை, பொழிப்பு முதலிய வகைமை ஏழனுள் அடக்கிக் காணுதல் வேண்டும். இணை, பொழிப்பு முதலி யன சீர்மோனை எனப்படும்.

> 'அடிதொறும் தலையெழுத்து ஒப்பது மோனை'.
>
> 'அஃதொழித்து ஒன்றின் எதுகை யாகும்'.
>
> 'ஆயிரு தொடைக்கும் கிளையெழுத்து உரிய'
>
> (தொல். செய்யு. 92, 93, 94)

எனவரும் தொல்காப்பியச் சூத்திரங்கள் மோனை எதுகைத் தொடைகளின் இயல்புகளை உணர்த்துகின்றன. இவற்றுள் தொடை என்பது சிறப்பாக எதுகையையே குறிக்கும் என்பது வீரசோழிய உரைகாரர் கொள்கை. "எதுகை எனினும் தொடை எனினும் ஒக்கும்" (வீரசோ. யாப்பதி. 5. உரை) என்னும் அவர் கூற்று இதனை மெய்ப்பிக்கும்.

### எதுகைத் தொடைபற்றிய சில மரபுகள்

எதுகையாவது மேற்கூறிய வண்ணமே அடிகளிலும் சீர்களிலும் இரண்டாம் எழுத்து ஒத்துவருவது. என்ருலும் முதலெழுத்து எல்லாம் தம்முள் ஒத்த அளவினதாய், அஃதாவது குறிலாயின் குறிலும் நெடிலாயின் நெடிலும் பெற்று வருதலாம். இரண்டாம் எழுத்து ஒத்து வருதல் பற்றி யாப்பருங்கல விருத்தியுரைகாரர் தரும் விளக்கமும் கூர்ந்து சிந்திக்கத்தக்கது. அது வருமாறு:

> "இரண்டாம் எழுத்து ஒன்றிவரினும் முதல் எழுத்தெல்லாம் தம்முள் ஒத்த அளவினதாய் வந்து, பட்டென்பதற்குக் கட்டென்பதல்லது காட்டென்பது எதுகையாகாது. காட்டு என்பதற்குப் பாட்டு என்பதல்லது பட்டென்பது எதுகை யாகாது. அரம் என்பதற்குப் பரம் என்பதல்லது பாரம் என்பது எதுகையாகாது; பாரம் என்பதற்குக் காரம் என்பதல்லது கரம் என்பது எதுகையாகாது."
>
> (யாப். வி. பக். 132)

இவ் விளக்கத்தால், எதுகைத் தொடையை நோக்கும் போது முதல் எழுத்து அளவொத்து வருதலும் முக்கிய மாகக் கவனிக்கத் தக்கதென்பது தெரியவரும்.

'முதலெழுத் தொன்றின் மோனை, எதுகை
முதலெழுத் தளவோ டொத்து முதலா
அஃதொழித் தொன்றின் ஆகும் என்ப
இவ்விரு தொடைக்கும் கிளையெழுத்துரிய'
(யாப். வி. பக். 144)

என்பது பல்காயனார் தரும் மோனை எதுகை விளக்கம்.

'அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு'. (குறள் 288)

'நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு'. (குறள் 784)

மேலே காட்டிய குறள்களின் அமைப்பை நோக்கு வோமானால் முதல் குறளின் இரண்டடியும் ஒரே எதுகை பெற்றுவந்துள்ளமையும், அடுத்த குறளின் இரண்டடியும் வெவ்வேறு எதுகை பெற்றுள்ளமையும் காணலாகும். அதோடு முதற் குறளில் முதற்சீர் முற்றும் எதுகையாய் வந்து, ஈரடிகளிலும் முதலெழுத்துக் குறிலாக அளவொத்து அமைந்துள்ளன. மற்றும் ஈரடிகளிலும் பொழிப்பு வழி மோனையும் வந்துள்ளது. இரண்டாவது குறளிலோ முத லடியில் ககர-உகரமும் (கு), இரண்டாம் அடியில் றகர ஒற்றும் (ற்) வந்து வேறுபட்ட எதுகைகளாய் விட்டன. மேலும், ஈரடிகளிலும் முதல் எழுத்துக்கள் குறிலும் நெடிலு மாக வந்து தம்முள் மாறுபட்டும் உள்ளன.

**ஒரு விகற்பம்-இரு விகற்பம்**

ஈரடியும் ஒரே எதுகை பெற்றுவந்த குறட்பாவை ஒரு விகற்பம் என்றும், ஈரடியும் வெவ்வேறு எதுகை பெற்று வருவதனை இருவிகற்பம் என்றும் கூறுவர். திருக்குறள் 1330 பாடல்களிலும் ஒரு விகற்பாய்வரும் குறள்களே பெரும் பான்மை. இருவிகற்பமாய்வரும் குறள்களின் எண்ணிக்கை 431.[6]

இங்கே எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ள 'நகுதற் பொருட்டன்று நட்டல்' என்னும் இருவிகற்பக் குறட்பா (784) வழிமோனை வழியெதுகை நயம்பட அமைந்துள்ளமை கவனிக்கத்தக்கது. முதலடியில் 'நட்டல்' எனப் பொழிப்பு மோனையும், 'மிகுதிக்கண்' என ஒரூஉ எதுகையும் வந்துள்ளன.[7] அதுமட்டுமன்றி நான்காம் சீராகிய மிகுதிக் கண் என்பதற்கு ஏற்புடைய மோனையாக ஐந்தாம் சீரில்

வரும் 'மேற்சென்று' என்பது அமைந்துள்ளது. இவ் வகை அமைப்பை நோக்கும்போது, ஓரடி முக்காலாகிய குறள் வெண்பா, இருவிகற்ப அமைப்பில் முக்காலும் ஒன்றுமாக மாறி அமைந்துள்ளது என்றும் கருதலாம்.

முதலடியிலே ஒரூஉ எதுகையில் அழுத்தம் பெறுவது மட்டுமன்றி அடுத்த அடியுடன் ஐந்தாம் சீரில் நான்காம் சீர்க்கு ஏற்ற மோனைத் தொடை நயமும் உள்ளது.[8] இங்கே அடியெதுகையின்றி இருவிகற்பமாய் வந்தபோதிலும் பாட்டின் ஓசையமைதி வேறுவகையில் ஈடுசெய்யப் பட்டிருக்கிறது.

> 'துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை'. (குறள் 42)

இந்த இருவிகற்பக் குறட்பாவில் முதற்சீர்க்கு ஏற்ற தலையாகு எதுகை நான்காம் சீரில் அமைந்திருப்பதோடு ஐந்து ஆறும் சீர்கள் நான்காம் சீர்க்கு ஏற்றமோனை நயம் பெற்றுள்ளன.[9]

> 'இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
> சீறின் சிறுகும் திரு'. (குறள் 568)

இக் குறளின் முதலடி முந்திய பாவிற்போலவே நான் காம் சீரில் தலையாகு எதுகை பெற்றுள்ளது. நான்காம் சீர்க்கு ஏற்ற மோனை அமைப்பினை ஐந்து, ஆறு, ஏழாம் சீர்களும் பெற்றுள்ளமை கவனிக்கத்தக்கது.[10] இவ்வாறு நாற்சீரடி அமைந்திருப்பின் முற்று மோனை என்பர். அத்தகைய முற்று மோனை நயம்,

> 'சினத்தாற்றிச் சீறின் சிறுகும் திரு'

எனவரும் சீர்களிலும் உள்ளமை ஊன்றிக் கவனிக்கத் தக்கது.

இங்ஙனமாகவே திருக்குறளில் வரும் இருவிகற்ப வெண்பாக்களில் பெரும்பான்மையும் உள்ளன. ஒரு விகற்பாயும் உறழ்ச்சித் தொடை பெற்றும் வரும் குறள் களைப் போன்ற நயம் இரு விகற்பப் பாடல்களில் வேறு வகையில் அமைதல் ஓசையறுத்து வாசிப்பார்க்கு நன்கு புலனும். இருவிகற்பக் குறட்பாக்களில் பெரும்பாலனவும்

ஒரூஉ எதுகை பெற்றே வந்துள்ளன.[11] தவிரவும், நான் காம் சீர்க்கு ஏற்ற மோனை அமைதி பின்வரும் ஐந்து ஆறு ஏழாம் சீர்களில் வருமாறும் பாடல்களின் அமைப்பு உள்ளமை மேலே குறிக்கப் பெற்றது.

### வீரமாமுனிவரின் புதுமைக் கருத்து

வீரமாமுனிவர் (Constant Joseph Beschi, S. J.) தமது 'செந்தமிழ்' என்னும் நூலில்,[12] திருக்குறள் பாடல்கள் பல முதலடி முச்சீராயும் இரண்டாம்அடி நாற்சீராயும் அமைந் துள்ளன என்று எடுத்துக்காட்டியுள்ளார்.[13] இவர் தம் முடைய கூற்றுக்கு எடுத்துக்காட்டாகத் திருக்குறள் 34, 453ஆம் பாடல்களைப் பின்வருமாறு அமைத்துக் காட்டி யுள்ளார்.

'மனத்துக்கண்-மாசில-னாத
லனைத்தற-னாகுல-நீர-பிற'. (குறள் 34)

'மனத்தானா-மாந்தர்க்-குணர்ச்சி
யினத்தானா-மின்னா-னெனப்படும்-சொல்'.
(குறள் 453)

இவ்விரு பாடல்களிலும் முதற்சீர்க்கு ஏற்ற எதுகை-யமைப்பை நான்காம் சீர் பெற்று, முதலடி ஒரூஉ எதுகை யாய் அமைதல் கவனிக்கத்தகும். ஆகவே, பெரும் பான்மையும் ஒரூஉ் எதுகை பெற்று வந்தவற்றையே வீரமாமுனிவர் முச்சீரடி, நாற்சீரடியாய் அமையும் குறள்-கள் என்று கருதுகிறார் என்பது வெளிப்படை.[14]

வீரமாமுனிவரின் கருத்தை அடிப்படையாகக்கொண்டு பேராசிரியர் கியூபர் (Prof. F. B. J. Kuiper, Kern Institute, Leiden, Netherlands) எழுதியுள்ள 'திருக்குறளில் வெண்பா அமைப்பு' (The Venpa Metre in the Tirukkural) என்னும் கட்டுரையில் பல எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கம் தரு கிறார்.[15] அறத்துப்பாலில் உள்ள 380 பாடல்களுள் 119 பாடல்களில் மூச்சீரடி-நாற்சீரடி அமைப்புடைய பாடல்கள் உள்ளன என்றும், எனவே இவை 2:1 என்னும் விழுக்காடாகும் என்றும் அக் கட்டுரையில் குறிப்பிட்டுள் ளார். திருக்குறளின் குறட்பா அமைப்பில் இம் முறை பல

பாடல்களில் காணப்படுவதனுல், இ∴து திருவள்ளுவரின் தனிப்பட்ட குறட்பா-அமைப்பு முறையாகும் என்றும், இவ்வாறு இக்காலப் பதிப்பாளர்கள் குறட்பாவை வகைப் படுத்திப் பதிப்பிக்க வேண்டும் என்றும் இவர் தம் விருப் பத்தையும் அக் கட்டுரையில் தெரிவித்துள்ளார்.

**மோனை எதுகைகளில் போலி எழுத்து அமைதல்**

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்' (குறள் 50)

என வரும் பாடல், முதலெழுத்து அளவொத்து வாராமை யினுல் இருவிகற்பம் பெற்றுள்ளது என்று எண்ண நேரும். ஆனுல், பண்டை நாளில் 'ஐ' என்னும் நெட்டெழுத்தோசை அகர உயிரும் யகர மெய்யும் சேர்ந்துவந்து (அய்) போலி எழுத்தாகப் பயன்பட்ட வழக்கைக் கருதினுல், மேற் குறித்த பாடலின் முதலில் உள்ள'வை' என்பது 'வய்' எனப் படிக்கப்படுதல் வேண்டும்.

'வய்யத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்' (குறள் 50)

என வரும்பொழுது 'வய்', 'தெய்' என்பன எதுகை நயம் ஒத்து இப் பாடல் ஒரு விகற்பமாய் அமைதல் விளங்கும்.

இவ் வகை அமைப்பு சீர் எதுகையிலும் திருக்குறளிற் காணப்படுகிறது.

'செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது' (குறள் 101)

என்னும் இப் பாடலிலும் நான்காம் சீர் போலி எழுத்தால் 'வய்யகமும்' என எழுதப்பட்டால்தான் ஒரூஉ எதுகை வாய்க்கும். இருவிகற்பப் பாடல்கள் ஒரூஉ எதுகையும் பின்வரும் சீர்களுடன் வழிமோனை நயமும் உடையவாய் வருதல் பற்றி முன்பு விரிவாகக் கூறப்பட்டது. இம் முறை களை யெல்லாம் கவனிப்போமாளுல் மேற்குறித்த பாடல்,

'செய்யாமற் செய்த உதவிக்கு வய்யகமும்
வானகமும் ஆற்றல் அரிது' (குறள் 101)

என்று போலி எழுத்தால் எழுதப்படுதலே தகும் என்பது தெளிவாம்.

இங்ஙனமாக, ஐகாரம் போலியாக வந்த குறட்பாக்கள் வேறுசிலவும் உள.

‘ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு’. (குறள் 354)

‘ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்’. (குறள் 702)

‘கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்’. (குறள் 774)

‘கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்’. (குறள் 925)

இப் பாடல்களின் முதலடியில் வரும் ஐகாரத்தை ‘அய்’ எனப் போலியாகக் கொள்ளவேண்டும் என்பதும், அவ்வாறு கொள்ளுமிடத்து இவையெல்லாம் ஒருவிகற்பமாய் அமைந்து காணப்படுகின்றன என்பதும் அறியத்தகும்.

‘பொய்படு மொன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்’ (குறள் 836)

என்ற பாடலில், ‘கையறியாப்’ எனவரும் நான்காம் சீரினை ‘கய்யறியாப்’ என்று அமைத்தால்தான் ஒரூஉ எதுகை நயம் வாய்க்கும்.

‘மைய லொருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்’ (குறள் 838)

என வரும் பாடலின் ஈரடிகளிலும் ‘மை’, ‘கை’ என நெடில் ஒத்து வந்துள்ளமையால் இங்குப் போலி எழுத்துக் கொள்ளவேண்டும் நிலைமையின்று; கொள்ளினும் பாடலின் ஓசை பிழைபடாது.

போலி எழுத்தை மேற்கொண்டு மேலும் சில குறள்களில் வரும் ஐகாரங்களைப் படித்தால், பாடலடிகளில் எதுகை-மோனை ஒருமைப்பாடு அமைதல் புலனாகும். பின்வரும் பாடல்களில் உள்ள ஐகாரத் தொடக்கமான எதுகை-மோனைச் சொற்களைக் கூர்ந்து நோக்கி இவ்வுண்மையை நாம் தெளியலாம்.

‘தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை’. (குறள் 43)

'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஞற்றுங் கொல்லோ உலகு'. (குறள் 211)

'வஞ்ச மனத்தான் படிற்ருெழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்'. (குறள் 271)

'வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு'. (குறள் 632)

'இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து'. (குறள் 879)

'அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு
ஐந்துசால் பூன்றிய தூண்'. (குறள் 983)

'வைத்தான் வாய்சான்ற பெரும்பொருள் அஃதுண்ணுன்
செத்தான் செயக்கிடந்தது இல்'. (குறள் 1001)

### போலி எழுத்தின் வரலாறு

அகர-யகரங்கள் (அய்) ஐகாரத்திற்குப் போலி எழுத்தாக அமைதலைத் தொல்காப்பியர் தம் பெருநூலுள் விளக்கியுள்ளார்.

'அகர இகரம் ஐகாரம் ஆகும்'. (தொல். எழுத். 54)

'அகர உகரம் ஔகாரம் ஆகும்' (தொல். எழுத். 55)

என வரும் இருசூத்திரங்களால் 'ஐ', 'ஔ' என்பன வற்றிற்குப் போலியாக அஇ, அஉ என்பன வரும் என்று அவர் காலத்து வழக்கு முறையைப் புலப்படுத்துகின்ருர் மொழி மரபியலில். அடுத்து,

'அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்'
(தொல். எழுத். 56)

என வரும் சூத்திரத்தால், அகரத்தின் பின் இகரமேயன்றி யகரமாகிய புள்ளி வந்தாலும் (அய்) 'ஐ' எனப்பட்ட நெட்டெழுத்தின் வடிவம் தோன்றும் என்றும் விதித்துள்ளார். ஆனல், ஔகாரத்திற்கு 'அவ்' என அகர வகரம் வருதலை (அவ்) ஆசிரியர் தொல்காப்பியர் விதிக்கவில்லை. எனவே 'அய்' என ஐகாரத்திற்குப் போலி எழுத்து வழங்கியது ஆசிரியர் தொல்காப்பியர் காலத்து வழக்கு என்பது தெளிவாம். ஆனல், தொல்காப்பிய உரையாசிரியர்

காலத்திலோ அகரவகரம், அதாவது 'அவ்' என்பது 'ஔ' என்னும் நெட்டெழுத்திற்குப் போலியாகக் கொள்ளப்படும் வழக்கு பெருவரவிற்றாயிற்று. இதனையும் அமைத்துக் கொள்ளும் பொருட்டாக,

'அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்'
(தொல். எழுத்து. 56)

என்னும் சூத்திரவுரையில், இளம்பூரணரும், அவரை யடுத்து நச்சினார்க்கினியரும், "மெய்பெற என்றதனான் அகரத்தின் பின்னர் உகரமேயன்றி வகரப்புள்ளியும் ஔகாரம் போல வரும் என்பது கொள்க. ஔவை-அவ்வை என வரும்" என்று விளக்கவுரை தருவாராயினர்.

இவ்வுரையாசிரியர்களின் கொள்கையையும் மேற் கொண்டு பிற்காலத்து ஆசிரியருள் ஒருசாரார், மொழி களில் எல்லா இடத்தும் ஐகாரத்திற்கு 'அய்' என்பது வரும் என்றும், ஔகாரத்திற்கு 'அவ்' என்பது வரும் என்றும் கூறியுள்ளனர்.

'அகர வகரத்தி னேடியைந் தௌவாம் யகரத்தினே
டகரம் இயைந் தையாகும்' (வீரசோ. சந்தி. 3)

என்கிறார் வீரசோழியம் தந்த புத்தமித்திரனார். குணவீர பண்டிதரும் தம் நேமிநாத இலக்கணத்துள்,

'ஆதியுயிர் வவ்வியையின் ஔவாம் அஃதன்றி
நீதியினால் யவ்வியையின் ஐயாகும்' (நேமி. எழுத். 9)

என்று குறிப்பிடுகின்றார்.

நன்னூல் தந்த பவணந்தி முனிவர் இவ்வாறு வருதலைப் போலியெழுத்து என்று பெயரிட்டு,

'அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன' (நன். 125)

என்னும் சூத்திரத்து விளக்கியுள்ளார். இச் சூத்திரத்திலே, 'ஒத்திசைக்கும்', 'ஓரன்ன' என உவமவுருபு கொடுத்துக் கூறி, இவை போலியெழுத்துக்களே என்பதை அவர் தெளிவாக்குகின்றமையும் அறியத்தக்கது.

### போலி எழுத்தால் செய்யுளுக்கு வரும்பயன்

இவ்வாறு போலியாக ஈரெழுத்துக் கொள்ளுதலின் பயன் செய்யுள்களில் எதுகை மாறுபாடு நேராமல் அமைத்துக் கோடலே என்று பிரயோகவிவேகநூலார் ஏதுக்களுடன் விளக்கிக் கூறுகின்றார். "ஐகார ஔகாரங் களை ஈரெழுத்தாகக் கொள்ளாக்கால் செய்யுளியலுட் கொண்ட எதுகையொடு மாறுபடவரும் எனக் கொள்க" (பிரயோக. 5 உரை) என்பது பிரயோக விவேக நூலார் கூற்று. தவிரவும், அவர்தம் உரையுள், "தொல்காப்பியர் எதுகை நோக்கி ஈரெழுத்தியைந்த ஐகார ஔகாரங்களும் கொண்டார்....போலி எழுத்து என்பார் இலக்கணப்போலி ஒப்பில்போலி போல எழுத்துப் போலியும் கைக்கொண்டு எதுகை கொள்வர் என்க" (பிரயோக. 5 உரை) என்றும் கூறியுள்ளார். இங்ஙனமாக, இலக்கண நூலார் தரும் கருத்துக்களுக்குக் காரணம் செய்யுட்களில் ஐகாரத்திற்கு 'அய்' என்பதும், ஔகாரத்திற்கு 'அவ்' என்பதும் எதுகையாக வருதலை நோக்கியமையேயாகும்.

'அம்முன் இகரம் யகரம் என்றிவை' என்று நன்னூலில் வரும் எழுத்துப் போலிச் சூத்திரத்தின் உரையில் சங்கரநமச்சிவாயர் இரண்டு திருக்குறள்களையே போலியெழுத்திற்கு உதாரணமாகத் தந்துள்ளார்.

> 'கய்வேல் களிற்றொடு போக்கி வருபவன்
> மெய்வேல் பறியா நகும்'. (குறள் 774)
>
> 'அவ்விய நெஞ்சத்தா னுக்கமுஞ் செவ்வியான்
> கேடு நினைக்கப் படும்'. (குறள் 169)

"இச்செய்யுட்கள் தொடை நோக்கி ஐகார ஔகாரம் நின்ற நிலைக்களத்துப் போலி வந்தவாறு காண்க" (நன். 125 உரை) என்று அவர் விளக்கவுரையும் எழுதியுள்ளார். இதனால் போலி எழுத்துக்களின் பயன் தொடை நயம் வாய்ப்பதற்கே யாகும் என்பது விளங்கும்.[16]

### திருக்குறளில் ஔ-அவ் போலி எழுத்து

திருக்குறளில் ஐகாரத்திற்கு 'அய்' என்பது போலியாக நின்று எதுகை நயம் ஊட்டியது போலவே,

ஔகாரத்திற்கு 'அவ்' என்பது வந்தும் எதுகையிலே ஓசை ஒப்புமை கொள்ளவரும் என்பது சங்கரநமச்சிவாயர் காட்டிய,

'அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்' (குறள் 169)

என்னும் குறளுதாரணத்தால் தெரியவரும். இது போன்று வேறுசில குறட்பாடல்களும் உள :

'அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்'. (குறள் 167)

'கவ்வையாற் கவ்விது காமம் அதுவின்றேல்
தவ்வென்னுந் தன்மை இழந்து'. (குறள் 1144)

இப்பாடல்களில் 'அவ்' என்பது ஔகாரத்தின் பயத்த வாய் வருதல் காணலாம். சீரெதுகையிலும் இவ் வகை ஒப்புமை உண்மையை,

'நெய்யா லெரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்' (குறள் 1148)

என்னும் பாடலில் காணலாம். இங்கே நான்காம் சீராகிய 'கௌவையால்' என்பது போலி எழுத்திட்டு, 'கவ்வை யால்' என்று எழுதப்பட்டால்தான் ஒரூஉ எதுகை வாய்த் துப் பாடலின் ஓசை சிறக்கும். ஆகவே, இப் பாடலை,

'நெய்யா லெரிநுதுப்பேம் என்றற்றால் கவ்வையால்
காமம் நுதுப்பேம் எனல்' (குறள் 1148)

என்று கொள்ளுதலே தகும்.

### ஆய்த ஓசையும் யகரமும்

ஐகாரத்திற்கு 'அய்' போலியாக அமைதல் ஒரு பாலாக, 'அஃ' என்பதும் போலியாக வருவது உண்டு. பின் வரும் யாப்பருங்கல விருத்தியுரைப் பகுதி இதற்குச் சான்றாம்:

"சார்பிற் றோன்றும் தன்மைய (யா. வி. சூ. 2) என்று மிகுத்துச் சொல்லியவதனால் அகரத்தோடு யகரவொற்று வந்தும், ஆய் தம் வந்தும் ஐகாரத்தின் பயத்தவாய் நிற்கும்; அகரத்தோடு

உகரம் வந்தும் வகர-ஒற்று வந்தும் ஔகாரத்தின் பயத்த வாய் நிற்கும். என்னை ?

> ‘ஆய்தமும் யவ்வும் அவ்வொடுவரினே
> ஐயென் னெழுத்தொடு மெய்பெறத் தோன்றும்’.
>
> ‘உவ்வொடு வவ்வரின் ஔவியல் பாகும்’

என்றார் அவிநயனார்’’ (யா. வி. உரை பக். 30)

என்று எடுத்துக்கூறி இவ்வோசை வரலாற்றை விளக்கப் பல எடுத்துக்காட்டுகளும் தந்துள்ளார்.

இதனால் ‘அ.:’ என்பது ‘அய்’ என்னும் ஓசை பெறுதற் குரிய முதலெழுத்துப் பொருத்தம் உடையதாகும் என்பது புலனாகிறது. எனவே, யகர மெய்யின் (ய்) ஓசையும் ஆய்தமும் ஒன்றற் கொன்று ஒத்துவந்து ஓசையை நிறைவு செய்யும் இடங்களும் தொடையமைப்பில் காணலாகும்.

> ‘செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
> எ.:கதனிற் கூரியது இல்’. (குறள் 759)

இங்கே இரண்டாம் அடியில் வரும் ஆய்தம் யகர-ஓசைக்கு ஈடாக நின்று எதுகைத் தொடை அமைப்பை நிறைவு செய்கிறது. ஆய்தவெழுத்தின் வரலாற்றை நோக்கு மிடத்து அது யகரமாக ஒலி மாறுதல் பெற்றுவந் துள்ளமை தெரிய வருகிறது. பேராசிரியர் மு. இராக வையங்கார் அவர்கள் செந்தமிழ்ப் பத்திரிகையில் எழுதிய ‘ஆய்தவோசை’ என்னும் கட்டுரை இவ்வமைப்பை விளங்க உரைக்கின்றது.[17]

## உயிரெதுகை

எதுகையைப் பொறுத்தவரை முதலடியின் முதற்சீரில் வந்த இரண்டாம் எழுத்தே அடுத்த அடியிலும் இரண்டாம் எழுத்தாக வருதல்தான் தக்கது. அங்ஙனமன்றி வெவ் வேறு வகையான ஒப்புமை கருதியும் எதுகை கொள்ளப் படுதல் உண்டு. ஒருசாரார் இரண்டாம் எழுத்தின் மேல் ஏறிய உயிர் ஒத்துவந்தால் உயிரெதுகை என்பர். மற்றும் மூன்றாம் எழுத்து ஒன்றிவரும் எதுகையும் கொள் கின்றனர்.

> ‘நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
> வானின் றமையா தொழுக்கு’. (குறள் 20)

இப் பாடலில் எதுகையாக ரி-ணி என ரகர ணகரக் குற்றெழுத்து உயிர்மெய்கள் ஒத்துவந்துள. இவற்றுள் மெய்யெழுத்துக்கள் வெவ்வேறு இனமாயினும், மெய்மேல் ஏறிவரும் உயிராகிய 'இ' என்னும் குறில் ஒத்துள்ளமையால், இதனை 'உயிரெதுகை' என்று வழங்குவர்.

பேராசிரியர் தமது தொல்காப்பிய உரையில் (தொல். செய்யு. 94 உரை), இவ்வெதுகைபற்றிக் கூறுவதாவது :

> "'இமிழ்கண் முழவின் இன்சீர் வாமனைப்
> பயிரவன் போலவந் திசைப்பவும் தவிரான்'

என்பது உயிரெதுகை. இஃது ஒற்றூர்ந்த உயிர் ஒன்றினமையின் உயிரெதுகை யாயிற்று" என்று விளக்கம் தருகிறார்.

யாப்பருங்கல விருத்தியுரைகாரர்'

> 'இரண்டாம் எழுத்தொன் றியைவதே எதுகை'
> (யாப். வி. சூ. 36)

என்னும் சூத்திரவுரையில், "'இரண்டாமெழுத் தியைவதே யெதுகை' என்னது 'ஒன்று' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னையெனின், ஒருசாராசிரியர் இரண்டாம் எழுத்தின் மேல் ஏறிய உயிர் ஒன்றிவந்தாலும் மூன்றும் எழுத்து ஒன்றி வந்தாலும் எதுகைப்பாற்படுத்து வழங்குவர் என்பது அறிவித்தற்கு எனக் கொள்க" என்று விளக்கம் தந்து,

> 'துளியொடு மயங்கிய தூங்கிருள் நடுநாள்
> அணிகிளர் தாரோய் அருஞ்சுரம் நீந்தி
> வடிவமை யெஃகம் வலவயி னேந்தி
> தனியே வருதி நீயெனின்
> மையிருங் கூந்தல் உய்தலோ அரிதே'

என்னும் பாடலையும் காட்டி, "இஃது இரண்டாம் எழுத்தின் மேலேறிய உயிரொன்றிய எதுகை" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

யாப்பருங்கலக் காரிகை நூலில்தான் உயிரெதுகையை நூலாசிரியரே கொண்டு கூறியிருக்கிறார் :

'..............................உயிர்ஆசு இடையிட்டு
இருக்கும் ஒருசார் இரண்டடி மூன்றும் எழுத்தும் ஒன்றி
நிரக்கும் எதுகை என்றாலும் சிறப்பில நேரிழையே'
(யாப். காரிகை. 41)

என்பது யாப்பருங்கலக் காரிகை விதி. இங்கே ஆசிரியர் உயிரெதுகையும் உளவெனக் காட்டினும் அத்துணைச் சிறப்பில என மொழிகின்றார்.

**திருக்குறளில் உயிரெதுகை**

திருக்குறளிலோ உயிரெதுகை பெற்றுவந்த பாடல்கள் 4 காணப்படுகின்றன.[18] தவிரவும், ஒரூஉ எதுகையாகவும் இவ்வுயிரெதுகை பல குறள்களில் பயின்றுள.[19] எடுத்துக்காட்டாக,

'அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்' (குறள் 168)

எனவரும் இக் குறளில் ஒரூஉ எதுகையாக முதலடியில் உயிரெதுகை வந்துள்ளமை கவனிக்கத்தகும். எனவே, உயிரெதுகையிட்டுப் பாடுதலும் பண்டை வழிவந்த ஒரு மரபெனவே கொள்ளத்தக்கதாகின்றது.

**மூன்றாம் எழுத்தொன்று எதுகை**

'பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்'. (குறள் 292)

இக்குறளில் 'மை' எனவரும் மூன்றாம் எழுத்து ஒத்து வருதல் காணலாம்.[20] மேலும், முன்னர் உயிரெதுகை எனக் கொண்ட பாடல்களில் ஏறத்தாழ செம்பாதி மூன்றாம் எழுத்து ஒன்றி அமைந்துவருதலும் கவனிக்கத் தகும்.[21]

**வருக்கம் நெடில் இன மோனை-எதுகைகள்**

மேலும், மோனை எதுகைக்கு வருக்கமும் நெடிலும் இனமும் வந்தாலும் நீக்கப்படாது மோனையும் எதுகையுமாகக் கொள்ளப்படும். இவற்றை முறையே வருக்க மோனை, வருக்க எதுகை, நெடில் மோனை, நெடில் எதுகை எனவும் வழங்குவர். இனமோனையை வல்லின மோனை, மெல்லின மோனை, இடையின மோனை என்றும் மூவின

மும் தனித்தனிக் கொள்வர் (யாப். வி. பக். 134-137). வருக்க நெடில் இனமோனைகளைக் குறட்பாவில் தொடை விகற்பத்தில் காணலாமே யன்றி முதற்றொடையில் காணு தல் அரிது. எனவே, வருக்க எதுகை, நெடில் எதுகை, இனவெதுகை அமைந்த குறட்பாக்களைக் குறித்து முறை யே காண்போம்.

**வருக்க எதுகை**

> 'கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை'. (குறள் 9)

இங்கே இரண்டாம் எழுத்து ளி-ளை என வருகின்றன. இரண்டும் ளகர வருக்கமாதலின் இதனை ளகரமெய் வருக்க எதுகை என்று கொள்ளவேண்டும்.

> 'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
> பொறுத்தானோ டூர்ந்தா னிடை' (குறள் 37)

என்பது றகரமெய் வருக்க எதுகை. இங்ஙனமாக வருக்க எதுகை பெற்றுவந்த குறள்கள் 92 உள்ளன.[22]

**நெடில் எதுகை**

> 'சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே உலகு'. (குறள் 27)

இப் பாட்டின் அடிகளில் இரண்டாம் எழுத்தாக வரும் உயிர் மெய் ஒத்துவாராவிட்டாலும் உயிர்மேல் ஏறிய நெட் டெழுத்து ஒப்புமையால் இதனை நெடில் எதுகை என்று கொள்வர். மேலும், 87, 279, 471, 550, 585, 711, 713, 723 ஆம் பாடல்களிலும் நெடில் எதுகை வந்துள்ளமை காண லாம்.[23]

இரண்டாம் எழுத்தாகிய உயிர்மெய்மேல் இணைந்து வரும் நெடில் ஒப்புமை கருதியே நெடில் எதுகை என்று சொல்லப்படுகிறது. யாப்பருங்கல விருத்தி, யாப்பருங் கலக் காரிகை முதலிய இலக்கண நூல்களும் இவ்வியல் பினை எடுத்துக்காட்டியுள்ளன. ஆனால், உயிரெதுகை என்பது பற்றிக் கூறும்பொழுது இரண்டாம் எழுத்தாம் உயிர்மெய்யோடு கூடிய குறிலொப்புமை உதாரணங்களே உரையாசிரியர்களால் காட்டப்பட்டுள்ளன. அங்ஙனமே

இவ் வுயிரெதுகையை 'நெடிலெதுகை' என்னும் ஒப்புக் கருதி 'குறிலெதுகை' என்று அழைக்கலாம் அன்றோ? நெடில் என்பது குறிலின் நீட்சியாதலின் எழுத்துக்களுக்கு அடிநிலையாயுள்ளது குறிலோசையே என்னும் கருத்தில் குறில்தான் முக்கிய உயிர் எனக் கணிக்கப்பட்டு, அது காரணமாக உயிரெதுகை என வழங்கியிருத்தலும் கூடும். இதன் உண்மைக் காரணம் தெளிவுறப் புலனாகவில்லை.

வீரசோழிய உரைகாரராகிய பெருந்தேவனார், உயிரெதுகை என்பதற்கு உதாரணமாக நெடிலெதுகை வரும் பாட்டைக் காட்டியுள்ளார்.

"'மனைக்குப்பாழ் வாணுத லின்மை தான்சென்ற
திசைக்குப்பாழ் நட்டோரை யின்மை—இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை தனக்குப்பாழ்
நல்லறி வில்லா உடம்பு'.

இஃது இரண்டாம் எழுத்தின்மேல் ஏறின உயிரெழுத்து ஒத்தும் ஒற்று ஒவ்வாதும் வந்த உயிரெதுகை" என்று குறித்துள்ளார் (வீரசோ. யாப்புப். 5 உரை). இதனால் நெடிலாக, அல்லது குறிலாக இரண்டாம் எழுத்து உயிராயின் உயிரெதுகை என்னும் கருத்தினர் இவ்வுரைகாரர் என்பது தெரியவரும். விளக்கம் கருதி உயிரெதுகையை நெடிலெதுகை-குறிலெதுகை என வகைப்படுத்திக் கோடலும் அமைவுடைத்து என்பது உரைகாரர்களின் குறிப்புக்களினாலும் எடுத்துக்காட்டுக்களினாலும் உணரலாகும்.

**இனவெதுகை**

'பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு'. (குறள் 58)

'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது'. (குறள் 45)

'பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்'. (குறள் 296)

இம்மூன்று குறள்களும் முறையே வல்லின, மெல்லின, இடையின எழுத்துக்களை எதுகையாய்ப் பெற்றனவாகும். மூவினத்துள்ளும் முதலடியில் வந்த எழுத்தே அடுத்த அடியிலும் வாராது, அவ்வவ் இனத்துள் வெவ்வேறு எழுத்து

இயைந்து வருவதால் இவை இனவெதுகை ஆயின. திருக்குறளில் வல்லின எதுகை[24] பெற்ற குறள்கள் 36; மெல்லின எதுகை[25] பெற்றவை 44; இடையின எதுகை[26] பெற்றவை 10 உள்ளன.

### ஒற்றெதுகை

உயிர்மெய்யும் மெய்யுமாக அல்லது மெய்யும் உயிர்மெய்யுமாக இரண்டாம் எழுத்து ஒத்துவரும் அமைப்புடைய பாடல்கள் சிலவும் குறளகத்து உள. அவை யாவன :

'வசையென்ப வையத்தார்க்கு எல்லாம் இசையென்னும்
எச்சம் பெருஅ விடின்'. (குறள் 238)

'நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்'. (குறள் 1016)

'நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாணாள் பவர்'. (குறள் 1017)

'தாம்வீழ்வார் மென்தோட் டுயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு'. (குறள் 1103)

'தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றுரே
காமத்துக் காழில் கனி'. (குறள் 1191)

'நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு'. (குறள் 219)

'பெயலாற்ரு நீருலந்த உண்கண் உயலாற்ரு
உய்வில்நோய் என்கண் நிறுத்து'. (குறள் 1174)

'உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்'. (குறள் 140)

'நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை'. (குறள் 325)

'உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது'. (குறள் 762)

'இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு'. (குறள் 1288)

'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்'. (குறள் 319)

'மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானும்
இன்னான் எனப்படும் சொல்'. (குறள் 453)

'எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு'. (குறள் 820)

'நனவினான் நல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது'. (குறள் 1217)

'பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்'. (குறள் 1223)

இவற்றை நோக்கும்போது இலக்கிய வழக்காகவரும் இஃது ஆன்றோர் செய்யுட்களிலே ஒரு சில இடங்களில் அமைந்துவருகின்ற சிறுபான்மை வழக்கு என்று கருதலாம். இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் மரபாதலின் உயிர்மெய்யும் மெய்யுமாகத் தம்முள் ஒத்து வரும் இவ்வகை அமைப்பை ஒற்றெதுகையாகக் கொள்ளுதல் சாலும்.[27]

'நனவினான் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது'. (குறள் 1215)

'நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து'. (குறள் 1132)

'காமமும் நாணும் உயிர்காவாத் தூங்குமென்
நோனா உடம்பி னகத்து'. (குறள் 1163)

மேலே குறித்த அமைப்பில் இவற்றை ஓரின மெய் ஒப்புமை எனக்கொண்டு மெல்லின எதுகையாக அமைத்துக் கோடல் வேண்டும்.

### தலை, இடை, கடையாகு எதுகை மோனைகள்

எதுகைத் தொடையுள்—சீர் முழுவதும் ஒத்துவருவது தலையாகு எதுகை; ஓரெழுத்தே வரத்தொடுப்பது இடையாகு எதுகை; இனத்தினானும் மாத்திரையளவாலும் பிற வாற்றாலும் வரத்தொடுப்பது கடையாகு எதுகை;—என்று கொள்வர் சிலர். மோனைக்கும் இவ்வியல்புகளைக்கொண்டு தலை, இடை, கடை எனக் கூறுதலும் உண்டு.

'தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயிர் எல்லாம் தொழும்'. (குறள் 286)

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'. (குறள் 1)

'அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று'. (குறள் 259)

என வருவன முறையே தலை, இடை, கடையாகு எதுகைகளுக்கு எடுத்துக்காட்டுக்களாம்.

'சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு' (குறள் 267)

எனவரும் குறட்பாவினைத் தலையாகுமோனை என்பர்.

'நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு' (குறள் 739)

எனவரும் பாவும் மேலைப் பாவைப் போலவே தலையாகு மோனையாம்.

'குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு'. (குறள் 794)

'கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின்'. (குறள் 808)

இவற்றை முறையே இடையாகு மோனை கடையாகு மோனை என்னலாம். இவை போல்வனவாய்வரும் பிற குறட்பாக்களிலும் எதுகை மோனை இயல்புகளைக் கண்டறிவதோடு எல்லாக் குறள்களும் தலை, இடை, கடை என மூவகையாய் அடங்கவும் பெறும் என்பதும் கருதத் தக்கதாகும். மேலும், தலை, இடை எனப்படுமவற்றைச் செம்மைப்பண்படை கொடுத்து, செம்மோனை, செவ்வெதுகை முதலாக வழங்குதலும் உண்டு. "விகற்பமும் இனமும் வாராமைத் தொடுத்த மோனை, எதுகை, முரண் இயைபு, அளபெடைகளைச் செம்மோனை, செவ்வெதுகை, செம்முரண், செவ்வியைபு, செவ்வளபெடை என வழங்கப் படும்" எனவரும் யாப்பருங்கல உரைக்குறிப்பால் (சூ. 53) இம் மரபு தெரியவரும்.

**ஆசெதுகை**

ஒருசார் ஆசிரியர், எதுகைத் தொடையுள் ய, ர, ல, ழ என்னும் நான்கு ஒற்றும் வந்து மிகத் தொடுத்தால், அதனை 'ஆசிடை எதுகை' என்று வேண்டுவர்.

'யரலழ என்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பின்
ஆசிடை யெதுகையென் றறிந்தனர் கொளலே'

என்பது ஒரு பழஞ்சூத்திரம்.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'. (குறள் 110)

இதில் இரண்டாம் அடியிலே யகரம் பற்றுக்கோடாய் நின்று நகரமெய் எதுகையாதலை உணர்த்துதலால் இதில் வரும் 'ய்' ஆசெதுகை எனப்படும். ஆசு என்பது பற்று என்னும் பொருளதாம். முதலெழுத்தையும் எதுகையெழுத்தையும் ஆசெழுத்து இடைநின்று இணைக்கும் காரணத்தால் ஆசெதுகை என்னும் பெயர் பெறுவதாயிற்று என்பர். 110, 291, 355, 423, 944, 1077-ஆம் எண்ணுள்ள குறள்கள் ஆசெதுகை பெற்றுவந்துள்ளன[28]. 1077ஆம் பாட்டு மட்டும் ரகரவொற்றை ஆசாகப் பெற்றுள்ளது. பிறபாடல்களில் யகரவொற்று ஆசாக வந்துள்ளது. திருக்குறளில் ல, ழ என்பவை ஆசாக வந்த பாடல் எதுவும் இல்லை.

### மோனை-எதுகைத் தொடைகளில் கிளையெழுத்துகள்

மோனை-எதுகைத் தொடைகளில் முன்வந்த எழுத்தே மேலும் ஒத்து வருதலன்றி, இனமான கிளையெழுத்துகளும் ஒத்துவந்து, செய்யுளோசையைச் சிறக்கச் செய்யும்

அ—ஆ—ஐ—ஔ : தம்முள் இனமாம்.
இ—ஈ—எ—ஏ : இவை தம்முள் இனமாம்.
உ—ஊ—ஒ—ஓ : தம்முள் இனமாம்.

இவ்வாறே இவை சேர்ந்துவரும் உயிர்மெய்களும் கொள்ளப்படவேண்டும்.

ஒற்றுக்களுள் ச-த, ஞ-ந, ம-வ, ஆகியவை ஒன்றற்கொன்று இனமாம். இவற்றை 'அனு' என்றும், 'வழி' என்றும் வழங்குவாரும் உண்டு.

'அகரமோடு ஆகாரம் ஐகாரம் ஔவாம்
இகரமோடு ஈகாரம் எஏ—உகரமோடு
ஊகாரம் ஒஓ ஞநமவ தசகரம்
ஆகாத வல்ல அனு'

என்பது கிளையெழுத்துக்களைக் கூறும் ஒரு பழைய வெண்பா. இதன் ஈற்றடிக்குத் 'தோகாய் கிளையெழுத்தாச் சொல்' என்று ஒரு பாடபேதமும் உண்டு.

> 'அ ஆ ஐ ஔ என்றிவை எனுஅ
> இ ஈ எ ஏ என்றிவை எனுஅ
> உ ஊ ஒ ஓ என்றிவை எனுஅ
> தச மவ ஞநவெனும் என்றிவை எனுஅ
> முந்நால் உயிரும் மூவிரு மெய்யும்
> தம்முள் மயங்கினும் தவறின் றென்ப'.

இஃது நல்லாறனுர் இனமாமாறு எடுத்தோதிய சூத்திரம் (யாப். வி. 53 உரை). இ ஈ எ ஏ என்பதனோடு 'யா' என்பதும் இனமாக ஒத்துவரும் என்றும் யாப்பருங்கல விருத்தியுரைகாரர் கூறுவர் (யாப். வி. 53 உரை). திருக்குறளில் இவ்வகை வழிமோனையும் காணப்படுகிறது.

> 'யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
> வாய்மையின் நல்ல பிற'. (குறள் 300)

> 'வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
> யாண்டும் இடும்பை இல'. (குறள் 4)

இந்தப் பாடல்களில் 'யா' என்பதற்கு இ, எ-என்பவை வழிமோனை பெற்றுவருதல் காணலாம். இவ்வகை அமைப்பு வேறுசில குறள்களிலும் உள்ளன.

'ஆயிரு தொடைக்கும் கிளையெழுத்து உரிய' எனத் தொல்காப்பியர் எதுகை மோனை இரண்டிற்கும் கொண்டு கூறிய போதிலும், மோனைத் தொடை அமைப்பில்தான் இவ்வெழுத்துக்களின் பயன் தெற்றெனப் புலனுகும்.

> 'மோனைக் கினமே அஆ ஐஔவும்
> இஈ எஏவும் உஊ ஒஓவும்
> சதவும் ஞநவும் மவவும் எனவே'
> (தொன்னூல்-யாப்பதி-12)

என வீரமாமுனிவர் மோனைத் தொடைக்கே இனவெழுத்துக்களைத் தமது தொன்னூல் விளக்கத்துள் எடுத்துக்காட்டுதலும் கவனிக்கத் தக்கது.

**கிளையெழுத்துக் குறித்துப் பேராசிரியர் தரும் விளக்கம்**

அ, ஆ முதலியன ஒன்றற்கொன்று இனமாக வருவதற் குரிய ஏதுக்களை எடுத்துக்காட்டி, 'ஆயிரு தொடைக்கும் கிளையெழுத்து உரிய' என்னும் தொல்காப்பியச் சூத்திர வுரையில், பேராசிரியர் தரும் விளக்கத்தை இங்கே அறி வது கிளையெழுத்துப் பற்றிவரும் மரபினைத் தெளிவாக்கும். பேராசிரியரின் விளக்கம் பின்வருமாறு :

"'அஆ ஆயிரண் டங்காந் தியலும்' (தொல். எழுத். 85) என அகர ஆகாரம் கிளையாயின. ஐகார ஔகாரம் போலிவகையான் அவையெனப்படும். இஈஎஏ என்பனவும் உஊஒஓ என்பனவும் உடன் பிறப்பினவாகலான் அவையும் கிளை எனப்படும். ஒற்றுக்கிளை என்பன தம்முன் தாம்வருதலும் பிறவருதலும் என இரண்டு. அவற்றுள் தம் முன்னர்த் தாம் வருங்கால்வந்த உயிரே வாரா; அவ்வனுவிற்கு ஓதிய உயிரே வேறுபடவரும் என்பது. இனி, ஓரடிக்கண்ணுயின், ஐஞ்சீரானும் அறுசீரானும் வந்தவழியினும் அனுவெனப்படும் என்பது. இனித் தம் முன்னுகப் பிறவருங்கால் வந்த உயிரே வரவும் பெறும் எனக் கொள்க. பிறவருங்கால் ஞகர-நகரங்களும், மகர வகரங்களும், சகர தகரங்களும் இனம்பற்றிக் கிளையாம் என்பது. அவற்றுள் மகர வகரங்கள் இதழ்பற்றிப் பிறத்தலின் கிளையாயின. இவ்வாறே இஈஎஏ என்பனவும் யகரமும் மிடற்றுவழியாற் பிறத்தலானும் இயல்புகள் ஒப்புமையானும் கிளையாம் என்பது".

இவர்தம் விளக்கத்தால் ஒன்றற்கொன்று இனமாக அமைவதற்குரிய காரணமும் அவற்றால் அவற்றின் ஓசை ஒத்துப் பாடலின் தொடை நயம் சிறக்குமாறும் உணர லாகும். ஒரோவிடத்து யா-வுடன் அ ஆ ஐ ஔ என்பனவும் பாடல்களில் இனமாகக் காணப்படுவதால், இவற்றைப் புதியன புகுதலாக இனமெனக் கொள்வர் (புலவர் குழந் தை : யாப்பதிகாரம், பக். 35).

**முரண்தொடை-அளபெடைத்தொடை**

முரண்தொடை என்பது சொல்லும் பொருளும் மறு தலைப்படத் தொடுப்பதாகும்.

'மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே'
(தொல். செய்யு. 95)

என்பது ஆசிரியர் தொல்காப்பியர் தரும் விளக்கம். இதனைப் 'பகைத் தொடை', 'இரணத் தொடை' என்னும் பெயர்களாலும் வழங்குவர்.

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் மோனை முரண், எதுகை முரண் என்றும் வகைப்படுத்திக் காட்டியுள்ளார். அவர் காட்டிய எடுத்துக்காட்டும் விளக்கமும் பின் வருமாறு :

"'சொல்லுப சொல்லப் பெறுபவோ யாதொன்றும்
சொல்லாது சொல்லப் பெறு'.

இது மோனையாய் வந்து முரணினமையால் மோனை முரண்.

'இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்'. (குறள் 615)

'அறத்துக்கே யன்புசார் பென்ப அறியார்
மறத்துக்கும் அஃதே துணை'. (குறள் 76)

இவை எதுகையாய் வந்து முரணினமையால் எதுகை முரண்" (யாப். வி. 53 உரை).

'துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு' (குறள் 94)

என்னும் இக் குறள் ஒரு விகற்பாயும் ஈரடிகளிலும் இணை மோனை பெற்றும், இரண்டாம் அடியில் இணையெதுகை பொருந்தியும் வந்துள்ளது. முதற்சீர் முற்றும் ஒத்து வருதலின் இஃது தலையாகு எதுகை என்னும் சிறப்பிற்கும் உரியதாகும். என்றாலும், ஈரடிகளிலும் துன்புறூஉம்-இன்புறூஉம் என எதிரெதிரான பண்புகள் பேசப்படுவதனால் இஃது அடி முரண் என வழங்கப் பெறும்.

இதுபோன்றதே அளபெடைத் தொடையும். 'இன்புறூஉம்' என மேலே காட்டிய குறளினையே அளபெடைத் தொடைக்கும் காட்டலாம்.

'கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று' (குறள் 585)

எனவரும் குறளிலும் அளபெடைத் தொடைநயம் உள்ளது. அளபெடைத் தொடையாவது அடிக்கண்ணும் சீர்களிடத்

தும் அளபெடுத்து ஒன்றி வருவதாம். அளபெடுத்த போதும் சீர்களில் எதுகை அமைப்பு ஏற்கெனவே பொருந்தியிருக்கும். ஆகவே, அளபெடைத் தொடை, முரண் தொடை என்பன முறையே ஓசை கருதியும் சொற்பொருள் கருதியும் தனித்தனிப் பெயரிட்டு அழைக்கப்படுகின்றனவே யன்றி, அவை எதுகை மோனைக்கட்டுக்குள் அடங்குவனவே யாகும். இவ்வமைப்புக்களை நோக்கினுமானால் பாடல்களுக்கு மோனையும் எதுகையுமே மிக இன்றியமையாத உறுப்புக்கள் என்னும் உண்மை தெளிவுறப் புலனாகும்.

திருக்குறளில் 32 பாடல்கள் முதற்றொடையில் முரண் அமைதி பெற்று வந்துள்ளன.[29] 18 குறள்களில் அளபெடை அமைப்பு உள்ளது.[30]

## இயைபுத் தொடை

அடிதோறும் இறுதியிலே எழுத்தாவது சொல்லாவது ஒத்து வருமானால் அஃது அடி இயைபுத்தொடை எனப்படும். இங்ஙனமே இணை, பொழிப்பு முதலாகச் சீரின் கண்ணும் இயைபுத் தொடை கொள்ளப்படும். இயைபுத் தொடையைப் பார்க்கும்போது இறுதியை முதலாகக் கொண்டு பின்நோக்கிப் பார்த்தல் வேண்டும்.

'இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே'
(தொல். செய்யு. 96)

என்பது தொல்காப்பியரின் விதி. இரண்டடிகளின் இறுதி ஒருமைப்பட்டுவந்தால், அஃது இயைபுத் தொடை என்பது இச் சூத்திரக் கருத்து. இசைப் பாடல்களில்தான் பெரும்பான்மையும் இயைபுத் தொடைவரும். திருக்குறள் ஒன்றேமுக்காலடிப் பாட்டாதலின், இதில் அடி இயைபு வருவதற்கு இடமில்லை. ஆயினும், முதலடிகளின் சீர்களிடையே வழியெதுகையாகச் சில இடங்களில் இயைபு அமைப்புக் காணலாம். அவற்றைத் தொடை விகற்பம் பற்றிப் பின்னர்ப் பார்க்கும்பொழுது தொடர்பு கருதி அங்கே உடன் காணலாம்.

# 6. சீர்களில் வரும் தொடைகள்

### தொடை விகற்பம்

மேலே விவரிக்கப்பட்ட மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்னும் ஐந்து முதல் தொடைகளும் அடிகளிடையே வந்து, பாடல்களின் அடி வரையறுத் துணரும் வகையில் ஓசையறுதி பெற்று வருவன. இவ் வமைப்பு அடிகளில் அமைந்துவரும் சீர்களிடையிலும் காணப்படுதலைத் தொடை விகற்பம் அல்லது உறழ்ச்சித் தொடை என்பர் என்பது குறித்து முன்னரும் தொடை வகைகள் பற்றிக் கூறிய பொதுப்பகுதியில் பார்த்தோம் (பக். 19-20). இவ்வாறு வரும் தொடை விகற்பங்கள் நாற் சீரடிகளில்தான் நன்குஅமைந்து காணப்படும். இவற்றை இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கது வாய், முற்று என எழுவகையாகக் கொள்வர். முதற் றொடையும் தொடை விகற்பமும் ஒரு பாடலில் அமைந்து வருதல் பாவின் ஓசை நயத்தை மிகுவிக்கும். என்றாலும், தொடை விகற்பம் பெற்ற பாடல்கள் முதற்றொடைபெறாது வந்தாலும் இழுக்கின்று என்பர்.

தொடை விகற்பங்களுள் பொழிப்பும் ஒரூஉவுமே தொல்காப்பியர் நூலுள் காணப்படுகின்றன. மற்றும் இணை, கூழை முதலியன எல்லாம் பிற்கால இலக்கிய வளர்ச்சி நோக்கி இலக்கண நூலாசிரியர்களால் பின்னர் மேற்கொள்ளப் பெற்றன. திருக்குறளில் யாப்பருங்கலம் யாப்பருங்கலக் காரிகை நூலார் விளக்கிக் கூறும் தொடை விகற்பங்கள் எல்லாம் இடம் பெற்றுள்ளன என்பது கவனிக்கத்தக்கது.

**இணை**

அடிகளின் முதல் இரு சீர்களிலும் மோனை முதலாயின வரத்தொடுத்தால், அவை இணை மோனை, இணை யெதுகை, இணை முரண், இணையளபெடை எனப்படும்.

'கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை' (குறள் 15)

என்னும் இக் குறளின் இரண்டு அடிகளிலும் முதற்சீர் இரண்டிலும் மோனைகள் ஒத்துவந்துள்ளன. இங்ஙனமாக ஈரடிகளிலும் இணைமோனை[31] பெற்று வந்த குறள்கள் 104. முதல் அடியில் மட்டும் இணைமோனை[32] பெற்றவை217. இரண்டாம் அடியில் மட்டும் இணைமோனைத் தொடை[33] கொண்டவை 273.

இங்ஙனமே ஈரடியிலும் இணையெதுகை பெற்றவை 25 குறள்கள்.[34] முதலடியில் இணையெதுகை[35] அமைந்தவை 28. இரண்டாம் அடியில் இணையெதுகை[36] வாய்ந்தவை 52. முதலடியில் இணைமுரணுக[37] வந்த சீர்களைக்கொண்ட பாடல் 21. இரண்டாம் அடிக்கண் அமைந்த[38] இணைமுரண் 6. 1079ஆம் குறளில், 'உடுப்பதூஉம் உண்பதூஉம்' என இணையளபெடைத் தொடையும் வந்துள்ளது.

இணைமோனையாகவும் இணையெதுகையாகவும் தொடை விகற்பம் வாய்ந்த குறள்களின் எண்ணிக்கை பிற தொடைகளை விடவும் மிகுதியாக உள்ளன. இதனுல் குறளாசிரியர் காலத்தில் இணையாகத் தொடைநயம் அமைந்துவரப் பாடுதல் பெருவழக்காயிருந்தது என்று கொள்ளலாம்.

**பொழிப்பு**

முதற் சீரிலும் மூன்றும் சீரிலும் மோனை முதலாயின வரத்தொடுப்பது பொழிப்பு என்று பெயர் பெறும்.

'ஒருசீ ரிடையிட் டெதுகை யாயின்
பொழிப்பென மொழிதல் புலவ ராறே'
(தொல். செய்யு. 99)

என்பது தொல்காப்பியர் விதிச் சூத்திரம்.

வெண்பாவில் பொழிப்புத் தொடை அமைந்த பாடல்களே சிறப்புடையன என நூல்வல்லார் பாராட்டுவர். புறப்பொருள் வெண்பாமாலை, நளவெண்பா முதலிய வெண்பாவில் அமைந்த இலக்கண இலக்கியங்களில், இவ்வமைதி பெரும்பான்மையும் காணப்படுகிறது. ஆனால், முற்கால நூலாகிய திருக்குறளில் பொழிப்புத் தொடை உளதாயினும் மிக அதிகமாக இல்லை. ஈரடிகளிலும் பொழிப்பு மோனை வாய்ந்த குறள்கள் பதினொன்கே.[39]

> 'கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை' (குறள் 9)

என்பது அவற்றுள் ஒன்று. முதல் அடியில் மட்டும் பொழிப்பு மோனை[40] பெற்ற குறள்கள் 192; இரண்டாம் அடியில் பொழிப்பு மோனை[41] பெற்றவை 59.

ஈரடியிலும் பொழிப்பு எதுகை பெற்ற குறள்,

> 'பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
> பொருளல்லது இல்லை பொருள்' (குறள் 751)

எனவரும் 751 ஆம் பாடல் ஒன்றே. முதல் அடியில் பொழிப்பு எதுகை[42] பெற்றவை 12; இரண்டாம் அடியில் எதுகையிலே பொழிப்பு[43] அமையப் பெற்றவை 4. பொழிப்பு முரண்தொடை[44] பெற்ற குறள் 14.

**ஒரூஉத் தொடை**

நாற்சீரடிக்கண் நடு இருசீர்க்கண்ணும் இன்றி முதற்சீரிலும் நான்காம் சீரிலும் மோனை முதலாயின வரத் தொடுப்பது, ஒரூஉத்தொடை.

> ' இருசீர் இடையிடின் ஒரூஉ வென மொழிப'
> (தொல். செய்யு. 100)

என விளக்கம் தருகிறார் தொல்காப்பியர்.

> ' அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே உலகு'. (குறள் 1)

> ' ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
> வேண்டும் பனுவல் துணிவு'. (குறள் 21)

இப்பாடல்களில் முறையே ஒரூஉ மோனையும், ஒரூஉ எதுகையும் அமைந்துள்ளமை காணலாம்.

ஒரூஉத்தொடை நாற்சீர்க்கண் முதற்சீரிலும் இறுதிச் சீரிலும் அமையும் ஒப்புமை யாதலின், குறள் வெண்பாவின் இரண்டாம் அடியில் இத்தொடை வர இயலாது. இங்ஙனமே அடுத்து வரும் மேற்கதுவாய், கீழ்க்கதுவாய் என்னும் தொடை விகற்பங்களும் குறட்பாவின் முதலடியில் மட்டுமே அமைந்துவரும் தொடை நயங்களாம். ஒரூஉ மோனை[45] அமைந்த குறள் 75; ஒரூஉ எதுகை[46] பெற்று வந்தவை 458; ஒரூஉ முரண்[47] நயம் வாய்ந்தவை 23. 1096 ஆம் பாடலில் ஒரூஉ அளபெடைத் தொடை நயம் உளது. இவற்றை நோக்கும் போது, மற்றுள்ள இணை, பொழிப்பு முதலியவற்றைக் காட்டிலும் ஒரூஉ எதுகை பெற்ற பாடல்களே மிகுதியாக உள்ளமை தெரியவரும்.

இரண்டு விகற்பமாய் வரும் குறள்களில் பெரும்பான்மையும் ஒரூஉ எதுகையும், இரண்டாம் அடியிலே எதுகை நயம் பெற்ற நான்காம் சீர்க்கு ஏற்ற மோனை அமைதியில் பின்வரும் சீர்களில் பலவும் வருகின்ற நிலைமை முன்னர்ச் சுட்டப் பெற்றது (பக். 24). முதற்றொடையாகிய அடியெதுகை போன்று ஒரூஉ எதுகையும் குறட்பாக்களிலே முதன்மைப்பேறு பெற்றுள்ளது. 4, 5 ஆம் சீர்களில் முரண் நயம் பெற்றவை 98, 166, 479 என்னும் எண்ணுள்ள மூன்றுமாம்.

> 'உறுஅ தவர்போல் சொலினும் செறுஅர்சொல்
> ஒல்லை உணரப் படும்'

என்னும் குறளில் (1096) ஒரூஉ அளபெடைத் தொடை நயம் வாய்ந்துள்ளது. ஒரூஉ எதுகை பெற்றும்[48] ஒரு விகற்பாயும் வந்த குறட்பாடல்கள் 68. இங்ஙனமாக ஒரூஉத் தொடை குறட்பாக்களில் மிக்குவந்தமையை நோக்கும் போது பொழிப்பு மோனை போல வெண்பாவில் ஒரூஉத் தொடையும் பெருவரவிற்று என்பது விளங்கும்.

**கூழை**

கூழையாவது கடைச் சீரில் மட்டும் இன்றி மற்றைய முதல் மூன்று சீர்களிலும் மோனை முதலாயின வரத் தொடுப்பது. 'ஈறிலி கூழை' எனச் சுருங்கச் சொல்லி

விளங்க வைக்கிஞர் யாப்பருங்கலக் காரிகையில் அமித சாகரஞர் (யாப். கா. 19).

'தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்கா தெனின்'. (குறள் 19)

'வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்
தகைமாண்ட தக்கார் செறின்' (குறள் 897)

எனவரும் பாடல்களில் கூழைத் தொடை நயம் வாய்ந் துள்ளமை காணலாம். திருக்குறளில் கூழை மோனைத் தொடை[49] பெற்ற குறள் 75. கூழைத்தொடையில் எதுகை யமைப்புப் பெற்ற குறள் நூலகத்து ஓரிடத்திலும் காணக்கூடவில்லை. கூழைத் தொடைகூட ஒருவகையில் இணை-பொழிப்பு என்னும் இரண்டன் சேர்க்கையே. ஆயி னும் சேர்ந்தாற்போல் தொடர்ந்து முதல் மூன்று சீரிலும் வருதலின், இறுதி குறைந்தது என்னும் கருத்தில் கூழை எனப் பெயர் அமைத்தனர்.

**மேற்கதுவாய்-கீழ்க்கதுவாய்**

மேற்கதுவாய் என்பது இரண்டாம் சீர் ஒழிந்த ஏனைய மூன்று சீர்களிலும், அதாவது 1, 3, 4 ஆம் சீர்களிலே மோனை முதலாயின வரத்தொடுப்பது. கதுவாயாவது குறைபட்ட வாய் எனப் பொருள்படும். மேற்கதுவாய் மோனை[50] யமைதியுடைய குறட்பா 45; மேற்கதுவாய் எதுகை[51] பெற்றவை 13.

கீழ்க்கதுவாய் என்பது மூன்றும் சீரைத் தவிர்த்து முதலிரு சீர்க்கண்ணும் கடைச் சீர்க்கண்ணும், அதாவது 1, 2, 4 ஆம் சிர்களிலே மோனை முதலாயின வரத்தொடுப் பது. கீழ்க்கதுவாய் மோனை[52] அமைப்புடைய குறள்கள் 66; கீழ்க்கதுவாய் எதுகை[53] யமைப்பு உடையவை 35.

'சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தா ஞகும் மறை'. (குறள் 590)

'வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன் றுலகு'. (குறள் 612)

'குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்'. (குறள் 965)

'இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது'. (குறள் 1041)

இப்பாடல்களில் வரும் மோனை-எதுகை அமைப்புக்கள் வாசித்து மகிழத்தக்கன. மேற்கதுவாய் அமைப்பினும் கீழ்க்கதுவாய் அமைப்பில் வந்த குறள்களே மிகுந்துள. இந்த இரண்டு வகைக் கதுவாய்ச் சீர்களிலும் முதற்சீரும் நான்காம் சீரும் தொடை நயம் பெறும். எனவே, ஒரூஉ எதுகை நயம் கதுவாய்ச் சீர்களிலும் பொதிந்துள்ளமை கருதத்தக்கது. இருவிகற்பமாய்வரும் செய்யுட்களில் சில கதுவாய்த் தொடைநயம் பெற்று வருதலும் இது கருதியே போலும்.

## முற்று

முற்றாவது நான்கு சீர்களிலும் மோனை முதலாயின வரத்தொடுப்பது. முற்று மோனை[54] வாய்ந்த குறள் 20; முற்றெதுகை[55] வாய்ந்த குறள் 6.

'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை' (குறள் 12)

என்னும் இக்குறளில் முற்று மோனை முற்றெதுகை இரண்டும் அமைந்துள்ளமை காணலாம்.

'ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து'. (குறள் 155)

இக்குறளின் இரண்டாம் அடியில் உள்ள மூன்று சீர்களிலும் மோனை நயம் உளது. வெண்பாவின் ஈற்றுச்சீர் முச்சீராய்த் தான் வரும். ஆகவே, இவ்வடிக்கண் வந்துள்ள எல்லாச்சீர்களிலும் ஒத்துவரும் மோனை அமைதியை முற்று மோனை எனல் ஒருசார் அறிஞர் வழக்கு.

புலவர் குழந்தை அவர்கள் தம்முடைய 'யாப்பதிகார'த்தில் வெண்பாவின் ஈற்றடி மூன்று சீரிலும் மோனை அமைதி பெறவந்தமை குறித்து ஒரு குறிப்பு எழுதியுள்ளார்கள். அது வருமாறு:

"(வெண்பாவின்) நான்காமடி சிந்தடி. அதன் மூன்று சீரினும் மோனை வந்திருக்கிறது. அளவடியின் நான்கு

சீரிலும் மோனே வருவதே முற்று மோனே யாதலால் இது முற்று மோனேயும் அன்று. அளவடியில் ஈற்றுச் சீரொழிந்த ஏனே மூன்று சீரினும், அதாவது முதல் மூன்று சீரினும் மோனே வருதலான் இது கூழையுமன்று.

'பண்பில்சொல் பல்லா ரகத்து'

எனச் சிந்தடியில் ப-ப என முதலிரு சீரிலும் மோனேவரின் இணேமோனே எனவும்,

'திறனறிந் தாங்கே திரு'

(யாப்பதிகாரம். பக். 41)

தி-தி என முதற் சீரிலும் மூன்ரும் சீரிலும் மோனேவரின் பொழிப்பு மோனே எனவுங் கொள்ளலாம்."

இக் குறிப்பினல் வெண்பாவின் ஈற்றடியாகவரும் சிந்தடியில் இணே-பொழிப்பு என்னும் தொடைகள் கொள்ளலாமே யன்றி மூன்று சீரிலும் தொடையமைதி பெற்று வந்தால் முற்றுமோனே என்று கொள்ளுதல் கூடாது என்பது இவர்தம் கருத்தாதல் விளங்கும்.

யாப்பருங்கலக் காரிகை உரைகாரரோ இணேமோனே முதலாகிய முப்பத்தைந்து தொடைவிகற்பமும் அளவடிக்கே கொள்ளப்படும் என்று குறிப்பிடுகிருர்.

"சீர்முழுதும் ஒன்றின் முற்ரும் என்னுது, 'வருசீர்' என்று சிறப்பித்தது, இணே மோனே முதலாகிய முப்பத்தைந்து தொடை விகற்பமும் அளவடிக்கண்ணே வழங்கப்படும் என்பதூஉம், இணே இயைபு முதலாகிய எழு விகற்பமும் இறுதிச் சீரே முதற் சீராகக்கொண்டு வழங்கப்படும் என்பதூஉம் அறிவித்தற்கு எனக் கொள்க" (யாப். கா. 19 உரை).

இவருடைய விளக்கப்படி அளவடி ஒழிந்த குறளடி, சிந்தடி, நெடிலடி, கழிநெடிலடி ஆகியவற்றில் எல்லாம் தொடை விகற்பம் கொள்ளுதல் கூடாது என்பதாகும்.

இங்ஙனம் இவ்வுரைகாரர் எடுத்துக்காட்டும் கருத்துரையை அளவுகோலாகக்கொண்டு பார்ப்போமாளுல், புலவர் குழந்தை அவர்கள் வெண்பாவின் ஈற்றடியில் இணே-பொழிப்புத் தொடைகள் கொள்ளலாம் என்று கூறு

தலும் பொருந்தாதாகும். ஆனால், காலப்போக்கில் சிந்தடியில் இணை-பொழிப்புத் தொடைகள் கொள்ளுதல் புதியனபுகுதலாய்ப் புலவர் பெருமக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே, இவர் தரும் கருத்தும் ஒப்புக்கொள்ளத் தக்கதே. இங்ஙனமே இப் புதியன புகுதல் வழக்காய்ச் சிந்தடி மூன்று சீரிலும் தொடை ஒத்து வருவனவற்றை 'முற்று' என்னும் ஒருசார் ஆசிரியர் கருத்தையும் ஏற்றுக் கொள்வதால் யாதோர் இழுக்கும் இன்று.

ஒருகாலத்தில் நாற்சீர் கொண்டதே அடி என்னும் வழக்கு இருந்தது; தொடை விகற்பங்கள் நாற்சீரடியில் தெளிவுற அமைந்து ஓசையின்பம் விளைத்தலையும் கண்டனர். ஆனால், காலப்போக்கில் ஆசிரியம் வஞ்சிப்பாக்களில் குறள் சிந்தடிகள் மிகுதியும் பயின்றுவரலாயின. பிற்காலத்தில் துறை, விருத்தம் முதலியனவும் பெருகி வரலாயின. இந்த நிலையில் அளவடிக்குக் கூறிய தொடை விகற்பங்களை ஏற்றபெற்றி பிற அடிகளுக்கும் கொள்ளுதல் அவசியமாயிற்று. புலவர்களும் அளவடிப் பாடல்களைப் போலவே குறள் சிந்தடி வருமிடங்களிலும் மோனை முதலிய தொடைநயம் வாய்க்கும் வண்ணம் பாடியுள்ளனர். இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்புதல் மரபாதலினால் அளவடிக்குச் சொன்ன தொடை விகற்பங்களில் ஏற்புடையனவற்றைப் பிற அடிகளுக்கும் கொள்ளுதல் பொருத்தமே.

திருக்குறளில் 19 பாடல்கள் ஈற்றடி மூன்று சீர்களிலும் மோனை ஒப்புமை யுடையனவாய் உள்ளன.[56]

> 'இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
> சிறந்தமைந்த சீரார் செறின்' (குறள் 900)

என்பது அவற்றுள் ஒரு பாடல். இதில், 'சிறந்தமைந்த சீரார் செறின்' என்று ஈற்றடியில் முற்றும் மோனை நயம் உளது.

> 'சீர்தொறும் தொடுப்பது முற்றெனப் படுமே'
> (யாப். வி. 48)

என்னும் யாப்பருங்கல விருத்திச் சூத்திரம் தரும் விளக்கம் சற்றுச் சிந்தித்தற்குரியது. இங்கே, 'சீர்தொறும்' என்

பதற்கு முன்சூத்திரங்களை நோக்க, 'நாற்சீர்க்கண்ணும்' என உரைகாரர் உரையும் வகுத்துள்ளார். என்றாலும், சூத்திரச் சொல் அமைப்போ ஓரடியில் வரும் சீர்தொறும், அதாவது எல்லாச் சீர்களிலும் தொடை தொடுப்பது முற்று என்னும் அளவில் கொள்ளக்கிடக்கின்றது.

'வருசீர் முழுதும் ஒன்றின் முற்றும் என்ப'

என யாப்பருங்கலக் காரிகையும் (19) உரைக்கின்றது. பொதுவகையாக இவ்விரு நூலிலும் வரும் குறிப்புக் கொண்டு ஓரடியில் வரும் சீர்கள் எல்லாம் தொடை நயம் ஒத்தால் முற்று என்னும் தகுதியுடைத்தாம் என்று கொள்ளலாம். குறட்பாவின் ஈற்றடிக்கோ மூன்று சீரே தான் உண்டு. ஆகவே, சிந்தடியில் வருசீர்தொறும், அதாவது மூன்று சீர்களிலும் தொடை நயமுடைய இவ்வமைப்பினையும் முற்று எனல் சாலும்.

'இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு'. (குறள் 432)

'தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்'. (குறள் 462)

'நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்'. (குறள் 605)

'ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு'. (குறள் 642)

'குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்'. (குறள் 703)

'நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்'. (குறள் 770)

'கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது'. (குறள் 772)

'முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு'. (குறள் 786)

'ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு'. (குறள் 835)

'இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்'. (குறள் 1040)

'வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி'. (குறள் 1192)

'நனவினான் நல்கா தவரைக் கனவினான்
காண்டலின் உண்டென் உயிர்'. (குறள் 1213)

மேலே காட்டியுள்ள பன்னிரண்டு குறள்களின் இரண்டாம் அடியில் கடையிருசீர்களும் மோனையமைதி பெற்றுள்ளமை கவனிக்கத்தக்கது. நாற்சீர் கொண்ட அடிகளில் கடையிருசீர் மோனை ஒத்துவரின் கடையிணை மோனை என்பர். அவ்வாறே இவ்வெண்பாக்களில் ஈற்றடி இறுதியில் வரும் இருசீர்களும் மோனைநிலை கொள்வதை நோக்கின், நாற்சீர்க்குச் சொல்லியது சிந்தடி, நெடிலடி, கழிநெடிலடி முதலியவற்றிற்கும் 'ஏற்புழிக் கோடல்' என்னும் உத்தியால் கொள்ளத்தக்கது என்னும் துணிவிற்கு வர இடமுண்டு. எனவே, வெண்பாவின் ஈற்றடிச் சீர்கள் முற்றும் தொடை ஒப்புடைத்தாக வருமானால் முற்று எனல் பொருந்தும்.

## இறுதியிலிருந்து நோக்கும் கடையிணை முதலிய தொடைகள்

இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்பன முதற்சீரை முதன்மையாக வைத்துப் பின்வரும் சீர்களுடன் ஒப்பு-அமைதி காண்பது போலவே இறுதிச்சீரை முதன்மையாக வைத்து முன்னுள்ள சீர்களுடன் ஒப்புக்காணும் தொடையமைப்பும் உண்டு. இவற்றைக் கடையிணை, கடைக்கூழை, இடைப்புணர், பின் எனக் கூறுவர். இவற்றை முரண்தொடைக்கு உரிய அமைப்பு என யாப்பருங்கல விருத்தியும் யாப்பருங்கலக் காரிகையும் கட்டுரைக்கும்.

'கடையிணை பின்முரண் இடைப்புணர் முரண்என
இவையும் கூறுப ஒருசா ரோரே' (யாப். வி. 39)

என்பது யாப்பருங்கல விருத்தி தரும் செய்தி. ஒருசாராசிரியர் (கையனார்) கடையிணை முரண், பின்முரண், இடைப்புணர் முரண் என்றும் முரண்தொடையைப் பாகுபடுத்துவது உண்டு என்பதை இச்சூத்திரம் தெரிவிக்கிறது. இதன் உரைகாரர்,

"கடையிரு சீரும் மறுதலைப்படத் தொடுப்பது கடையிணை முரண், கடைச் சீரும் இரண்டாம் சீரும் மறுதலைப்படத் தொடுப்பது பின்முரண், இடையிரு சீரும் மறுதலைப் படத் தொடுப்பது இடைப்புணர் முரண் எனக் கொள்க"

என விளக்கம் தருகிறார். தவிரவும், "'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்பது தந்திரவுத்தி யாதலின் ஏனைத் தொடைக்கும் இவ்வாறே கொள்க" என்று மோனை, எதுகை முதலிய பிறதொடைகளுக்கும் இவ்வமைப்பைக் கொண்டு எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கம் தந்துள்ளார்.

யாப்பருங்கல விருத்தியிற் கூறிய மூன்று தொடைகளுடன் கடை, கடைக்கூழை என இரண்டையும் சேர்த்து யாப்பருங்கலக்காரிகை அறிமுகப்படுத்துகின்றது.

'கருதிற் கடையே கடையிணை
 பின்கடைக் கூழையுமென்று
இரணத் தொடைக்கு மொழிவர்
 இடைப்புணர் என்பதுவே'

எனவரும் காரிகையால் (காரிகை, 40) இது தெரியவரும். காரிகையிலும் முரண்தொடைக்கே இவ்வமைப்பை எடுத்துக் கூறிய போதிலும், 'இரணத் தொடைக்கும்' என்ற உம்மையால், ஒழிந்த மோனை, எதுகை, இயைபு, அளபெடை என்னும் நான்கு தொடைக்கும் இவ்வாறே ஒட்டிக் கொள்க என்பர் உரைகாரர்.

திருக்குறட்பாக்களில் இரண்டாம்அடி சிந்தடி யாதலின் கடை என்னும் தொடை ஒப்புமை இந் நூலில் வருவதற்கு வாய்ப்பில்லை. எனவே, இந்த ஒன்றையும் தவிர்த்து மற்றுள்ள கடையிணை முதலிய நான்கு வகைகளில் மோனை, எதுகை முதலிய தொடை விகற்பங்கள் குறட்பாக்களில் விரவி வருதலை நோக்குமிடத்து, இவ்வகை அமைப்புக்களும் பழைய மரபின் பாற்பட்டனவே என்பதற்கு ஐயமின்று.

**கடையிணை**

கடையிணை என்பது நாற்சீரடிகளில் கடையிரு சீர்களில், அதாவது 4ஆம் 3ஆம் சீர்களில் மோனை, எதுகை முதலியன வரத்தொடுப்பது.

'அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு'. (குறள் 75)

இக்குறட்பாவின் முதலடியின் கடையிரு சீர்களும், 'வைய கத்து,' 'வழக்கென்ப' என வருதலின் இது கடையிணை மோனை பெற்றதாம்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்'. (குறள் 10)

இதில் கடையிணைச் சீர்கள் மோனை அமைதியோடு எதுகை நயமும் உடைமையின் கடையிணை எதுகை பெற்ற தாகும். குறளில் கடையிணை மோனை[57] பெற்றுவரும் பாடல்கள் 65; இரண்டாம் அடியில் கடையிணையாக மோனை[58] பெற்றவை 12. கடையிணை எதுகை[59] பெற்ற பாடல்கள்34.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (குறள் 110)

என்னும் பாடலில் உய்வுண்டாம்-உய்வில்லை என வரு தலின் கடையிணை முரண் எனல் சாலும். மேலே காட்டிய 'பிறவிப் பெருங்கடல்' எனத்தொடங்கும் பாட்டில் முத லடியின் ஈற்றிலே 'நீந்துவர்-நீந்தார்' என வருவதனைக் கடையிணை முரணாகவும் கொள்ளலாம். இவ்வாறு குறள் நூலுள் கடையிணை முரண்[60] வந்த பாடல்கள் 17.

**கடைக் கூழை**

கடைக் கூழை என்பது முதற்சீர் ஒழிந்த ஏனைய மூன்று சீர்களிலும், அதாவது 4, 3, 2 ஆம் சீர்களில் மோனை முதலிய தொடையமைதி பெற்று வருவது. பின்வரும் குறட்பா இதற்கு எடுத்துக்காட்டு:

'புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை'. (குறள் 59)

இதுபோல் கடைக் கூழை மோனைத் தொடை பெற்ற பாடல் கள் பத்து குறள் நூலகத்தே காணப்படுகின்றன.[61]

'இல்லாரை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்'. (குறள் 905)

'உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்'. (குறள் 1316)

இவ்விரு குறட்பாக்களிலும் கடைக்கூழை யெதுகை அமைப்பு உள்ளமை காணலாம். கடைக் கூழை அமைப்பில் முரண் தொடை நயம் திருக்குறட்பாக்களில் காணப் படவில்லை.

## இடைப்புணர்

இடைப்புணர் என்பது இடையிரு சீர்களிலும், அதாவது 2ஆவது 3ஆவது சீர்களில் மோனை, எதுகை, முதலிய தொடையமைதி பெற்று வருதலாம்.

'மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்' (குறள் 52)

என்னும் இப் பாடலில் இரண்டாவது மூன்ருவது சீர்களில் மோனை நயமும் எதுகை நயமும் உள்ளன. இடைப்புணர் மோனை[62] நயம் வாய்ந்த குறள் 53-ம், இடைப்புணர் எதுகை[63] நயம் வாய்ந்த குறள் 27-ம் திருக்குறள் நூலகத்து உள.

'நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்'. (குறள் 276)

இதில் துறவார்-துறந்தார் என இடையிரு சீர்களும் மாறுபட்ட சொற்பொருள்களைக் கொண்டுள்ளமையால் இடைப் புணர் முரணும். மேலும், 692, 980, 1132 ஆம் பாடல் களிலும் இத்தொடை நயம் அமைந்துள்ளமை காண லாம்.[64]

## பின்

பின் என்பது நான்காவது சீரிலும் இரண்டாவது சீரிலும் மோனை, எதுகை முதலிய தொடையமைதி பெறுத லாகும். 12 குறள்களில் பின் மோனைத் தொடையும்,[65] 16 குறள்களில் பின்னெதுகைத் தொடையும்[66] வந்துள.

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை'. (குறள் 151)

'தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு'. (குறள் 201)

இவை முறையே பின் மோனைக்கும் பின்னெதுகைக்கும் எடுத்துக்காட்டுக்களாம்.

'உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்'. (குறள் 394)

இக்குறளில் இரண்டாம் சீரும் நான்காம் சீரும் 'தலைக்கூடி' 'பிரிதல்' என மாறுபட்ட சொற்பொருள் நயம் வருதலின் பின் முரணும். மற்றும், 20, 264, 1104 ஆம் பாடல்களும் பின் முரண் நயம் வாய்ந்தனவாகும்.[67]

நான்காம் சீரோடு ஐந்தாம் சீர் முரண் தொடை அமைப்பில் வந்துள்ள மூன்று பாடல்களும் உள.

'சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்'. (குறள் 98)

இக் குறளில் மறுமையும் இம்மையும் என நான்காம் சீரோடு ஐந்தாம் சீர் முரண்பட்டு வருதல் நோக்கத்தகும். 166, 479 ஆம் குறள்களிலும் இவ்வமைப்பினைக் காணலாம்.

### தொடை விகற்பங்களுள் காணும் ஒருபுடை ஒப்புமை

முதலிலிருந்து ஓசை ஒப்புமை நயம் நோக்கும் இணை, கூழை, பொழிப்பு, ஒரூஉ ஆகியவற்றிற்கும், இறுதியிலிருந்து ஓசை ஒப்புமை நயம் நோக்கும் கடையிணை, கடைக்கூழை, பின், இடைப்புணர் ஆகியவற்றிற்கும் எதிரிடையான ஒப்புமைக் கூறுகள் இருத்தல் கவனிக்கத் தக்கது :

இணை என்பது முதல் இருசீர்க்கண்வரும் ஒப்புமை; கடையிணை என்பது இறுதியில் உள்ள இரு சீர்களிலும், அதாவது 4ஆம் 3ஆம் சீர்களில் காணும் ஒப்புமை.

இறுதிச் சீராகிய நான்காம் சீர் ஒழிந்த முதல் மூன்று சீர்களிலும் வரும் ஒப்புமை கூழை; கடைக்கூழையோ முதற்சீர் ஒழித்து ஏனைய இறுதியிலிருந்து 4, 3, 2 ஆம் சீர்களிடையே காணும் ஒப்புமை.

பொழிப்பு என்பது ஒன்றும் மூன்றும் சீர்கள் ஒப்புடைத்தாதல்; பின் என்பது இறுதியிலிருந்து 4ஆம் 2ஆம் சீர்களில் காணும் ஒப்புமையாகும்.

ஒரூஉ என்பது ஒன்றும் நான்கும் சீர்களில் காணும் ஒப்புமை; இடைப் புணர் என்பதுவோ இடையிரு சீர்களில், இரண்டும் மூன்றும் சீர்களில் காணும் ஒப்புமை.

எனவே, கடையிணை, கடைக்கூழை, பின், இடைப் புணர் என்பன முறையே இணை, கூழை, பொழிப்பு, ஒரூஉ என்பனவற்றின் மாற்று வடிவம் என்பது கவனிக்கத் தக்கது. அதாவது இணை, கூழை, பொழிப்பு, ஒரூஉவின் மறுதலையே கடையிணை, கடைக்கூழை, பின், இடைப்புணர் என்பன என்பது தெளிவாகும்.

### தொடை விகற்பம் பதினொன்றின் அட்டவணை

தொடை விகற்பங்களை எளிதில் உணரும் வகையில் பின்வருமாறு ஓர் அட்டவணையில் அடக்கியும் பார்க்கலாம். இவை நாற்சீர் கொண்டுவரும் அளவடியை அடிப்படையாகக் கொண்டு தொடைநயம் பயப்பவை.

**தொடை விகற்ப அட்டவணை**

| | | |
|---|---|---|
| 1. இணை | 1 2 — — | முதல் இருசீர் ஒப்புமை. |
| 2. பொழிப்பு | 1 — 3 — | முதற்சீர் மூன்றும் சீர் ஒப்புமை. |
| 3. ஒரூஉ | 1 — — 4 | முதற்சீர் கடைச்சீர் ஒப்புமை. |
| 4. கூழை | 1 2 3 — | முதல் மூன்றுசீர் ஒப்புமை. |
| 5. மேற்கதுவாய் | 1 — 3 4 | இரண்டாம் சீர்ஒழிந்த ஏனை மூன்று சீர் ஒப்புமை. |
| 6. கீழ்க்கதுவாய் | 1 2 — 4 | மூன்றும் சீர்ஒழிந்த ஏனை மூன்று சீர் ஒப்புமை. |
| 7. முற்று | 1 2 3 4 | நாற்சீர்ஒப்புமை அதாவது அனைத்துச் சீர் ஒப்புமை. |

[இந்த ஏழு தொடைகளும் அடிமுதற்சீரிலிருந்து எண்ணி ஒப்புக் காணப்பெறும். நாற்சீர் அடியின் ஈற்றுச் சீரை முதலாகக் கொண்டு ஒப்புக்காணப் பெறுவன கடையிணை, கடைக் கூழை, இடைப்புணர், பின் என்னும் தொடை விகற்பங்கள்.]

| | | |
|---|---|---|
| 1. கடையிணை | — — 3 4 | கடையிரு சீர்களில் ஒப்புமை. |
| 2. கடைக் கூழை | — 2 3 4 | முதற்சீர் ஒழிந்த ஏனைய மூன்றுசீர் ஒப்புமை. |
| 3. இடைப்புணர் | — 2 3 – | முதற்சீர் இறுதிச்சீர் ஒழிந்த 2ஆம் 4ஆம் சீர் ஒப்புமை. |
| 4. பின் | — 2 — 4 | முதற்சீர் மூன்றாம் சீர் ஒழிந்த 2ஆம் 4ஆம் சீர் ஒப்புமை. |

மேலே காட்டிய பதினொருவகையாகவும் மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்னும் ஐந்தும் கூடிவரவே உறழ்ச்சித் தொடை ஐம்பத்தைந்து (55) ஆகும்.

தொடையும் தொடை விகற்பமும் நாற்சீரடிகளை அளவாக வைத்துச் சொன்னது நாற்சீரடிகளில் எல்லா வகை விகற்பங்களும் இனிது விளங்குதல் கருதியே யாகும். நாற்சீரடிக்குக் கூறியதனை, 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்தியால், இருசீரடி, முச்சீரடி, ஐஞ்சீரடி, அறுசீரடி, எழுசீரடி, எண்சீரடி முதலியவற்றிற்கும் ஏற்ற பெற்றிகொள்ளலாம். இவ்வகை அடி கொண்ட பாக்களிலும் இணை, பொழிப்பு, ஒரூஉ முதலிய தொடையமைதிகள் அமைந்து வருதல் இயல்பே யாகும். அறுசீர், எண்சீர் முதலியனவாக வரும் பாடல்களில் கவிஞர்கள் சந்தத்திற்கு ஏற்பப் பல்வேறு வகை அமைப்பில் மோனை எதுகை முதலிய தொடையமைதி கொள்ளுதலைப் புலவர் பெருமக்களின் வாக்கில் காணலாகும். ஆகவே, எவ்வகை அளவிற்றாய பாவாயினும் மோனை, எதுகை முதலாய தொடையும் தொடைவிகற்பங்களும் உள என்பது உளங்கொளத் தக்கது.

## தொடை விகற்பம் குறித்து ஒருசில மரபுகள்

பெரும்பாலும் மோனையிலேயே இத்தொடைகள் மிகுந்து வரும். சிறுபான்மை ஏனை எதுகை, முரண் முதலிய வற்றிலும் விரவிவரும். தொடைவிகற்பங்களுள் பொழிப்பு மோனைத் தொடையையே சிறப்புடைத்தாகக் கூறுவர். அதற்கடுத்தபடி ஒரூஉ மோனை. இவற்றோடு வேறு தொடை களும் வந்தால் இவையே சிறப்பாகக் கொள்ளப்படும். ஆகவே, பொழிப்பு ஒரூஉவொடு சேர்ந்து ஏனைத் தொடை வகைகள் செய்யுளுக்குச் சிறப்புத்தரும் என்பது கருத்து. கூழை, மேற்கதுவாய், முற்று என்னும் அமைப்புக்களில் பொழிப்பு மோனை முதலியனவும் பொதிந்துகிடக்கும். மேற்கதுவாய் கீழ்க்கதுவாய் அமைப்புக்களில் ஒரூஉ மோனை, ஒரூஉ எதுகை முதலியனவும் அமைந்து கிடக்கும். பாட்டின் முதற்சீரிலே மோனைத் தொடை வகை பெறாதது பாட்டு ஆகாது ஆகலின், கடையிணை முதலிய நான்கும் தனித்து வாராமல் மேற்குறித்த முதற்றொடை விகற்பத் தொடைகளுடன் சேர்ந்தே வரும். சீரெதுகை பெற்றால் தான் அடியெதுகையின்றிப் பாவின் அடிகள் தனித்து வரலாம்.

## செந்தொடை

மேற்சொல்லப்பட்ட மோனை, எதுகை முதலிய தொடையும், இணை, பொழிப்பு முதலிய தொடைவிகற்ப மும் பெறாது வருவது செந்தொடை எனப்படும்.

> 'சொல்லிய தொடையொடு வேறுபட் டியலின்
> சொல்லியற் புலவரது செந்தொடை என்ப'

என்பது தொல்காப்பியனார் விதிச்சூத்திரம் (தொல். செய்யு. 101). செந்தொடையோ, தொடை, தொடை விகற் பங்கள் இன்றி வரினும் பாவிற்குரிய ஓசை நயம் குன்றா மலும், ஏனை இலக்கண மரபுகளுக்கு மாறுபாடின்றியும் வரும் என்பது கருத்து. மரபுநெறிக்கு மாறுபாடாக அமை வதைச் 'செந்தொடை' என்பது காராட்டை வெள்ளாடு என்றாற் போல்வதோர் மங்கலவழக்கு. செந்தொடை என் னும் அடைமொழித் தொடர் செம்மையான நேரியதொடை எனப் பொருளாம். அதாவது சொற்கள் அல்லது சீர்களை

இயல்பாகத் தொடுப்பது எனக் கொள்ளலாம். செம்மை யான சீரிய நடையின்பம் படத் தொடுப்பதே இதன் இயல் பாகும்.

> "'அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
> சிறுகை அளாவிய கூழ்' (குறள் 64)

என்பது இனவெழுத்து முதலாயின பெற்று முன் சொல் லப்பட்ட தொடையும் தொடைவிகற்பமும் போலாமை தொடுத்தமையால் செந்தொடை மருள் எனக் கொள்க" என யாப்பருங்கல விருத்தியுரைகாரர் குறிப்பிடுவர் (யாப். வி. 53 உரை). இப் பாடலில் முதற்றொடையாக உயிரெது கையும், தொடை விகற்பமாக முதலடியில் இணைமோனை யும் வந்துள்ளன. என்றாலும், பொழிப்பு, ஒரூஉ போன்ற தொடை விகற்பம் வாராமை நோக்கிச் செந்தொடையாக யாப்பருங்கல விருத்தியுரைகாரர் கொண்டனர் என்று கருதலாம்.

புலவர் குழந்தை அவர்கள் தாம் எழுதிய தொடை யதிகாரத்தில்,

> 'சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
> நிலத்தறைந்தான் கைபிழையா தற்று' (குறள் 307)

என்னும் குறட்பாவைச் செந்தொடைக்குச் சான்றாக எடுத் துக் காட்டியுள்ளார்கள்.

### யாப்பருங்கல விருத்தியுரை தரும் செந்தொடை விளக்கம்

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் வண்ணமும் வடிவும் முற்றும் மாறுபட்ட நிலையில் வரும் பாடல்கள் செந் தொடைப் பாற்படும் என்னும் கருத்தில் விளக்கம் தரு கிறார். அவர் உரை வருமாறு:

> "செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்—என்பது நேரசைக்கு நிரையசை வந்தும், நிரையசைக்கு நேரசை வந்தும், நேரசைக்கு நேரசையே வரினும், நான்கு நேரசையும் தம்முள் ஒவ்வாது வந்தும், நிரையசைக்கு நிரையசையே வரினும் நான்கு நிரை யசையும் தம்முள் ஒவ்வாது வந்தும், இயற்சீருக்கு உரிச்சீர் வந்தும் உரிச்சீருக்கு இயற்சீர் வந்தும், இயற்சீருக்கு இயற்

சீரே வரினும் தம்முள் ஒவ்வாது வந்தும், உரிச்சீருக்கு உரிச்சீரே வரினும் தம்முள் ஒவ்வாது வந்தும், ஓரடி ஒரு வண்ணத்தால் வந்து ஏனையடி மற்றொரு வண்ணத்தால் வந்தும், அசை சீர் இசை என்னும் மூன்றும் தம்முள் ஒவ்வாது வந்தும், அனுவும் இனமும் இன்றி முரணுகக் கிடப்பது செந்தொடை என்றவாறு'' (யாப். வி. பக். 178).

இவர் தாம் கூறும் விளக்கத்திற்குச் சான்ருக,

'அசையினும் சீரினும் இசையினும் எல்லாம்
இசையா தாவது செந்தொடை தானே'

எனவரும் பல்காயனர் சூத்திரத்தையும், மற்றும் நத்தத்தனர், காக்கை பாடினியார், அவிநயனர் சொல்லிய சூத்திரங்களையும் எடுத்துக்காட்டுகிருர். இவர் தரும் விளக்கப்படி குறித்ததொரு பாவின் இயல்புகள் முற்றும் மாருக அமைவது செந்தொடை எனக் கொள்ளல் வேண்டும். இவர் தரும் விளக்கம்,

'வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாக லான' (தொல். மரபு. 92)

என்பவாகலின், உயர்ந்தோர் வாக்கில் எங்கானும் பிறழ்ச்சி காணப்படுமாஞல் அதனையும் அமைத்துக் கொள்வதற்காகச் சொன்னவையேயன்றி வேறன்று. சொல்நயம் பொருள் நயம், தொடைநயம் நடைநயம் பொருந்தப் பாடுதலே புலவர் வழக்கு.

# 7. யாப்பு வண்ணம்

### குறட்பா மரபுணர்த்தும் முதல்நூல் திருக்குறள்

வெண்பாவின் ஈற்றடியும் பிற அடிகளும் பொழிப்பு மோனை பெற்று வருதல் சிறப்பாகும் என்பர். வெண்பாவின் அளவடிகளில் பொழிப்பு மோனையோடு வேறு தொடைகளும் வரின் பொழிப்பு மோனையே சிறப்புற்றிருக்கும். பொழிப்பு மோனையின்றி ஒரூஉ எதுகையுடன் வேறு தொடைகள் வரின் ஒரூஉ எதுகையே சிறப்புறும். குறள்வெண்பா எழுசீர் கொண்டுவரும் சிறுபா ஆதலினால் இதன் ஈற்றடி பொழிப்பு மோனை பெறாது வந்தாலும் இழுக்கின்று. ஆனால், முதலடி தொடையமைதியின்றி வருதல் கூடாது. திருக்குறட்பாக்கள் எல்லாம் ஏதோ ஒருவகையில் தொடைநயம் பெற்றே வருகின்றன என்பது கூர்ந்து நோக்குவார்க்குப் புலனாம். மேலும், குறட்பா விளைலாகிய நூல்களுக்குள்ளே முதன்மையாக விளங்குவது திருக்குறள் ஆதலின் இவர் மேற்கொள்ளும் மரபுகளைக் குறட்பா மரபாகக்கொள்ளவேண்டும். அன்றிப் பிற்கால மரபுகள் சில குறளகத்து இல்லையே என மருளுதல் வரலாற்றுணர்ச்சிக்கு ஏற்புடைத்தாகாது. குறட்பாக்களுக்கு முன் மாதிரியான இலக்கண மரபுகளை உணர்த்தும் நூலாகவும் எடுத்துக்காட்டாகவும் திருக்குறளைக் கொள்வதே வரலாற்று முறைக்குப் பொருத்தமாகும்.

### திருக்குறட் பா-நடை

பாக்களைப் படிக்கும்போது சீர்களில் நிறுத்தி, மோனைத் தொடையில் எடுப்பாகவும், எதுகைத் தொடையில் அழுத்தமாகவும் எடுத்தும் படித்தல் வேண்டும்.

தொடையமைப்பிற்கேற்பக் குறட்பாக்களில் எடுத்தும் படுத்தும் அழுத்தமாகவும் மெதுவாகவும் படிப்பதால் பாட்டின் உருவ அழகு படிப்பார்க்கும் கேட்பார்க்கும் இனிமை பயக்கும். திருக்குறட்பாக்களை இந் நோக்கில் படித்து அவற்றின் சொல்நயம், பொருள்நயம், தொடை நயங்களைக் காண்பது முறையாகும்.

> 'சொல்நோக்கும் பொருள்நோக்கும்
> தொடை நோக்கும் நடை நோக்கும்
> எந்நோக்கும் காண இலக்கியம் ஆவது'

எனப் பிள்ளைப் பெருமாளையங்கார் என வழங்கும் அழகிய மணவாள தாசரின் பாடல்களைப் பாராட்டினர் ஒருவர். இப் பாராட்டு திருக்குறள் நடைக்குப் பெரிதும் ஒக்கும். திருக்குறளில் வள்ளுவப் பெருந்தகை ஆண்டுள்ள சொற்களோ செவ்விய மதுரம் சேர்ந்த நற்றமிழில் சீரிய கூரிய தீஞ்சொற்கள்; பொருளுக்குப் பொலிவுதரும் பொற்புடைச் சொற்கள்.

ஆடூஉ முன்னிலை மகடூஉ முன்னிலைகளை இடைப் பெய்து பாடலை நிரப்பும் போக்குக் குறளில் யாண்டும் காணப் பெறவில்லை. நாலடியார், பழமொழி முதலிய சில அறநூல்களில் இவ்வகை முன்னிலையிட்டுப் பாடும் பண்பு அங்கங்கே தென்படுகிறது. மேலும், குறட்பாவில் வள்ளுவர் கருத்துக்கு இசைந்த கட்டுரைத் தொடர்களை ஆண்டுள்ளதோடு, சொற்செட்டு, சொற்சுருக்கம் வாய்க்கும் வகையில் தொகைச் சொற்களை மிகுதியும் ஆண்டுள்ளார். அடைமொழிச் சொற்களும் கருத்துடை யடைகளாக வந்து அமைகின்றன. பொருளுக்குப் பொலிவுதரும் ஏற்புடைச் சொற்களும் குறிப்புச் சொற்களும் பல பாடல்களில் இடம் பெற்றுப் பொருளாழம் உடையனவாய்க் கற்பார்க்குக் கழிபேருவகை தருவனவாக உள்ளன.

வள்ளுவப் பெருந்தகை தாம் உலகிற்கு உணர்த்தக் கருதிய பொருள்களை உடன்பாட்டு முகத்தானும் எதிர்மறை முகத்தானும் காரண காரியத் தொடர்புபட விளக்கியதோடு உவமை, உருவகம், பிறிது மொழிதல் முதலிய அணி நலன்களையும் அங்கங்கே மேற்கொண்டு அப்பொருள்களை மேலும் சிறப்புறச் செய்துள்ளார். இவ்வணிகள் குறட்

பாவின் பொருள்களைத் தெளிவுற விளக்குவதோடு ஆசிரியர் அறிவுறுத்தும் பொருள்களைக் கற்பார் நன்கு உளங்கொளும் வகையிலும் செய்கின்றன. அணிநலன்கள் குறளகத்து மிகுதியும் உடையவாதலின் அவை தனிப்பட ஆய்ந்து கற்று இன்புறுதற்குரியன. இங்ஙனமாகக் குறட்பாவின் சொல்நோக்கும் பொருள்நோக்கும் ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாய் அமைந்தவை. அவை கற்கக் கற்க மேன்மேலும் புதுமை பயந்து கற்பாரை வியப்பிலாழ்த்தும் தகைமைய. பாவின் உருவ அழகைப் பொருளுணர்ந்து பாடிக்காணும் ஓசையின்பத்தில்தான் குறட்பாவின் தொடை நோக்கும் நடைநோக்கும் காண இயலும். குறட்பாக்களையெல்லாம் கூர்ந்து கற்கும்போதுதான் அவற்றின் வண்ணங்களும் வனப்பும் சுவைநலங்களும் கற்பார்க்குப் புலனாகும்.

**வண்ணம்**

வண்ணம் என்பது பாவின் ஓசை வேறுபாடு. ஒரு பாவின் உறுப்பாக வரும் எழுத்து, அசை, சீர் என்பன எல்லாம் பாவின் சந்தத்திற்கு அடித்தளமாகும். குறிலும் நெடிலும், வல்லினமும் மெல்லினமும், அளபெடையும் குற்றிகர குற்றுகரங்களும், மற்றும் இவை போல்வன எல்லாம் பாவினுள் சந்த மாறுதலை விளைவித்து நிற்கும்.

**வண்ணம் நூறு**

வண்ண வேறுபாடுகள் மிகமிக நுணுகி உணரத் தக்கவை. அவிநயனார் பாவண்ணங்களை நுட்பமாக ஆராய்ந்து நூறு வண்ணங்கள் ஓதினார். நூறு வண்ணத்திற்கு அவர் தரும் விளக்கம் பின்வருமாறு :

> " தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம், அடுக்கிசை வண்ணம், பிரிந்திசை வண்ணம், மயங்கிசை வண்ணம் என்ற இவ்வைந்தையும் முதல் வைத்து—
>
> அகவல் வண்ணம், ஒழுகல் வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம் இந் நான்கினையும் இடை வைத்து—
>
> குறில் வண்ணம், நெடில் வண்ணம், வலி வண்ணம், மெலி வண்ணம், இடை வண்ணம் என்ற இவ்வைந்தினையும்

கடை வைத்துக்—கூட்டி உறழ நூறு வண்ணமும் பிறக்கும்" என்பர்.

'தூங்கேந் தடுக்குப் பிரிதல் மயங்கிசை
வைத்துப் பின்னும்
பாங்கே அகவல் ஒழுகல் வலிமெலிப்
பாற்படுத்திட்
டீங்கே குறினெடில் வல்லிசை மெல்லிசை
யோடிடையும்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ணம் நூறும்
தலைப்படுமே'

என்பது ஒரு பழைய காரிகைப்பாடல்.

இவ்வாறு நூறும் பலவுமாகி வண்ணங்கள் வேறுபட்டாலும், அவ்வேறுபாடெல்லாம் சந்த வேற்றுமை செய்யா என்றும், அவை மிகவும் நுண்ணுணர்வுடையார்க்கே புலனாகும் என்றும், இங்ஙனம் விரிவான சந்த வேற்றுமைகளைப் பெரும்பாலோர் மேற்கொண்டிலர். ஓசை வேற்றுமையை எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் இருபது வண்ணங்களையே ஆன்றோர் நன்கு மதித்துப் போற்றினர் என்று தெரியவருகிறது.

**தொல்காப்பியர் உணர்த்தும் வண்ண வகை**

வண்ணம் இருபது வகைப்படும் என்று கூறும் முந்தையோர் கொள்கையை உடன்பட்டுத் தொல்காப்பியரும்,

'வண்ணம் தாமே நாலைந்து என்ப'
(தொல். செய்யு. 212)

என்று கூறி, இருபது வகையான வண்ணங்களை வகுத்து விளக்கம் தந்துள்ளார். இருபது வண்ணங்கள் வருமாறு: அவைதாம்.

'பாஅ வண்ணம் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்
அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்
எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்

தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணம் என்று
ஆங்கன மொழிப அறிந்திசி னோரே'
(தொல். செய்யு. 213)

எனவரும் தொல்காப்பியச் சூத்திரம் கொண்டு இருபது வண்ணங்களின் பெயரும் முறைவைப்பும் உணரலாம். இச்சூத்திர உரையில், "இது வரலாற்று முறைமை என்றற்கு 'ஆங்கன மொழிப அறிந்திசினோரே' என்றான் என்பது" எனப் பேராசிரியர் தரும் விளக்கத்தாலும் இருபது வண்ணங்களே வரலாற்று முறைப்படி சிறந்ததாகக் கொள்ளப் பெற்றவை என்பது விளங்கும்.

இந்த இருபது வண்ணங்களுள் பாஅ வண்ணம் சொற்சீராய் நூற்பாவில் பயின்று வருவதாலும், தூங்கல் வண்ணம் வஞ்சிப்பாவில் அணைந்து வருதலாலும், உருட்டு வண்ணம், முடுகு வண்ணம் என்னும் இரண்டும் அராக நடைபெற்றுக் கலிப்பாவின்பாற்படுதலாலும் இந் நான்கும் ஒழிந்த ஏனைய பதினாறு வண்ணங்களையே நாம் குறள் நூலகத்துக் காணுதல் கூடும்.

### தாஅ வண்ணம்

தாஅ வண்ணமாவது தாவிவரும் வண்ணமாம். அதாவது இடையீடுபடத் தொடுப்பது. சீரிடையீடுபடத் தொடுப்பது பொழிப்பும் ஒரூஉவும் ஆம். ஆதலின், பாடல் அடிகளிலே வரும் பொழிப்பு ஒரூஉ எதுகைத் தொடை வாய்த்தன எல்லாம் தாஅ வண்ணம் ஆகும்.

'தாஅவண்ணம்
இடையிட்டு வந்த எதுகைத் தாகும்'
(தொல். செய்யு. 215)

என்பது தொல்காப்பியரின் விதிச் சூத்திரம்.

'அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி'. (குறள் 245)

'தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்'. (குறள் 614)

'அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின்'. (குறள் 497)

'முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்'. (குறள் 616)

இவற்றுள் முதல் இரண்டு பாக்கள் பொழிப்பு எதுகையும் பின்னிரண்டு பாக்கள் ஒரூஉ எதுகையும் வாய்ந்துள்ளமையால் இவை தாஅ வண்ணம் வாய்ந்தனவாகும். இங்ஙனம் பொழிப்பு ஒரூஉ எதுகை வந்த பாடல்களை எல்லாம் தாஅ வண்ணம் என்று உணர்தல் வேண்டும். இவ்விருவகையான எதுகை பெற்ற குறட்பாக்கள் எத்துணைய என்பதை முன்னர் எதுகைகளைப் பற்றி உரைத்த இடத்துக் காணலாம்[68].

**வல்லிசை வண்ணம்**

வல்லிசை வண்ணமாவது வல்லெழுத்து மிக்கு வருவது.

'வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும்'
(தொல். செய்யு. 216)

என்பது தொல்காப்பிய விதி. வல்லெழுத்து மிகுதியாகப் பயின்று வருவதால் இவ் வண்ணம் இப் பெயர் பெற்றது. இஃது மிகுதிபற்றி அமைந்த பெயர். இவ்வாறே பின்வரும் மெல்லிசை வண்ணம், நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம் முதலியனவும் பெயர் பெற்றன என்பது ஈண்டுக் குறிக்கொளத்தக்கது.

'நாடாது நட்டலின் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு'. (குறள் 791)

'ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்'. (குறள் 214)

'போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது'. (குறள் 693)

'முற்றியும் முற்றாது எறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரியது அரண்'. (குறள் 747)

மேலே வரும் குறட்பாக்களில் வல்லோசை எழுத்துக்கள் மிக்குவருதல் நோக்கத்தகும். இவ்வாறே வல்லோசை மிக்கு வந்த குறட்பாக்களையெல்லாம் வல்லிசை வண்ணம் என்று கொள்ளலாம்.

**மெல்லிசை வண்ணம்**

'மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே'
(தொல். செய்யு. 217)

என்பர். இது மெல்லெழுத்து மிக்கு வருதலால் பெற்ற பெயர். எனவே, மெல்லிசை வண்ணம் என்பது காரணக் குறி.

'மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அ∴தின்றேல்
மன்னுவாம் மன்னர்க்கு ஒளி'. (குறள் 556)

'மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடையது அரண்'. (குறள் 742)

'இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது'. (குறள் 1041)

இங்கே காணும் குறட்பாக்களைப் போன்று மெல்லெழுத்து மிக்கு வருவன எல்லாம் இம்மெல்லிசை வண்ணத்தின் பாற்படும்.

**இயைபு வண்ணம்**

இடையெழுத்து மிக்கு வருவது இயைபு வண்ணம் ஆகும்.

'இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே'
(தொல். செய்யு. 218)

என்பர். "மென்மைக்கும் வன்மைக்கும் இடைநிகரவாகிய எழுத்தான் வருதலின் இயைபு வண்ணம் என்றான்" என்று பேராசிரியர் இப் பெயர்க்கு விளக்கம் தருகின்றார். பின் வரும் குறட்பாக்களில் இடையெழுத்து மிக்கு வருவதால் அவை இயைபு வண்ணம் ஆம்.

'இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு'. (குறள் 752)

'சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்'. (குறள் 664)

**அளபெடை வண்ணம்**

உயிரளபெடை ஒற்றளபெடை ஆகியவை பயின்று வரும் பாடல் அளபெடை வண்ணமாம்.

'அளபெடை வண்ணம் அளபெடை பயிலும்'
(தொல். செய்யு. 219)

என்பது தொல்காப்பிய விதிச் சூத்திரம்.

'உருஅ தவர்போல் சொலினும் செருஅர்சொல்
ஒல்லை உணரப் படும்'. (குறள் 1096)

'உருஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்
செருஅய் வாழிய நெஞ்சு'. (குறள் 1200)

'விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி'. (குறள் 1210)

இவை போல்வனவாய் அளபெடுத்துவரும் பாடல்கள் எல்லாம் அளபெடை வண்ணமாம். உயிரளபெடை பெற்ற பாடல்கள் திருக்குறளில் ஏறத்தாழ இருபது உள்ளன[69]. ஒற்றளபெடை பெற்ற பாடல்கள் குறள் நூலில் இல்லை.

**நெடுஞ்சீர் வண்ணம்**

நெட்டெழுத்து மிகுதியும் பயின்று வருவது நெடுஞ்சீர் வண்ணம் எனப்படும்.

'நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்'
(தொல். செய்யு. 220)

என்பது இதற்கு விதி கூறும் தொல்காப்பியச் சூத்திரம்.

'யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு'. (குறள் 127)

'காணாதாற் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு'. (குறள் 849)

இக் குறட்பாக்களைப்போல நெட்டெழுத்து மிகுதியாக வருவன எல்லாம் நெடுஞ்சீர் வண்ணத்திற்கு எடுத்துக் காட்டுக்களாம்.

**குறுஞ்சீர் வண்ணம்**

'குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்'
(தொல். செய்யு. 221)

என்பவாகலின், குற்றெழுத்து மிகுதியாகப் பயின்றுவரும் பாடல் குறுஞ்சீர் வண்ணம் எனக் கொள்ளுதல்வேண்டும்.

'தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்'. (குறள் 63)

'சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்'. (குறள் 200)

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக'. (குறள் 391)

இவை போலக் குற்றெழுத்து மிகுதியும் உடைய பாடல்களைக் குறுஞ்சீர் வண்ணம் எனல் வேண்டும்.

### சித்திர வண்ணம்

சித்திர வண்ணமாவது நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் விரவிவரும் இயல்பினது. குறிலும் நெடிலுமாகக் கலந்து பல வண்ணம்படச் செய்யப்படுவதாதலின் சித்திர வண்ணம் எனப்பட்டது என்பர்.

'சித்திரவண்ணம்
நெடியவும் குறியவும் நேர்ந்துடன் வருமே'
(தொல். செய்யு. 222)

என்பது தொல்காப்பியர் தரும் விதிச் சூத்திரம். பின் வரும் பாடல்களைப் போன்ற குறட்பாக்கள் இவ் வண்ணத்தின் பாற்படும்.

'மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு'. (குறள் 409)

'மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்'. (குறள் 973)

'யான்நோக்குங் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்'. (குறள் 1094)

'யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று'. (குறள் 1314)

### நலிபு வண்ணம்

'நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்' (தொல். செய்யு. 223)

என்பர் தொல்காப்பியர். நலிபு என்பது ஆய்தம் ஆம். ஆகவே, ஆய்தவெழுத்துப் பயின்றுவரும் பாடல்கள் நலிபு வண்ணம் எனப்படும்.

'அஃகி அகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்'. (குறள் 175)

'அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்'. (குறள் 178)

இவை போன்று ஆய்தவெழுத்துப் பெற்றுவரும் பிற குறட்பாடல்களும் இவ்வண்ணத்தின் பாற்படும்.

## அகப்பாட்டு வண்ணம்

'அகப்பாட்டு வண்ணம்
முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே'
(தொல். செய்யு. 224)

என்பது தொல்காப்பியர் தரும் விளக்கம். இதற்குப் பேராசிரியர், "அகப்பாட்டு வண்ணம் என்பது இறுதியடி இடையடி போன்று நிற்பது என்றவாறு. அவை யாவன: முடித்துக்காட்டும் ஈற்றசை ஏகாரத்தானன்றி ஒழிந்த உயிரீற்றானும் ஒற்றீற்றானும் வருவன" என உரைத்துள்ளார். இவ் விளக்கத்திற்கு எடுத்துக்காட்டாக,

'தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன'. (தொல். மரபு. 5)

'உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்' (ஐங்குறு. 21)

என்பவற்றையும், இவை போல உயிரீறு ஒற்றினால் முடியும் வேறு சில பாடற் பகுதிகளையும் தந்துள்ளார். இதே நோக்கில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, பின்வரும் குறட்பாடல்கள் போன்றவற்றை இவ்வண்ணத்திற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

'காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடலல்லது இல்லை வலி'. (குறள் 1131)

'நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்'. (குறள் 1213)

## புறப்பாட்டு வண்ணம்

இது அகப்பாட்டு வண்ணத்திற்கு நேர் மாறான இயல்புடையது.

'புறப்பாட்டு வண்ணம்
முடிந்தது போன்று முடியா தாகும்'.
(தொல். செய்யு. 225)

என்பர் தொல்காப்பியர். "புறப்பாட்டு வண்ணம் என்பது இறுதியடிப் புறத்ததாகவும் தான் முடிந்தது போன்று நிற்றல்" என்பது பேராசிரியரின் உரை விளக்கம்.

'இன்று வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே' (புறம். 363)

என்னும் பாடற்பகுதியை இவ் வண்ணத்திற்குக் காட்டாக அவர் தந்துள்ளார். இங்கே, "ஈற்றயலடி முன்னிய வினையே என முடிந்தது போன்று முடியாதாயிற்று" என அவர் தரும் விளக்கமும் சிந்திக்கத் தக்கதாம். பேராசிரியர் கூறும் மேற்கண்ட விளக்கத்தைக்கொண்டு, குறட்பாவில் ஈற்றடிக்குப் புறம் என்பது முதலடியில் பொருள் முடிந்தது போன்றுவரும் இயல்பினை என்று கொள்ளல் பொருந்தும்.

'புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்'. (குறள். 785)

'உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்'. (குறள். 592)

இங்ஙனம் வரும் குறட்பா போன்றவற்றைப் புறப்பாட்டு வண்ணம் என்னலாம்.

அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம் என்னும் இரண்டுமே பல அடிகளில் வரும் பாடல்களை நோக்கிக் கூறியதாகலாம் என்று தோன்றுகிறது. "அகப்பாட்டு வண்ணம் என்பது இறுதியடி இடையடி போன்று நிற்பது" எனக் கூறும் பேராசிரியர் விளக்கத்தால் இவ் வண்ணத்தின் போக்கு புலனாகும். முடித்துக் காட்டலும் முடிவிடங் கூறலும் நெடும்பாட்டுகளுக்கு மிகவும் அவசியமாகும். குறட்பாவோ அங்ஙனமன்று. பெரும்பான்மையும் கருத்துக்கள் சிறுசிறு தொடர்களாகவே அமைந்து விடுகின்றன. ஒரு சில பாடல்களில் வினைமுடிபாகச் சில சொல் வருவித்து உரைக்கவேண்டும் நிலைமையும் உண்டு.

'கடன்என்ப நல்லவை எல்லாம் கடன் அறிந்து
சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு'. (குறள் 981)

இங்கே 'என்ப' என்பதற்கு ஏற்ற முடிபுச் சொல்லாக, 'என்று சொல்லுவர் நூலோர்' எனப் பரிமேலழகர் 'நூலோர்' என்னும் சொல்லை வருவித்து முடிபு காட்டு கின்ருர். இதுபோன்றவற்றைப் புறப்பாட்டு வண்ணம் என்று கொள்ளுதலும் அமைவுடைத்தாகும் என்று கருத லாம். பொதுவாக அகப்பாட்டு புறப்பாட்டு வண்ணங் களுக்குப் பேராசிரியர் தரும் விளக்கமும் அத்தனை தெளி வாக இல்லை.

**ஒழுகு வண்ணம்**

'ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும்'
(தொல். செய்யு. 226)

என்பது தொல்காப்பியரின் விதிச் சூத்திரம். ஒழுகிய லோசையால் நடப்பது ஒழுகு வண்ணம் ஆம். வெண் பாவில் ஒழுகியலோசை என்பது ஒழுகிசைச் செப்ப லோசை யாகும். எனவே, ஒழுகிசைச் செப்பலோசை பெற்ற பாடல்களை, அதாவது வெண்சீரும் இயற்சீரும் கலந்துவரும் பாடல்களை ஒழுகுவண்ணம் என்று கொள்ளு தல் தகும்[70].

'செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு'. (குறள் 781)

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்'. (குறள். 1033)

இவை போல வெண்சீரும் இயற்சீரும் கலந்துவரும் பாடல்கள் இவ் வண்ணத்தினைச் சாரும்.

**ஒரூஉ வண்ணம்**

தொல்காப்பியர் ஒரூஉ வண்ணத்தின் இயல்பை,

'ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும்'
(தொல். செய்யு. 227)

என்று கூறுகிருர். "யாற்ரெழுக்குப் போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றனை அவாவாமை அறுத்துச் செய்வது

ஒரூஉ வண்ணம்" என்பது பேராசிரியர் இந் நூற்பாவுக்குத் தரும் விளக்கம். செந்தொடையால் வரும் பாடல் ஒரூஉ வண்ணமாம் என்று சிலர் கூறும் கூற்றைப் பேராசிரியர் மறுத்துள்ளார். பாடலுள் அமைந்த சொற்பொருள் முற்றும் ஆற்றொழுக்காய் அமையாது, இடையிடையே முடிவுடைத் தொடர்களாய் அமைந்து வருதலாம் என்பது பேராசிரியரின் கருத்து. இதனை,

'யானே ஈண்டை யேனே என்னலனே
ஆனு நோயொடு கான லஃதே
துறைவன் தம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே"

என வரும் குறுந்தொகைப் பாட்டை (97) இவ் வண்ணத்திற்கு அவர் எடுத்துக் காட்டாகத் தருதலாலும் உணரலாம்.

'அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்'. (குறள். 427)

'தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை'. (குறள். 672)

'முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு'. (குறள். 786)

'அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு'. (குறள் 1081)

'நோக்கினள் நோக்கி இறைஞ்சினள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர்'. (குறள் 1093)

இவை போல் வருவன ஒரூஉ வண்ணப் பாடல்களாம்.

**எண்ணு வண்ணம்**

'எண்ணு வண்ணம் எண்ணுப் ப்யிலும்'
(தொல். செய்யு. 228)

என்பர். அதாவது பாடல் அடிகளில் செவ்வெண்ணினும், 'உம்'மை எண்ணினும், 'என'வெண்ணினும், 'என்று' எண்ணினும், பிறவும் யாதானுமோர் எண்ணினும் வருவது.

'படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு'. (குறள் 381)

'உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்'. (குறள் 756)

'அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு'. (குறள் 681)

'வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்'. (குறள் 471)

'நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு'. (குறள் 953)

'பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்'. (குறள் 146)

இவ்வாறு எண்ணுப் பயின்ற பாடல்கள் குறளகத்து வேறும் பல ஆங்காங்கே உள்ளன.

## அகைப்பு வண்ணம்

'அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும்'
(தொல். செய்யு. 229)

என்பர் தொல்காப்பியர். இந் நூற்பாவின் உரையில் பேராசிரியர், "இது விட்டுவிட்டுச் சேறலின் அகைப்பு வண்ணம் என்னும் பெயர் பெற்றது" என்று கூறி,

"'வாரா ராயினும் வரினு மவர்நமக்கு
யாரா கியரோ தோழி' (குறுந். 110)

என்புழி ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் அறுத்தொழுகிய அகைப்பு வண்ணமாம்" என்று எடுத்துக்காட்டும் விளக்கமும் தந்துள்ளார்.

'பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு'. (குறள் 1295)

'வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்'. (குறள் 1179)

'ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்'. (குறள் 989)

'தேறினும் தேறா விடினும் அறிவின்கண்
தேறான் பகாஅன் விடல்'. (குறள் 876)

'உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு'. (குறள் 255)

மேலே காணும் பாடல்களில் வரும் வினைச்சொற்கள் உடன்

பாடும் எதிர்மறையுமாக வருதலோடு ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் ஓசையறுதி செய்துவருதல் கவனிக்கத்தக்கது.

மாறுபட்ட முரண்ண சொற்பொருளாட்சியுடைய எதிர் மொழிகள் இடம் பெற்றுவரும் குறள்களை இவ் வண்ணத் தின் பாற்படுத்து உரைத்தலும் பொருத்தமாகும்.

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்'. (குறள் 505)

'கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு'. (குறள் 1214)

இப்பாடல்களில் பெருமை சிறுமை, கனவு நனவு என்னும் எதிர்மொழிகள் வந்துள்ளன. இவ்வாறு எதிர் மொழிகள் பெற்றுவரும் குறள்களும் பல உள.

**ஏந்தல் வண்ணம்**

சொல்லிய சொல்லினாலே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வதாகும்.

'ஏந்தல் வண்ணம்
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்'
(தொல். செய்யு. 231)

என்பர் தொல்காப்பியர். "ஏந்தல் என்பது மிகுதல். ஒரு சொல்லே மிக்குவருதலின் ஏந்தல் வண்ணம் என்றாயிற்று" என்கிறார் பேராசிரியர்.

'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று'. (குறள் 297)

'இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை'. (குறள் 310)

'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'. (குறள் 350)

'இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்'. (குறள் 623)

'எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்'. (குறள் 494)

'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'. (குறள் 341)

இங்ஙனமே சொற்பொருட் பின்வரு நிலையாக வரும் பாடல்கள் எல்லாவற்றையும் ஏந்தல் வண்ணம் என்று கொள்ளலாம்.

**வண்ணம் காணும் வகை**

இங்ஙனமாகப் பாக்களில் வரும் எழுத்தமைதி, சொல்லமைதி, தொடையமைதி, நடையமைதி முதலியவற்றை அடியாகக்கொண்டு பாடல்களின் சந்தத்தை அறுதியிட்டுக் காண மிகவும் நுணுகிய நோக்கு கற்பார்க்கு இன்றியமையாதது. தொடைகளைப் போல வண்ணங்களை எல்லாக் குறட்பாக்களுக்கும் வரையறுத்துரைப்பது அத்தனை எளிய செயலன்று. கற்பார் கருத்திற்கேற்ப ஒரு பாடலையே வெவ்வேறு வண்ணமாகக் கருதும் நிலையும் சிற்சில இடங்களில் நேரலாம். தொடையமைதியோடு வண்ண அமைதியும் பாக்களின் இசையை இனிமையுறச் செய்கின்றன. மேலே வண்ணங்கள் கூறப்பெற்ற பகுதியில் எடுத்துக்காட்டாகச் சிற்சில குறள்கள் தரப்பட்டுள்ளன. அவை போன்ற வண்ணமுடைய குறள்களை மேலும் கண்டு மகிழ்வதற்கு இவை வழிகாட்டியாய் அமையும்.

# 8. வனப்பு வகையில் திருக்குறள்

ஒவ்வொரு வகைப் பாவும் எழுத்து, அசை, சீர், தளை, அடி தொடைகளால் அமைந்து, பற்பல சந்த வேற்றுமை களோடு வந்து, ஒரு நூலுள் அமைகின்றன. அவ்வப் பாக்களில் பயின்றுவரும் தனிப் பண்புகள் நூலின் அழ கிற்கும் ஏதுவாகின்றன. இவ் வகை அழகினை 'வனப்பு' என்று கூறுவர். தொல்காப்பியர் அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என எட்டு வனப்பு வகைகளைத் தம் நூலுள் எடுத்துக் காட்டியுள்ளார். அவற்றுள் அடியளவால் குறைந்த குறட் பாக்களை 'அம்மை' என்னும் வனப்பாக அறிஞர் கருதுவர்.

அம்மையாவது அடியளவால் குறைந்த பாக்களாய் சிலவாகிய மெல்லிய மொழிகளால் அமைந்து வருவது என்பர்.

> 'வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
> சின்மென் மொழியால் தாய பனுவலோடு
> அம்மை தானே அடிநிமிர்பு இன்றே'.
>
> (தொல். செய்யு. 235)

என்பது தொல்காப்பியர் அம்மை வனப்பிற்கு இலக்கணம் கூறும் நூற்பா. இந்நூற்பாவிற்கு உரை விளக்கம் செய்யு மிடத்துப் பேராசிரியர், குறட்பாக்களை எடுத்துக் காட் டாகத் தந்து, இவ்வனப்பின் தன்மையை நன்கு விளக்கி யுள்ளார். எனவே, அவர்தம் உரை விளக்கத்தை இங்கே பார்ப்பது ஏற்புடைத்தாகும். அவ்வுரை வருமாறு :

> "சிலவாகிய மெல்லிய சொல்லோடும் இடையிட்டுவந்த பனு வல் இலக்கணத்தோடும் அடிநிமிர்வு இல்லது அம்மையாம் என்றவாறு.

'அடி நிமிராது' எனவே அம்மை என்பது முழுவதும் ஒரு செய்யுளாகல் வேண்டும். வேண்டவே, அஃது உறுப்பன்றாகிய செல்லும். அதனை உறுப்பு எனல் வேண்டுமாதலான் அடி நிமிராதுஎனப்பட்ட செய்யுள் உறுப்பாக அவை பல தொடர்ந்து முடிந்து ஈண்டுச் செய்யுளாம் என்பது. சிலவாக என்பது எண்ணுச் சுருங்குதல். மெல்லியவாதல், சிலவாகிய சொற்கள் எழுத்தினான் அகன்று காட்டாது சில எழுத்தினான் வருவது. அடிநிமிராது என்றது ஐந்தடியின் ஏறாது என்றவாறு.

தாய பனுவலோடு என்றது அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணம் சொல்லுப போன்று வேறிடையிடை அவையன்றியும் தாய்ச் செல்வது என்றவாறு. அஃதாவது பதினெண் கீழ்க்கணக்கு என உணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம் பொருள் இன்பம் என அவற்றுக்கு இலக்கணம் கூறிய பாட்டுப் பயின்று வருமாறும் கார்நாற்பது களவழி நாற்பது முதலாயின வந்தவாறும் கண்டு கொள்க.

'பொருள்கருவி காலம் வினையிடனொடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்' (குறள் 675)

என்பது இலக்கணம் கூறியதாகலின் பனுவலோடு என்றான்.

'மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று' (குறள் 1112)

என இஃது இலக்கிய மாகலான் தாயபனுவல் எனப்பட்டது.

இவை தனித்து வரினும் அவ்வனப்பு எனப்படும். தாவுதல் என்பது இடையிடுதல். இவ்விருவகையும் செய்யுள் எனப்படும். அம்மை என்பது குணப் பெயர். அமைதிப் பட்டு நிற்றலின் அம்மை என்று ஆயிற்று".

(தொல். செய்யு. 235 பேராசிரியர் உரை)

பேராசிரியர் அம்மை வனப்பிற்குத் தரும் மேற்கண்ட விளக்கத்திற்குத் திருக்குறள் சிறந்த எடுத்துக்காட்டாக இலங்குதல் காணலாம். முப்பாலாகிய திருக்குறளின் முதல் இரு பால்களாகிய அறத்துப்பாலும் பொருட்பாலும் வாழ்வியல் இலக்கணம் கூறுவன. காமத்துப்பால் முற்றும் வாழ்க்கை இலக்கியமாகும். நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் அமைந்த களவுகற்பு வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகளை விவரிப்பது இக் காமத்துப்பால்

பகுதி. பண்டைத் தமிழின் முக்கிய கூருகப் புலவர்களால் சிறப்பிக்கப்பெறும் அகம் புறம் என்னும் பொருளிலக் கணத்திற்கு இயைய அமைந்த இலக்கியக் கருவூலமாய்த் திகழ்கின்றது வள்ளுவர் தந்த வாழ்வியல் நூல்.

இதுகாறும் கூறியவற்ருல் எழுத்து, அசை தொடங்கி வண்ணம், வனப்பு ஈருக உள்ள யாப்பு அமைதிகள் எல்லாம் திருக்குறள் பாடல்களிலே தக்கவண்ணம் அமைந்துள்ளமை தெள்ளிதின் விளங்கும்.

> 'எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
> வழுக்கில் வனப்பணி வண்ணம்—இழுக்கின்றி
> என்றெவர் செய்தன வெல்லாம் இயம்பின்
> இன்றிவர் இன்குறள் வெண்பா'

என்பது திருவள்ளுவ மாலையினுள் காணப்பெறும் நச்சுமனரின் புகழ்மாலை.

# குறிப்புகள்

1. 'ஆராய்ச்சி' என்னும் காலாண்டுப் பத்திரிகையில் திரு. க. ஜகன்னாதன் அவர்கள், 'சங்கச் செய்யுளில் யாப்பு வளர்ச்சி' என்னும் பொருள்பற்றி எழுதிய கட்டுரையில் தமிழில் பாவகை வளர்ந்த வரலாறு பின்வருமாறு குறிக்கப்பட்டிருக்கிறது :

"அகவற்பாவிலிருந்து இன்றைய பல்வேறு வகையான சந்த வடிவங்கள் வரை வெவ்வேறு காலகட்டங்களில் இந்த யாப்பு முறை அவற்றின் சமூக ரீதியான கருப்பொருள்களின் தன்மைகளை வெளியிடும் உருவங்களாக வளர்ந்துள்ளன" (ஆராய்ச்சி : மலர் 1, இதழ் 2, பக். 217).

"சிறப்பு மிக்க முதன்மையான செய்யுள் இலக்கியம் சங்க நூல்களில் பெரும்பாலும் ஆசிரியப்பாவாகவும், வஞ்சியாகவும், கலியாகவும், பின்னர் குறட்பா வெண்பாவாகவும் முகிழ்ந்து, தரவு, தாழிசை, கொச்சகம், விருத்தம் எனப் பலவாக மலர்ந்து, பின்னர் சந்தப்பாடல்களாகவும் விதவிதமான சிந்துகளாகவும் விளைந்து, செழித்து, இன்று தமிழ்க் கவிதையுலகு பல்வேறுபட்ட பாவடிவங்களைக் கொண்டதாக விளங்குகிறது. இடையே யமகம், பந்தம், நிரோட்டகம், சிலேடை, ஏகபாதம், ஈரடிமேல் வைப்பு, நாலடிமேல் வைப்பு, திருமுக்கால், திருவிருக்குக்குறள், மொழிமாற்று, வழிமொழி, கோமூத்திரி போன்ற சித்திர விசித்திர உருவங்களும் தோன்றின" (ஆராய்ச்சி : மலர் 1, இதழ் 2, பக். 218).

2. ஓரடி முக்கால் : "நிகரில் வெள்ளைக்கு என்று சிறப்பித்த அதனால் குறள் வெண்பாவினை 'ஓரடி முக்கால்' என்றும், சிந்தியல் வெண்பாவினை 'ஈரடி முக்கால்' என்றும், நேரிசை வெண்பாவினை 'நேரிசை மூவடி முக்கால்' என்றும், இன்னிசை வெண்பாவினை 'இன்னிசை மூவடி முக்கால்' என்றும், பஃறொடை வெண்பாவினைப் 'பலவடி முக்கால்' என்றும் பெயரிட்டு வழங்குவர் ஒருசார் ஆசிரியர் எனக் கொள்க" (யாப்பருங்கலக் காரிகை, 25, உரை).

3. **தூங்கிசைச் செப்பலோசை பயின்றுவரும் குறள்கள் :**

3, 23, 28, 39, 63, 80, 92, 98, 124, 131, 133, 152, 153, 188, 193, 195, 202, 215, 224, 239, 265, 270, 280, 283, 304, 310, 341, 342, 347, 385, 391, 418, 419, 425, 429, 431, 444, 449, 451, 457, 465, 467, 477, 483, 488, 505, 508, 522, 531, 535, 594, 623, 625, 633, 637, 651, 652, 664, 666, 690, 693, 703, 706, 760, 774, 783, 785, 796, 811, 847, 856, 863, 873, 961, 975, 978, 979, 980, 1010, 1031, 1042, 1048, 1052, 1055, 1085, 1090, 1105, 1108, 1116, 1118, 1121, 1159, 1193, 1199, 1200, 1201, 1211, 1213, 1224, 1235, 1238, 1242, 1266, 1273, 1277, 1289, 1301, 1309, 1322, 1324. [110]

இந்த எண்குறிப்பு ஜி. யு. போப் பாதிரியாரின் திருக்குறள் மொழி பெயர்ப்பு (1886) முகவுரை பக்கம் xxviii-இல் காணப் படுகிறது. மூவகைச் செப்பலோசையிலும் அமைந்த குறள்களை ஆராய்ந்து முதன்முதலாகக் குறிப்பு எழுதியவர் இவரே.

4. திவ்யப் பிரபந்தம்-பெரிய திருமொழிப் பாசுரங்களில் தாளம் 'ஒத்து' எனக் குறிக்கப்பட்டிருக்கிறது.

5. தொடை விகற்பம் : யாப்பருங்கலக் காரிகை, 19 உரை.

6. **இரு விகற்பமாய் வந்த குறட்பாக்கள் :**

17, 21, 31, 34, 42, 43, 46, 51, 59, 61, 62, 70, 78, 81, 84, 88, 92, 93, 96, 97, 98, 101, 103, 104, 106, 111, 117, 118, 120, 121, 122, 123, 132, 136, 137, 140, 142, 143, 144, 147, 150, 154, 156, 159, 163, 164, 166, 168, 169, 171, 174, 176, 178, 180, 185, 187, 189, 192, 193, 194, 196, 199, 206, 207, 210, 211, 219, 229, 232, 234, 238, 239, 240, 241, 242, 243, 246, 247, 248, 252, 256, 262, 263, 274, 275, 276, 277, 278, 283, 284, 285, 286, 287, 289, 295, 298, 300, 301, 306, 311, 312, 315, 316, 317, 319, 325, 329, 330, 337, 339, 341, 343, 346, 349, 352, 353, 358, 367, 374, 378, 379, 384, 387, 394, 397, 401, 409, 410, 413, 416, 417, 419, 421, 425, 427, 430, 433, 435, 438, 439, 443, 449, 453, 456, 457, 461, 464, 465, 474, 479, 481, 482, 483 484, 488, 492, 495, 496, 498, 502, 503, 504, 514, 518, 522, 523, 525, 527, 529, 536, 551, 559, 562, 565, 566, 568, 574, 576, 580, 586, 587, 593, 597, 601, 604, 606, 607, 610, 612, 616, 617, 618, 626, 627, 632, 634, 636, 638, 648, 651, 659, 661, 663, 667, 668, 670, 674, 680, 683, 685, 687, 689, 694, 696, 703, 705, 707, 708, 714, 718, 719, 720, 726, 727, 728, 730, 732, 734, 737, 742, 743, 744, 745, 749, 750, 753, 754, 755, 757, 760, 762, 763, 764, 769, 772, 775, 776, 782, 783, 784, 785, 787, 789, 792, 795, 797, 799, 803, 804, 810, 813, 817, 819, 820, 823, 824, 825, 826, 827, 829, 832, 835, 836, 837, 839, 841, 842, 844, 849, 851, 852, 853, 857, 860,

865, 867, 869, 873, 877, 879, 880, 881, 884, 885, 888, 890, 892, 893, 901, 909, 913, 914, 915, 917, 919, 933, 938, 942, 954, 955, 960, 968, 971, 972, 974, 976, 977, 981, 982, 983, 986, 993, 994, 995, 997, 1000, 1005, 1010, 1011, 1013, 1016, 1017, 1019, 1027, 1028, 1029, 1030, 1035, 1036, 1037, 1045, 1049, 1051, 1056, 1057, 1060, 1064, 1066, 1068, 1069, 1070, 1075, 1081, 1082, 1084, 1086, 1091, 1096, 1102, 1103, 1104, 1113, 1115, 1124, 1127, 1129, 1130, 1131, 1132, 1134, 1135, 1137, 1148, 1150, 1154, 1156, 1160, 1161, 1163, 1170, 1171, 1172, 1174, 1175, 1177, 1181, 1182, 1185, 1189, 1190, 1191, 1207, 1208, 1213, 1214, 1215, 1216, 1217, 1219, 1220, 1223, 1229, 1230, 1234, 1235, 1238, 1239, 1241, 1243, 1246, 1247, 1248, 1249, 1253, 1266, 1267, 1268, 1270, 1275, 1276, 1279, 1280, 1282, 1288, 1289, 1291, 1304, 1315, 1317, 1320, 1323. [431]

7. *ஒருவிகற்பக் குறட்பாவில் ஒரூஉ எதுகை பெற்றவை :*

65, 72, 127, 128, 133, 153, 167, 191, 202, 214, 269, 296, 302, 309, 313, 347, 355, 398, 406, 412, 423, 434, 466, 497, 506, 531, 535, 541, 548, 573, 588, 615, 633, 644, 647, 660, 690, 692, 695, 733, 758, 778, 802, 830, 831, 834, 858, 859, 872, 894, 920, 926, 957, 963, 1054, 1062, 1079, 1080, 1111, 1112, 1141, 1192, 1222, 1236, 1237, 1242, 1257, 1314. [68]

8. *4-5ஆம் சீர்களில் மோனை நயம் பெற்ற பாடல்கள் :*

21, 31, 34, 46, 59, 62, 70, 81, 88, 96, 97, 103, 111, 117, 120, 121, 122, 133, 136, 143, 144, 147, 150, 153, 154, 159, 163, 164, 166, 168, 171, 174, 176, 178, 180, 185, 187, 192, 193, 196, 199, 200, 202, 207, 219, 232, 234, 238, 239, 241, 243, 246, 252, 262, 263, 275, 283, 284, 285, 287, 296, 306, 309, 317, 325, 329, 330, 339, 343, 347, 352, 353, 355, 358, 367, 374, 378, 379, 384, 387, 413, 416, 417, 419, 425, 438, 439, 443, 453, 456, 457, 464, 466, 482, 483, 484, 492, 498, 514, 518, 522, 523, 527, 536, 551, 559, 562, 565, 566, 580, 586, 587, 593, 602, 604, 606, 607, 618, 623, 627, 629, 636, 638, 651, 661, 663, 668, 672, 680, 683, 685, 687, 692, 694, 696, 707, 719, 722, 726, 727, 728, 730, 732, 733, 734, 737, 744, 748, 749, 753, 754, 760, 762, 764, 776, 783, 784, 787, 795, 803, 810, 817, 820, 826, 829, 832, 837, 839, 844, 849, 851, 852, 853, 857, 860, 869, 877, 884, 885, 891, 892, 893, 894, 895, 901, 909, 913, 915, 917, 919, 938, 942, 954, 955, 968, 972, 976, 977, 986, 994, 997, 1010, 1013, 1019, 1028, 1029, 1035, 1036, 1054, 1082, 1084, 1113, 1130, 1134, 1135, 1148, 1154, 1160, 1171, 1172, 1174, 1175, 1177, 1181, 1189, 1190, 1192, 1213, 1214, 1215, 1216, 1219, 1220, 1223, 1229, 1235, 1238, 1241, 1243, 1246, 1248, 1249, 1266, 1267, 1268, 1276, 1280, 1286, 1289, 1304, 1305, 1317, 1320, 1323. [254]

9. 4, 5, 6 ஆம் சீர்களில் மோனை நயம் உள்ள பாடல்கள்:

17, 42, 78, 106, 123, 132, 137, 194, 276, 286, 465, 497, 601, 670, 689, 755, 782, 865, 879, 880, 888, 914, 933, 995, 1230, 1270, 1279, 1288. [28]

10. 4, 5, 6, 7 ஆம் சீர்களில் மோனை நயம் வாய்ந்தவை:

568, 864. [2]

10. (அ) 4, 5, 7, ஆம் சீர்களில் மோனை நயம் பெற்றவை:

156, 189, 248, 295, 573, 1234. [6]

10. (ஆ) 4ஆம் 6-ஆம் சீர்களில் மோனை நயம் வாய்ந்தவை:

142, 410, 436, 495, 644, 823, 824, 842, 1064, 1067, 1127. [11]

10. (இ) 4ஆம் 7ஆம் சீர்களில் மோனை நயம் வாய்ந்தவை:

118, 423, 742, 971, 1275. [5]

11. இருவிகற்பமாய் வந்த பாடல்களில் ஒரூஉ எதுகை பெற்று வந்துள்ளவை:

43, 51, 211, 256, 278, 397, 474, 578, 632, 743, 792, 873, 983, 1016, 1017, 1103, 1104, 1124, 1163, 1191, 1247. [21]

இவற்றுள் வேறுவகையான தொடை விகற்பங்கள் உள்ளன.

12. A Grammar of the high Dialect of the Tamil Language termed Shen-Tamil, by Constant Joseph Beschi, S. J., translation by B. G. Babington, Madras, 1822. pp. 107-108.

13. "Sometimes, though rarely you will find three feet only in the first line, and four in the second line." (A Grammar of the High Dialect of the Tamil Language, Termed Shen-Tamil: Second Edition P. 107 Rule 69.

14. வீரமாமுனிவர் ஆக்கிய தொன்னூல் விளக்கத்தில் இச் செய்தி நூலகத்தோ அல்லது உரை விளக்கத்திலோ குறிப்பிடப் படவில்லை.

'வெள்ளைக் கியற்சீர் வெண்சீர் விரவி
ஏற்கும் அளவடி ஈற்றடி சிந்தடி
ஈற்றுச்சீர் அசைச்சீர் உக்குறள் மிகலுமாம்'

(யாப்பதிகாரம், செய்யு. 2)

என்பது தொன்னூல் விளக்கத்தில் வெண்பா இயல்பு உரைக்கும் நூற்பா. இங்கே இவர் தொல்காப்பியர் முதலாக வரும் இலக்கண நூலார் உரைத்த மரபுகளையே பின்பற்றி உரைத்துள்ளார். எனவே, அவர் தமது செந்தமிழில் கூறிய புதுமைக் கருத்துப் பின்னளில் ஆய்ந்து கண்ட முடிபாதல் வேண்டும்.

15. திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தின் 'திருவள்ளுவர்திருநாள் விழாமலர்'—1968. பக். 107-108.

16. "போலி யெழுத்தால் வரும் பயன் யாதோவெனின் செய்யுளில் வரும் எதுகைக்கண் இவ்வாறு கொள்ள நிற்றலே.

"அதனை, 'ஐயென் னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்' என்பதன்கண்ணும், 'கையகத் ததுவது பொய்யா காதே' என்ப தன்கண்ணும்,

'கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்'

என்பதன் கண்ணும்,

'ஒளவிய நெஞ்சத்தா னாக்கமும் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்'

என்பதன்கண்ணும் வருமெதுகைத் தொடைகளில், 'மெய் பெற' என்பதற் கியைய 'ஐயென்' என்பதை 'அய்யென்' எனவும், 'பொய்' என்பதற்கியைய 'கை' என்பதைக் 'கய்' எனவும், 'மெய்' என்பதற்கியைய 'கை' யென்பதைக் 'கய்' எனவும், 'செவ்வியான்' என்பதற்கியைய 'ஒளவியம்' என்பதை 'அவ்வியம்' எனவும் கொள்ளநிற்றல் காண்க.

"இவ்வாறு எதுகைக்கண் போலியாகக் கொள்ள நிற்றல் பற்றியே, 'ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய' என்னும் சூத்திரவுரையின்கண் நச்சினார்க்கினியரும் 'ஐகார ஒளகாரங்கள் போலி வகையாற் கிளையெழுத் தெனப்படு' மென்றார்.

"இனி, ஆசிரியர் தொல்காப்பியரும் 'அகர இகர மைகார மாகு' மென்றும், 'அகர உகர மௌகார மாகும்' என்றும், இகர உகரங் களை முன்னர்க் கூறிப் பின்னர்,

'அகரத் திம்பர் யகரப் புள்ளியு
மையென் னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்'

என யகரத்தை வேறு வைத்துக் கூறியதும் போலி யெழுத்தா மாற்றை நன்கு புலப்படுத்தற்கேயாம்."

(போலி எழுத்து: புன்னைலக் கட்டுவன் சி. கணே சையர்: செந்தமிழ் தொகுதி 22. பகுதி 3—தொல் காப்பியம் எழுத்ததிகாரம்: நச்சினார்க்கினியர் உரைப் பதிப்பு-பிற்சேர்பு, பக். x-xi).

17. செந்தமிழ்: தொகுதி 41, பகுதி 1, பக். 1-8.

இங்கே பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் ஆய்த-ஓசை யகர-ஓசையாகவும் வந்தமை பற்றி எடுத்து விளக்கியதன் சுருக்கம் பின்வருமாறு:

"ஆய்தவெழுத்து, தொல்காப்பியனார் காலத்தே தான் சார்ந்த வல்லெழுத்துச் சாயலான ஓசையையும், இடைக் காலத்தில் அய், அஇ என்ற ஓசைகளையும், பிற்காலங்களிலே குகரச் சாயலான ஓசையையும் ஏற்று ஒலித்து வந்த செய்தி விளக்க மாகும்."

என்று தமது ஆராய்ச்சி முடிவை அறிவித்துள்ளார்கள் (பக். 8). இதுபற்றி அவர்கள் விளக்கும்பொழுது,

"'ஐ' என்பதன் போலியான 'அஃ' என்பது மேற்கூறியவாறு 'அய்' என்ற ஓசை பெறுதற்கு முதலெழுத்தின் பொருத்தம் உண்டு. அம்முறையில், இஃது, எஃகு முதலியனவும் அகர வோசையை முதலிற் பெற்று இசைப்பதற்குச் சிறிதும் இட மில்லை. அதனால், தனியாய்தம் யகரவொற்றோசையே உடைய தென்றும், அஃது அகரம் ஒழிந்த குற்றுயிர்களை அடுத்துவரும் போது 'ய்' என்ற ஓசை மட்டுமே பெறுதற்குரியது எனவும் உணர்க. அஃதாவது—'இஃது' என்பது 'இய்து' எனவும் 'எஃகு' என்பது 'எய்கு' எனவும் இசைக்கப்பெறும் என்பதாம். உதாரணமாக,

'செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்'

என்ற திருக்குறள் நோக்கத்தக்கது. இதன் எதுகை மொழி களினின்று, 'எஃகதனில்' என்பதிலுள்ள ஆய்தவொலி 'எய்க தனில்' என வள்ளுவர் காலத்தும் வழங்கியதென்பது நன் கறியப்படும்". (பக். 4)

என்று விவரித்துச் சிந்தாமணி, நீலகேசி, திருவாய்மொழி முதலிய நூல்களினின்றும் பாடல்களை எடுத்துக் காட்டி இதனை மேலும் தெளிவுபடுத்தியுள்ளார்கள். செந்தமிழ்ப் பத்திராசிரியர் திரு நாராயணையங்கார் அவர்கள் எழுதிய 'ஆய்த வெழுத்தின் வரலாறு' என்னும் கட்டுரையும் எதுகையமைப்பில் ஆய்தத்தின் நிலையை மேலும் விளக்கியுரைக்கிறது (செந்தமிழ்: தொகுதி 41, பகுதி 3, பக். 81-86).

18. உயிரெதுகை பெற்ற குறட்பா:

20, 64, 79, 105, 126, 129, 130, 131, 149, 170, 259, 307, 385, 398, 412, 452, 476, 531, 560, 644, 647, 766, 793, 848, 856, 868, 941, 957, 1054, 1062, 1106, 1120, 1133, 1186, 1188, 1204, 1232, 1251, 1278, 1309, 1325. [41]

19. ஒரூஉத் தொடையாக உயிரெதுகை பெற்றவை:

168, 196, 274, 277, 295, 298, 319, 394, 401, 412, 504, 621, 647, 660, 668, 718, 726, 745, 781, 783, 823, 834, 835, 853, 858, 859, 881, 920, 957, 976, 982, 1079, 1081, 1112, 1115, 1130, 1134, 1141, 1181, 1189, 1190, 1236, 1238, 1239, 1242, 1257, 1314. [47]

20. மூன்ரும் எழுத்தொன்று எதுகை:

292, 781. [2]

21. உயிரெதுகை பெற்றுவந்த பாடல்களில் மூன்ரும் எழுத்து ஒத்து வந்தவை:

20, 79, 126, 129, 130, 149, 307, 398, 476, 647, 1120, 1186, 1188, 1232, 1251, 1325. [16]

22. வருக்க எதுகை:

9, 10, 11, 37, 89, 115, 133, 146, 152, 190, 202, 203, 208, 215, 231, 253, 272, 320, 334, 399, 400, 440, 447, 448, 462, 475, 507, 509, 512, 515, 520, 537, 539, 549, 554, 578, 599, 620, 633, 640, 653, 662, 676, 698, 700, 704, 736, 739, 768, 791, 794, 801, 805, 816, 821, 830, 831, 834, 838, 843, 876, 918, 924, 962, 1015, 1020, 1089, 1095, 1099, 1108, 1109, 1121, 1132, 1139, 1147, 1162, 1179, 1183, 1211, 1224, 1242, 1257, 1264, 1271, 1285, 1286, 1297, 1307, 1310, 1312, 1322, 1330. [92]

23. நெடில் எதுகை:

27, 87, 279, 471, 550, 585, 711, 713, 723. [9]

24. இனவெதுகை–வல்லின எதுகை:

58, 65, 85, 90, 112, 114, 119, 213, 220, 227, 332, 335, 340, 355, 386, 396, 423, 446, 490, 533, 561, 642, 686, 695, 724, 802, 887, 944, 950, 951, 1003, 1071, 1085, 1093, 1165, 1302. [36]

25. மெல்லின எதுகை:

45, 60, 63, 68, 74, 91, 110, 160, 184, 251, 264, 271, 444, 469,

494, 497, 543, 681, 715, 740, 758, 895, 916, 983, 988, 990, 992, 1009, 1042, 1072, 1077, 1092, 1100, 1140, 1146, 1155, 1244, 1258, 1265, 1277, 1290, 1299, 1315, 1319. [44]

26. இடையின எதுகை:

296, 299, 404, 592, 677, 731, 798, 1187, 1316, 1324. [10]

27. ஒற்றெதுகை:

140, 219, 238, 319, 325, 453, 762, 820, 1016, 1017, 1103, 1132, 1163, 1174, 1191, 1215, 1217, 1223, 1288. [19]

28. ஆசெதுகை:

110, 291, 355, 423, 944, 1077. [6]

28. (அ) சீரிடை ஆசெதுகை:

206. [1]

29. முரண் தொடை:

79, 94, 99, 126, 237, 250, 304, 398, 517, 535, 615, 628, 637, 649, 669, 673, 721, 854, 861, 871, 963, 966, 973, 978, 1052, 1152, 1196, 1225, 1226, 1227, 1284, 1328. [32]

30. அளபெடைத் தொடை:

15, 94, 364, 544, 585, 653, 809, 840, 940, 1087, 1097, 1143, 1176, 1200, 1210, 1263, 1292, 1295. [18]

31. ஈரடிகளிலும் இணை மோனை பெற்றவை:

4, 15, 29, 35, 42, 45, 51, 75, 94, 106, 123, 130, 153, 155, 182, 194, 228, 229, 234, 247, 248, 259, 266, 271, 282, 297, 310, 341, 346, 359, 362, 385, 440, 453, 470, 497, 499, 504, 519, 520, 524, 526, 538, 546, 553, 556, 568, 583, 601, 635, 647, 670, 678, 679, 683, 684, 689, 711, 714, 724, 736, 745, 755, 757, 768, 782, 798, 800, 814, 826, 834, 851, 861, 862, 865, 868, 880, 914, 924, 933, 936, 939, 944, 996, 1032, 1042, 1057, 1068, 1079, 1081, 1110, 1130, 1137, 1143, 1158, 1191, 1199, 1219, 1232, 1250, 1262, 1270, 1271, 1288, 1303. [105]

32. இணை மோனை-முதலடியில் மட்டும்:

4, 10, 27, 31, 34, 43, 44, 53, 54, 64, 88, 91, 97, 101, 114, 133, 143, 154, 156, 158, 159, 164, 167, 170, 171, 176, 180, 181, 184, 189, 192, 195, 196, 199, 219, 231, 232, 238, 239, 242, 245, 246, 252, 262, 263,

265, 268, 269, 285, 287, 306, 311, 315, 316, 322, 343, 352, 355, 358, 365, 373, 378, 379, 384, 387, 396, 407, 417, 423, 452, 457, 478, 490, 492, 501, 502, 503, 507, 529, 537, 541, 544, 550, 558, 573, 581, 600, 602, 604, 606, 607, 610, 626, 629, 631, 634, 638, 645, 655, 658, 668, 671, 680, 681, 682, 685, 691, 694, 703, 705, 706, 707, 718, 719, 726, 732, 734, 735, 747, 748, 753, 761, 762, 769, 774, 775, 795, 810, 816, 822, 850, 852, 853, 857, 858, 867, 869, 871, 876, 877, 885, 886, 891, 893, 895, 901, 909, 913, 915, 919, 930, 937, 938, 958, 960, 966, 969, 971, 973, 990, 992, 994, 1004, 1007, 1019, 1051, 1054, 1076, 1086, 1091, 1093, 1100, 1106, 1109, 1112, 1116, 1120, 1122, 1133, 1134, 1160, 1164, 1169, 1170, 1171, 1175, 1177, 1178, 1189, 1192, 1193, 1197, 1202, 1213, 1217, 1218, 1220, 1229, 1235, 1236, 1243, 1251, 1255, 1263, 1267, 1275, 1276, 1280, 1283, 1291, 1305, 1307, 1309, 1310, 1323, 1326. [216]

33. இணை மோனை-இரண்டாம் அடியில் மட்டும்:

3, 5, 6, 7, 12, 13, 14, 18, 19, 22, 23, 24, 26, 36, 38, 39, 40, 48, 55, 56, 60, 71, 73, 74, 78, 79, 83, 85, 89, 98, 99, 100, 109, 112, 124, 125, 126, 127, 131, 137, 138, 139, 146, 148, 162, 172, 175, 188, 191, 203, 218, 222, 227, 230, 236, 240, 253, 273, 276, 278, 281, 284, 286, 301, 333, 338, 344, 345, 348, 350, 351, 356, 369, 377, 383, 395, 398, 399, 400, 405, 406, 414, 415, 428, 430, 441, 442, 445, 446, 451, 458, 459, 465, 468, 471, 472, 474, 480, 481, 487, 493, 494, 509, 517, 518, 525, 530, 532, 539, 540, 547, 548, 555, 560, 561, 563, 564, 569, 588, 589, 591, 592, 596, 609, 612, 617, 621, 622, 624, 625, 646, 649, 662, 665, 667, 675, 676, 677, 688, 696, 698, 700, 702, 706, 708, 712, 713, 721, 723, 731, 750, 760, 765, 766, 777, 789, 790, 794, 799, 801, 808, 809, 815, 818, 821, 833, 843, 854, 866, 878, 879, 881, 883, 887, 888, 889, 896, 897, 899, 902, 903, 904, 905, 906, 907, 910, 911, 912, 917, 918, 935, 949, 953, 957, 973, 980, 985, 995, 999, 1002, 1006, 1014, 1017, 1021, 1022, 1025, 1031, 1041, 1044, 1053, 1063, 1065, 1083, 1096, 1097, 1098, 1099, 1102, 1107, 1113, 1117, 1129, 1138, 1141, 1144, 1147, 1151, 1167, 1187, 1198, 1201, 1204, 1207, 1209, 1214, 1227, 1228, 1231, 1239, 1248, 1253, 1254, 1257, 1279, 1281, 1292, 1294, 1297, 1298, 1306, 1314, 1316, 1324, 1325. [254]

34. இணை எதுகை-ஈரடியிலும்:

36, 110, 184, 225, 282, 297, 310, 362, 375, 411, 493, 494, 520, 524, 553, 556, 571, 596, 724, 812, 854, 886, 948, 985, 1101. [25]

35. இணை எதுகை-முதலடியில் மட்டும்:

4, 5, 10, 22, 56, 71, 107, 109, 517, 519, 558, 582, 583, 608, 645, 658, 676, 747, 801, 856, 895, 898, 927, 1093, 1110, 1117, 1193, 1293. [28]

36. இணை எதுகை-இரண்டாம் அடியில் மட்டும்:

33, 55, 89, 125, 191, 247, 280, 293, 318, 341, 350, 470, 487, 525, 540, 543, 577, 588, 591, 612, 622, 625, 634, 648, 659, 670, 677, 679, 735, 750, 762, 769, 771, 799, 813, 815, 824, 834, 870, 899, 902, 905, 973, 1017, 1025, 1027, 1041, 1063, 1139, 1140, 1207, 1256. [52]

37. இணை முரண்-முதலடிக்கண்:

89, 115, 290, 292, 395, 511, 562, 642, 691, 709, 730, 744, 747, 867, 932, 941, 1005, 1015, 1269, 1306, 1326. [21]

38. இணை முரண்-இரண்டாம் அடிக்கண்:

420, 794, 811, 812, 815, 1030. [6]

39. பொழிப்பு மோனை-ஈரடிகளிலும்:

9, 135, 179, 288, 363, 382, 390, 489, 585, 653, 716, 751, 1206, 1259. [14]

40. பொழிப்பு மோனை-முதலடியில் மட்டும்:

3, 6, 7, 18, 22, 23, 24, 30, 36, 46, 48, 57, 96, 101, 104, 113, 120, 138, 144, 146, 148, 149, 157, 161, 165, 169, 172, 185, 188, 191, 210, 211, 214, 216, 217, 236, 251, 261, 264, 273, 275, 286, 296, 301, 308, 312, 318, 331, 344, 351, 356, 365, 366, 371, 374, 376, 383, 386, 393, 394, 401, 404, 422, 425, 435, 436, 441, 442, 443, 444, 446, 459, 462, 474, 480, 487, 508, 512, 513, 515, 521, 532, 533, 547, 549, 551, 560, 561, 563, 569, 570, 575, 578, 584, 591, 593, 596, 609, 611, 625, 627, 639, 640, 641, 642, 654, 659, 671, 676, 693, 697, 699, 700, 701, 702, 715, 720, 728, 763, 765, 784, 797, 799, 805, 811, 812, 815, 817, 818, 823, 832, 836, 847, 864, 873, 874, 904, 921, 922, 928, 934, 937, 945, 946, 947, 957, 968, 987, 988, 998, 1009, 1012, 1013, 1021, 1025, 1038, 1040, 1053, 1056, 1075, 1083, 1102, 1107, 1114, 1117, 1149, 1153, 1179, 1184, 1187, 1195, 1203, 1206, 1209, 1214, 1221, 1226, 1231, 1241, 1252, 1258, 1260, 1272, 1279, 1290, 1301, 1304, 1308, 1314, 1324, 1325, 1329. [192]

41. பொழிப்பு மோனை-இரண்டாம் அடியில் மட்டும்:

33, 52, 69, 77, 156, 189, 200, 201, 231, 249, 250, 255, 258, 294,

310, 357, 426, 448, 486, 506, 542, 573, 574, 595, 631, 632, 641, 673, 674, 681, 694, 738, 739, 741, 759, 792, 828, 853, 898, 970, 1015, 1043, 1080, 1100, 1101, 1105, 1131, 1152, 1156, 1164, 1178, 1180, 1196, 1234, 1235, 1283, 1287, 1318, 1319. [59]

42. பொழிப்பு எதுகை-முதலடியில்:

64, 119, 127, 245, 441, 605, 614, 624, 693, 791, 983, 1311. [12]

43. பொழிப்பு எதுகை-இரண்டாம் அடியில்:

108, 739, 875, 1139. [4]

44. பொழிப்பு முரண்:

86, 100, 186, 264, 375, 436, 442, 505, 558, 907, 1018, 1104, 1281, 1295. [14]

45. ஒரூஉ மோனை:

1, 28, 33, 49, 52, 65, 72, 73, 80, 85, 89, 90, 112, 128, 131, 173, 215, 227, 267, 290, 292, 294, 333, 335, 347, 397, 398, 403, 412, 429, 430, 434, 447, 451, 579, 598, 616, 643, 667, 669, 673, 686, 692, 746, 796, 845, 855, 875, 878, 883, 889, 899, 905, 906, 911, 916, 945, 953, 981, 1008, 1047, 1049, 1055, 1092, 1118, 1121, 1136, 1165, 1173, 1211, 1212, 1228, 1246, 1273, 1315. [75]

46. ஒரூஉ எதுகை:

17, 21, 31, 34, 42, 46, 59, 61, 62, 65, 72, 78, 81, 84, 88, 92, 93, 96, 97, 98, 101, 103, 104, 106, 111, 117, 118, 121, 122, 123, 127, 128, 132, 133, 136, 137, 140, 142, 143, 144, 147, 150, 153, 154, 156, 159, 163, 164, 166, 167, 168, 169, 171, 174, 176, 178, 180, 185, 187, 189, 191, 192, 193, 194, 196, 199, 202, 206, 207, 210, 214, 219, 229, 232, 234, 238, 239, 240, 241, 242, 243, 246, 247, 248, 252, 262, 263, 269, 274, 275, 276, 277, 283, 284, 285, 286, 287, 289, 295, 296, 298, 301, 302, 306, 309, 312, 313, 315, 316, 317, 319, 325, 329, 330, 337, 339, 343, 346, 347, 349, 352, 353, 355, 358, 365, 367, 374, 378, 379, 384, 387, 394, 398, 401, 406, 409, 410, 412, 413, 416, 417, 419, 421, 423, 425, 430, 433, 434, 435, 438, 439, 443, 449, 453, 456, 457, 461, 464, 465, 466, 479, 481, 482, 483, 484, 488, 492, 495, 496, 497, 498, 502, 503, 504, 506, 514, 522, 523, 525, 527, 529, 531, 535, 536, 541, 548, 551, 559, 562, 565, 566, 568, 573, 574, 576, 580, 586, 587, 588, 593, 597, 601, 604, 606, 607, 610, 615, 616, 617, 618, 626, 627, 633, 634, 636, 644, 647, 648, 651, 660, 661, 663, 667, 668, 670, 674, 680, 683, 685, 687, 689, 690, 692, 694, 695, 696, 708, 714, 718, 720, 726, 727,

728, 730, 732, 733, 734, 737, 742, 744, 745, 749, 750, 753, 754, 755, 757, 758, 760, 762, 763, 764, 769, 772, 775, 776, 778, 781, 782, 783, 784, 785, 787, 789, 795, 797, 799, 802, 803, 804, 813, 817, 819, 820, 823, 824, 825, 826, 827, 829, 830, 831, 834, 835, 836, 837, 839, 841, 842, 844, 849, 851, 852, 853, 857, 858, 859, 860, 865, 867, 869, 872, 877 879, 880, 881, 884, 885, 888, 890, 892, 893, 894, 901, 909, 913, 914, 915, 917, 919, 920, 926, 933, 938, 942, 954, 955, 957, 960, 963, 968, 971, 972, 974, 976, 977, 981, 982, 986, 993, 994, 995, 997, 1000, 1005, 1010, 1011, 1013, 1019, 1027, 1028, 1029, 1030, 1035, 1036, 1037, 1045, 1049, 1051, 1054, 1056, 1057, 1060, 1062, 1064, 1066, 1068, 1069, 1070, 1075, 1079, 1080, 1081, 1084, 1086, 1091, 1096, 1102, 1111, 1112, 1115, 1127, 1129, 1130, 1131, 1134, 1135, 1137, 1141, 1148, 1150, 1154, 1156, 1160, 1161, 1171, 1172, 1174, 1175, 1177, 1181, 1182, 1185, 1189, 1190, 1192, 1207, 1213, 1214, 1215, 1216, 1217, 1219, 1220, 1222, 1223, 1229, 1230, 1234, 1235, 1236, 1237, 1238, 1239, 1241, 1242, 1243, 1246, 1248, 1249, 1253, 1257, 1267, 1268, 1270, 1275, 1276, 1279, 1282, 1288, 1289, 1291, 1304, 1305, 1314, 1317, 1320, 1323. [458]

47. ஒரூஉ முரண் :

59, 121, 240, 298, 319, 409, 427, 430, 460, 496, 616, 643, 708, 826, 835, 973, 976, 979, 1048, 1083, 1124, 1186, 1218. [23]

48. குறிப்பு 7இல் பார்க்க.

49. கூழை மோனை :

19, 25, 41, 81, 87, 136, 139, 140, 141, 175, 198, 233, 240, 278, 284, 317, 350, 367, 369, 377, 411, 431, 448, 450, 461, 486, 493, 498, 510, 527, 536, 555, 564, 575, 592, 630, 662, 677, 687, 688, 698, 704, 721, 742, 752, 764, 766, 790, 808, 833, 860, 863, 897, 912, 929, 935, 973, 1003, 1010, 1022, 1035, 1058, 1063, 1082, 1087, 1088, 1097, 1113, 1114, 1157, 1200, 1246, 1268, 1272, 1298. [75]

50. மேற்கதுவாய் மோனை :

11, 13, 60, 71, 105, 108, 281, 300, 302, 309, 370, 466, 473, 509, 511, 534, 543, 571, 577, 590, 613, 628, 665, 690, 729, 731, 741, 759, 767, 807, 809, 866, 903, 908, 910, 923, 930, 951, 965, 1044, 1050, 1052, 1061, 1207, 1265. [45]

51. மேற்கதுவாய் எதுகை :

108, 120, 391, 427, 577, 659, 719, 832, 965, 978, 1031, 1113, 1266. [13]

52. **கீழ்க்கதுவாய் மோனை :**

5, 8, 26, 32, 47, 56, 74, 76, 83, 99, 121, 177, 200, 202, 212, 223, 224, 225, 226, 313, 320, 418, 428, 437, 477, 485, 496, 500, 542, 554, 582, 589, 594, 612, 617, 620, 623, 633, 672, 717, 722, 725, 739, 756, 779, 791, 839, 849, 854, 892, 898, 902, 931, 943, 956, 985, 1043, 1046, 1059, 1074, 1127, 1141, 1145, 1167, 1286, 1300. [66]

53. **கீழ்க்கதுவாய் எதுகை:**

53, 105, 131, 200, 290, 318, 320, 428, 602, 612, 629, 637, 638, 666, 672, 673, 677, 678, 703, 705, 707, 722, 739, 748, 752, 798, 810, 886, 891, 962, 979, 1041, 1067, 1188, 1208, 1280, 1286. [37]

54. **முற்று மோனை-முதலடியில் :**

12, 50, 58, 145, 255, 357, 391, 392, 427, 494, 517, 666, 787, 793, 918, 963, 991, 1041, 1067, 1167. [20]

55. **முற்று எதுகை :**

12, 621, 623, 973, 1082, 1170. [6]

56. **முற்று மோனை–இரண்டாம் அடியில் :**

155, 248, 467, 505, 538, 568, 571, 578, 594, 615, 814, 864, 870, 873, 900, 1057, 1066, 1206, 1271. [19]

57. **கடையிணை மோனை-முதல் அடியில் :**

10, 75, 110, 155, 160, 170, 180, 184, 204, 205, 237, 238, 291, 293, 297, 298, 311, 321, 324, 342, 375, 385, 388, 396, 405, 407, 426, 541, 544, 595, 603, 631, 655, 709, 711, 712, 760, 761, 780, 801, 843, 858, 861, 882, 887, 896, 959, 964, 975, 1002, 1006, 1015, 1032, 1051, 1110, 1129, 1142, 1191, 1197, 1210, 1225, 1247, 1269, 1271, 1316. [65]

58. **கடையிணை மோனை-இரண்டாம் அடியில் :**

432, 462, 605, 642, 703, 770, 772, 786, 855, 1040, 1192, 1213. [12]

59. **கடையிணை எதுகை :**

10, 110, 170, 204, 205, 237, 253, 265, 293, 342, 373, 375, 385, 426, 631, 709, 711, 712, 759, 801, 843, 882, 896, 908, 975, 1015, 1046, 1072, 1125, 1140, 1142, 1168, 1191, 1264. [34]

60. **கடையிணை முரண் :**

10, 110, 155, 183, 254, 321, 344, 451, 664, 723, 861, 882, 887, 896, 978, 980, 1133. [17]

61. கடைக்கூழை மோனை :

59, 79, 221, 230, 283, 399, 432, 484, 831, 1029, 1125. [11]

62. இடைப்புணர் மோனை :

52, 62, 152, 197, 207, 241, 276, 299, 395, 421, 468, 479, 482, 572, 597, 615, 644, 664, 674, 692, 696, 786, 796, 823, 841, 844, 878, 881, 905, 953, 970, 995, 1000, 1011, 1018, 1020, 1033, 1045, 1060, 1069, 1099, 1101, 1108, 1132, 1139, 1148, 1166, 1173, 1176, 1222, 1240, 1254, 1292. [53]

63. இடைப்புணர் எதுகை :

52, 59, 197, 229, 240, 241, 247, 276, 468, 486, 579, 644, 655, 692, 786, 819, 826, 841, 870, 878, 981, 1011, 1029, 1033, 1109, 1132, 1292. [27]

64. இடைப்புணர் முரண் :

276, 692, 850, 1132. [4]

65. பின் மோனை :

151, 201, 250, 305, 467, 489, 713, 954, 1017, 1188, 1285, 1295. [12]

66. பின் எதுகை :

201, 216, 250, 399, 467, 641, 652, 665, 713, 721, 805, 862, 910, 924, 1188, 1295. [16]

67. பின் முரண் :

201, 264, 394, 1104. [4]

68. குறிப்பு எண் 42-ம் 45-ம் பார்க்கவும்.

69. குறிப்பு எண் 30 பார்க்கவும்.

70. ஏந்திசைச் செப்பலோசை பெற்றுவரும் 397 ஆம் குறளும், மற்றும் குறிப்பு எண் 3இல் குறிப்பிடப்பெற்ற தூங்கிசைச் செப்பலோசைப் பாடல்கள் 110-ம் ஆக 111 பாடல்கள் ஒழிந்த ஏனைய 1219 குறள்களும் ஒழுகிசைச் செப்பலோசை பெற்றமையால் ஒழுகு வண்ணப் பாடல்கள் ஆகும்.

# மேற்கோள் நூல்கள்

அஷ்டப் பிரபந்தம்-பிள்ளைப்பெருமாளையங்கார் : மர்ரே ராஜம் வெளியீடு, 1957.

ஆராய்ச்சி : காலாண்டுப் பத்திரிகை, மலர் 1- இதழ் 2: நா. வானமாமலை, 1969.

இலக்கண விளக்கம்: ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு, 1889.

கலித்தொகை : ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு, 1887.

செந்தமிழ்ப் பத்திரிகை - தொகுதி-1, 41.

திருவள்ளுவர் திருநாள் விழாமலர் : திருநெல்வேலித் தென் னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1968.

தொடையதிகாரம் – புலவர் குழந்தை : பாரிநிலைய வெளியீடு, 1967.

தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்-நச்சினார்க்கினியம் : சி. கணேசையர் பதிப்பு, 1937.

தொல்காப்பியம்-பொருளதிகாரம், எஸ். கனகசபாதிப் பிள்ளை பதிப்பு, 1934.

தொன்னூல் விளக்கம்-வீரமாமுனிவர்: இரண்டாம் பதிப்பு, 1891.

நன்னூல் - பவணந்தி முனிவர் : சங்கர நமச்சிவாயர் உரை-டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பு, 1935.

நேமிநாதம் - குணவீர பண்டிதர் : மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப்பு, 1903.

பிரயோக விவேகம்: ஆறுமுக நாவலர் பதிப்பு, 1866.

பெரிய புராணம் - சேக்கிழார்: சைவசித்தாந்த மகாசமாஜப் பதிப்பு, 1950.

மதுரைக் காஞ்சி [பத்துப்பாட்டு] - டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பு, 1956.

முத்துவீரியம் - முத்துவீர உபாத்தியாயர், 1889.

யாப்பதிகாரம் - புலவர் குழந்தை: பாரிநிலைய வெளியீடு, மூன்றாம் பதிப்பு, 1968.

யாப்பருங்கலக் காரிகை - மகாவித்துவான் மே. வீ. வேணு கோபாலப்பிள்ளை பதிப்பு: பாரிநிலைய வெளியீடு, 1968.

யாப்பருங்கல விருத்தியுரை: ராவ்பஹதூர் ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு, 1916.

வீரசோழியம்: பவானந்தர் கழகப் பதிப்பு, 1942.

Senthamil - A Grammar of the high dialect of the Tamil Language termed Shen-Tamil by Constant Joseph Beschi, S. J., translation by B. G. Babington, Madras, 1822.

The 'Sacred' Kural of Tiruvalluva - Nayanar, with Introduction, Grammar, Translation, Notes, Lexicon and Concordance. By The Rev. G. U. Pope, M. A., D. D.—1886.

# 1. நூல்களில் பாட வேறுபாடு நேர்ந்த வகை

பழந்தமிழ் நூல்களில் பாட வேறுபாடு இல்லாத ஒரு நூலை நாம் காணக்கூடவில்லை. பல நூற்றாண்டுகளாகச் சுவடிகளில் எழுதிக் கற்றுப் போற்றிவந்தமையினுல்தான் நூல்களில் பாட வேறுபாடுகளும் மிகுந்துவரலாயின. பெரும்பான்மையும் பண்டைப் புலவரை அடுத்துக் கற்று வரும் மாணவர் எப்பொழுதும் தத்தம் ஆசிரியருடனே உறைந்து வருவது வழக்கமாயிருந்தது. ஆசிரியர் புதுவதாகச் சொல்லும் பாக்களையும் உரைகளையும் கேட்டு உடனுக்குடன் எழுதிவருதலையும் இம்மாணவருள் சிலர் செய்து வந்தனர்.

மேலும், நூல் போற்றும் முறையில் சுவடிகளில் எழுதியே கற்கும் நிலைமைதான் அந்நாளில் இருந்தது. ஆதலால், கற்பார் நூல்களையும் அவசியம் எழுதியாக வேண்டும். அவ்வாறு எழுதும் பொழுது, ஒருவர் சொல்லக் கேட்டுப் பிறர் படி எழுதுதலும், ஒரு படியை நோக்கி வேறுபடி எடுத்தலும் வழக்கமாயிருந்தது. சுவடிகளின் தேவை அதிகமாக இருந்த பின்னுளில், திருக்குறள், கம்பராமாயணம் போன்ற பலரும் விரும்பிக் கற்றுவந்த நூல்களின் படிகளை எழுதி, வேண்டுவார்க்கு விலைக்குக் கொடுப்பதற்காகப் படியெடுத்தலைத் தொழிலாகக் கொண்டிருந்தவர்களும் உண்டு. சில ஏட்டுப் பிரதிகளின் இறுதியில், இன்னுர்பொருட்டு அல்லது இன்னுர் கேட்டுக் கொண்ட படி, இன்னுரால், இன்ன மூலப்படியைப் பார்த்து இந்த ஏட்டுப் பிரதி இன்ன நாளில் எழுதி முடிந்தது என்னும் குறிப்புகள் காணப்படுகின்றமையால், மேலே சொன்ன செய்தி விளக்கமாகும்.

ஒருவர் சொல்லக் கேட்டு எழுதும் பொழுதும், அல்லது தாமே பார்த்து எழுதும் பொழுதும் ஒலி ஒப்புமையுடைய எழுத்துக்களையும் உருவ ஒப்புமையுடைய எழுத்துக்களை யும் தவறுதலாக ஒன்றற்குப் பதிலாகப் பிறிதொன்றை எழுதிவிடுதல் இயல்பே. சொல்வார் எழுப்பும் ஒலி வேற்றுமையாலும், அவரிடம் தோன்றும் அயர்ச்சியாலும் ஒன்று பிறிதாக உணரவும், மூலப்படியில் சில விடுபடவும் நேரலாம். ஒத்த ஓசையும் பொருளுமுடைய சொற்களைச் சொல்லுவார் ஒன்றற் கொன்றாகக் கொண்டு கூறவும் இடமுண்டு. சந்தி சேர்ந்தும் பிரிந்தும் வரும் சொற்றொடர் களை மூலப் படியிற் போலவன்றிச் சொல்லுவார் எழுதுவார் தத்தம் விருப்பம் போலப் பிரித்தும் சேர்த்தும் எழுதும் நிலை ஏற்படும். அன்றியும், நன்கு ஊன்றிக் கவனியாமல் சந்தி வேண்டுமிடங்களில் விடுத்தும் வேண்டா இடங்களில் பெய்தும் பிழை மலியவும் ஏதுவாகும். இங்ஙனம் நேரும் பிழைபாடுகளைக் கருதியே,

> 'படிச்சவன் பாட்டைக் கெடுத்தான்
> எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்'

என்று ஓர் உலக மொழியும் வழங்கிவருகிறது.

கேட்டு எழுதுவதிலும் பார்த்து எழுதுவதில் கண்ணயர்வு மிகுதியும் நேரும். முந்திய மூலப்படி செவ்வையான எழுத்துருவம் பெறுதிருந்தால், ஓரெழுத்தை அதனை யொத்த வடிவுடைய பிறிதோர் எழுத்தாக மயங்கி எழுதவும் கூடும். எழுதும் பொழுது எழுதுபவர் தாம் படித்த ஒத்த சொற்பொருள்களும் நினைவுக்கு வர மூலப்படியில் உள்ளவாறு எழுதாது, தமக்கு அப்போது நினைவில் தோன்றிய புத்துருவங்களை இடைமடுத்தலும் இயலும். மேலும், எழுதுவார் தமது சொந்த விருப்பு வெறுப்புக் களைப் பொறுத்தும் எழுதுவதில் சில மாறுபாடுகள் செய்து விடலாம். விரைந்து எழுதுவாராயின், சிலசமயம் மூலப் படியில் உள்ள சிற்சில பகுதிகள் அங்கங்கே விடுபடவும் நேரலாம்.

•

இன்னும் சில நூல்களில் ஒவ்வொரு பகுதியில் வாழ்வார் தத்தம் பழக்க வழக்கத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப ஒருசில மாறுதல்களைப் படிகளில் செய்யவும்கூடும். கற்

பிப்பார், எழுதுவார், பொதுமக்களுக்கு எடுத்துச் சொல்லு வார் முதலியோரிடம் இத்தகைய மாறுபட்ட வழக்காறு கள் இடம்பெறலாம். இவ்வகைக் காரணங்களால்தான் போலும், கம்பராமாயணம், பெரியபுராணம், கந்தபுராணம் போன்ற சமயச் சார்பான பல நூல்களுக்குரிய ஏடுகள் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு வகைப் பாடமரபு களைக் கொண்டு காணப்படுகின்றன.

## 2. திருக்குறளில் பாட வேறுபாடு புகுந்த காலம்

மூலப்படியை ஆசிரியரின் வாய்மொழியாகக் கேட்டு முதல்முதல் எழுதிய காலத்திலேயே ஒருசில பிழைகள் நேர வாய்ப்புண்டு. அப்படியிருக்கப் பின்னர் வழிவழி ஒன்றிலிருந்து ஒன்ருகப் பிறந்துவருகின்ற படிகளைக் குறித்து யாது கூறுதல் கூடும்? மூலப்படியை முதல்முதல் பெயர்த்தெழுதும்போது அப்படியினின்றும் மாறுபட்டவை நகலில் மிகச் சிலவாக இருக்கும். பின்னர், நகலிலிருந்து மேலும்மேலும் நகல்களாகப் பெருகிவரும் காலத்தில் படியெடுப்பார் தகுதிக்கு ஏற்பப் பிழைகளும் சற்று மிகுந்து வருதல் இயற்கையே. இதுவே நாட்டின் பல பகுதிகளுக்கும் பரவி வருகின்ற நிலை நேரும்போது, அங்கங்குள்ள சூழ்நிலை காரணமாகச் சிற்சில மாறுதல்கள் நாளடைவில் நிகழ்ந்து விடலாம். ஒரு நூலின் உரையாசிரியர், பதிப்பாசிரியர் முதலியோர் தத்தமக்குக் கிடைக்கும் சுவடிகளை ஒப்புநோக்கி இங்ஙனமாக நேர்ந்த பாட வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டுகின்றனர்.

திருக்குறளுக்கு உரைகண்டார் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, திருமலையர், மல்லர், பரிப்பெருமாள், காளிங்கர், பரிமேலழகர் என்னும் பதின்மர்.[1] இவர்களுள் மணக்குடவர், பரிப்பெருமாள், பரிதியார், காளிங்கர், பரிமேலழகர் என்பாருடைய உரைகளே இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளன. இவ்வுரைகாரர் கொண்ட பாடங்கள் சிற்சில குறள்களில் வெவ்வேருக உள்ளன. ஆகவே, திருக்குறளுக்கு உரை எழுதும் முயற்சி தோன்றிய பல நூற்றுண்டுகளுக்கு முன்பேயே—கி. பி. பதினென்றும் நூற்றுண்டில் தானே—மூல பாடங்களில் வேறுபட்ட வழக்கு

நாட்டில் இருந்தமை தெளிவு. உரைகாரர்களோ தாந்தாம் எது சிறந்தது என்று கருதினர்களோ அந்தப் பாடத்தைக் கொண்டு உரை விளக்கம் தந்துள்ளனர். சில இடங்களில் பாட வேறுபாடுகளையும் எடுத்துக்காட்டியதோடு ஒருசில இடங்களில் அவற்றின் தகுதிபற்றியும் ஆராய்ந்து குறிப்பு எழுதியுள்ளார்கள்.

# 3. பரிப்பெருமாள் காட்டும் பாட வேறுபாடுகள்

உரைகாரர் எல்லாருக்கும் முற்பட்டவராகத் தெரிய வருபவர் மணக்குடவர். இவர் கொண்ட பாடங்களுக்கு மாருக வேறுபட்ட புதிய பாடங்களைப் பின்னுரையாசிரியர் கள் தத்தம் உரை நூல்களில் புகுத்தியிருக்கின்றனர். இவ ருடைய உரையைத் திருத்தி அமைக்கப் பெற்ற புத்துரையே பரிப்பெருமாள் உரை. இவர் ஒருசில இடங்களில் மணக் குடவர் கொண்ட பாடத்தினும் வேறுபட்ட பாடம் கொண்டு, அதற்குத் தக்கபடி உரைவகுத்துள்ளார். 1081, 1178, 1195 ஆம் குறள்-உரைகள் இதற்குத் தக்க சான்ரும்.[2]

மேலும் இவர், 1077 ஆம் குறளுரையில், "கூன்கை என்று பாடமோதினும் அமையும்" என்றும், 480-இல் "ஒப்புரவாண்மை என்று ஒப்புரவிற்கே போக்குவாரு முளர்" என்றும், 1116 ஆம் பாடலில், "பதியிற் கலங்கிய மீன் அறியா என்று பாடம் ஓதித் தம் நிலைமையினின்றும் கலங்கின மீன்கள் மதியினையும் மடந்தை முகத்தினை யினையும் அறியாவாயின எனினும் அமையும்" என்றும் பிறர் கொண்ட பாடங்களை எடுத்துக்காட்டியுள்ளார்.

# 4. காளிங்கர் காட்டியவை

பரிப்பெருமாளுக்குப் பிற்பட்டவராகக் கருதப்படு பவர் காளிங்கர். இவரும் தம் உரையுள் சிற்சில பாட வேறுபாடுகளை எடுத்துக்காட்டியிருக்கின்ருர். 'எனைத் தானும் எஞ்ஞான்றும்' (317) என்னும் குறளின் உரையில், "மனத்தானும் என்பாரும் உளர்" என்று குறிப்பிடுகின்ருர். 'அளவறிந்தார் நெஞ்சத்து' (288) என்னும் குறளில், "கரவு என்றது களவு என்று சொல்வாரும் உளர்" என்று எழுது கின்ருர்.

'அற்றம் மறைக்கும்' (980) என்னும் குறளுரையில்,

> "அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
> சுற்றமாச் சூழ்ந்து விடும்'

என்பது பாடமாயின்" என்று பிறர் பாடத்தைத் குறித்த லோடு, "இன்னும் பிறவாறு பாடமோதுவாரு முளர்" என் றும் கூறியுள்ளார். 'செல்லான் கிழவன்' (1039) என்னும் குறளுரையில், "நிலம் புலந்து இல்லாளின் ஊடிவிடும் என் பாரும் உளர்" என்று பிறர் கொள்ளும் பாடத்தைக் குறிப் பிட்டுள்ளார். இங்கே இவர்தம் உரையில் எடுத்துக் காட்டப்பட்ட பாடவேறுபாடுகளைப் பரிமேலழகர் மூல பாடமாகக் கொண்டுள்ளார் என்பதும் கவனிக்கத்தக்கது

# 5. பரிமேலழகர் தரும் பாட வேறுபாடுகள்

திருக்குறளின் பண்டை உரையாசிரியர் பதின்மருள்ளும் இறுதியாகத் தோன்றியவர் பரிமேலழகர். இவருடைய உரையோ பலவகையாலும் சிறப்புடைய பேருரையாகக் கற்ருரால் மதிக்கப் பெறுவது; குறளுக்கு நிகராக வைத்துப் போற்றப் பெறுந்தகுதி வாய்ந்தது.[3] இவருடைய உரை தோன்றிய நாள் தொட்டுத் தமிழறிஞர்களால் பெரிதும் போற்றிக் கற்கப்பட்டுவருகிறது. இதனுலேயே முந்திய உரைகளில் பல வழக்காறு குறையவும், சில உரைகள் மறையவும் நேர்ந்துவிட்டன. பரிமேலழகர் தம்முடைய உரை விளக்கத்தில் முந்தைய உரையாசிரியர்களின் கருத்தை உடன்பட்டும் மறுத்தும் எழுதிய இடங்கள் பல. அவ்வாறே முன்னைய உரைகாரர்கள் கொண்ட பாடவேறுபாடுகளையும் பல இடங்களில் எடுத்துக் காட்டியதோடு, அவற்றின் வன்மை மென்மைகளையும் சீர்தூக்கி ஆராய்ந்துள்ளார்.

பரிமேலழகர் தம்முடைய உரைநூலில் 48 இடங்களிலே பிறர் உரைக்கும் பாடவேறுபாடுகளைக் குறிப்பிட்டுள்ளார். அவை வருமாறு:

| தொடர் எண் | பாட்டு | பரிமேலழகர் பாடம் | உரை பாடம் |
|---|---|---|---|
| 1 | 101 | செய்யாமற் செய்த வுதவி | செய்யாமைச் செய்த வுதவி |
| 2 | 188 | என்னைகொல் | என்னர் கொல் |
| 3 | 205 | இலன் | இலம் |
| 4 | 283 | அளவிறந்து | அளவறிந்து |
| 5 | 319 | தாமே வரும் | தானே வரும் |

| தொடர் எண் | பாட்டு | பரிமேலழகர் பாடம் | உரை பாடம் |
|---|---|---|---|
| 6 | 419 | அல்லார் | அல்லால் |
| 7 | 420 | வாயுணர்வின் | வாயுணவின் |
| 8 | 437 | உயற்பால தன்றி | உயற்பால தின்றி |
| 9 | 500 | வேலாள் முகத்த | வேலாழ் முகத்த |
| 10 | 501 | உயிரச்சம் | உயிரெச்சம் |
| 11 | 539 | உள்ளுக | எண்ணுக |
| 12 | 546 | கோடாது | கோடான் |
| 13 | 636 | அதிநுட்பம் | அதினுட்பம் |
| 14 | 639 | எழுபது கோடி உறும் | எழுபது கூறுதலை |
| 15 | 660 | ஏமார்த்தல் | ஏமாத்தல் |
| 16 | 662 | ஊறொரால் | ஊறொரார் |
| 17 | 710 | அளக்குங்கோல் | அலைக்குங்கோல் |
| 18 | 787 | அவை | நவை |
| 19 | 809 | கெடாஅ | கெடாஅர் |
| 20 | 816 | பெருங்கெழீஇ நட்பு | பெருங்கழி நட்பு |
| 21 | 821 | சீரிடம் | தீர்விடம் |
| 22 | 864 | எளிது | இனிது |
| 23 | 938 | பொருள் கெடுத்து | பொருள் கொடுத்து |
| 24 | 943 | பெற்றான் | பெற்றால் |
| 25 | 953 | நான்கும் வகை | நான்கின் வகை |
| 26 | 958 | ஐயப்படும் | ஐயப்படல் |
| 27 | 979 | விடல் | விடும் |
| 28 | 999 | பாற்பட்டன்று இருள் | பாழ்பட்டன்று இருள் |
| 29 | 1012 | எச்சம் | அச்சம் |
| 30 | 1013 | ஊனைக் குறித்த | ஊணைக் குறித்த |
| 31 | 1040 | இருப்பாரை | இரப்பாரை |
| 32 | 1042 | இன்றி வரும் | இன்றி விடும் |
| 33 | 1052 | இரந்தவை துன்பம் உறாஅவரின் | இரந்தவர் துன்பம் உறாஅவரின் |
| 34 | 1056 | ஒருங்கு கெடும் | முழுதும் கெடும் |
| 35 | 1058 | இரப்பாரை இல்லாயின் | இரப்பவர் இல்லாயின் |
| 36 | 1081 | கனங்குழை | கணங்குழை |
| 37 | 1111 | மென்னீரள் | இன்னீரள் |
| 38 | 1122 | என்ன | என்னை |
| 39 | 1139 | அறிகிலார் | அறிவிலார் |
| 40 | 1161 | இஃதோ நோயை | இஃதோர் நோயை |
| 41 | 1178 | மற்றவர் | கொண்கனை |
| 42 | 1180 | அறைபறை கண்ணார் | அறைபறைக் கண்ணார் |

| தொடர் எண் | பாட்டு | பரிமேலழகர் பாடம் | உரை பாடம் |
|---|---|---|---|
| 43 | 1208 | காதலர் செய்யும் சிறப்பு | (1) காதலர் நம்மாட்டருள் (2) காதலர் செய்யும் குணம் |
| 44 | 1210 | படாஅதி | படாஅது |
| 45 | 1232 | நயந்தவர் | நயந்தவர்க்கு |
| 46 | 1269 | ஒருநாள் | இருநாள் |
| 47 | 1287 | பொய்த்தல் அறிந்தென் | பொய்த்தல் அறிந்தேன் |
| 48 | 1301 | புலத்தை | புலத்தி |

பரிமேலழகர் தம்முடைய உரையில் எடுத்துக்காட்டிய பாடவேறுபாடுகளுள் பொருந்தா என ஏதுக்காட்டி மறுத்துரைத்தவை எட்டே. அவையாவன : 500, 501, 636, 660, 662, 979, 1058, 1161 ஆம் குறள்களின் உரையில் கூறிய பாடவேறுபாடுகள்.[4] இவை எட்டும் தவிர ஏனைய நாற்பது இடங்களிலும் தாம் எடுத்துக்காட்டிய பாடங்களைக் குறித்து எவ்விதமான கருத்தும் அவர் தெரிவிக்கவில்லை. இதனால், இப்பாட வேறுபாடுகளும் பொருத்த முடையன என்பதே அவர்தம் கருத்தாதல் வெளிப்படை.

பரிமேலழகர் உரையில் எடுத்துக்காட்டும் வேறுபாடுகளுள் ஏழு (500, 539, 660, 809, 821, 979, 1040) மணக்குடவர், காளிங்கர் என்னும் இருவரும் ஒப்புக்கொண்ட பாடங்களாம். இவை தவிர மணக்குடவர் மூலபாடமாகத் தெரியவருவன ஆறு (205, 636, 1042, 1139, 1210, 1301) பரிமேலழகர் எடுத்துக்காட்டிய வேற்றுப்பாடம்.

இங்ஙனமே, காளிங்கர்மட்டுமே போற்றிக் கொண்டதாகத் தெரியவரும் 15 பாடவேறுபாடுகளைப் பரிமேலழகர் தம் உரையில் பிறர் பாடமாக எடுத்துக்காட்டியுள்ளார் (420, 437, 501, 639, 710, 953, 958, 1012, 1013, 1052, 1056, 1081, 1122, 1161, 1178). பரிமேலழகர் உரையில் தரும் வேறுபாடங்களில் 500, 539, 636, 660, 809, 821, 958, 1081, 1139 என்னும் குறளுரைகளில் காணும் பாடம் பரிப்பெருமாளும் கொண்டனவாம்.[5] 437 ஆம் குறளுரையில் காணும் பாடவேறுபாடு பரிதியாரின் உரையில் காணப்படுகிறது.[6]

மேலும், பரிமேலழகர் தம் உரையுள் காட்டிய பாட வேறுபாடுகளுள் பதினெட்டு இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள எந்த உரையாசிரியர்களாலும் 'கொள்ளப்படாதவை.[7] இவை எல்லாம் இப்பொழுது நமக்குக் கிடைக்காமல் மறைந்து விட்ட தருமர், தாமத்தர், நச்சர் முதலியோரால் ஏற்றுக்கொள்ளப் பெற்ற மூலபாடங்களாகலாம் என்று ஊகிக்க இடமுண்டு.

மூலபாடங்களை ஆராய்ந்து, தெளிவானதும் பொருத்தமானதும் ஆன பாடம் காணும் திறத்தில் பரிமேலழகர் சிறந்த புலமையுடையார் என்று அவரே உரை எழுதிய மற்றொரு நூலாகிய பரிபாடலின் உரைப்பாயிரம் தெரிவிக்கிறது. இந்த உரைப்பாயிரம் முன்னோர் ஒருவரால், பெரும்பாலும் பரிமேலழகரின் சம காலத்தவரால் இயற்றப்பட்டிருக்கலாம்.

'கண்ணுதற் கடவுள் அண்ணலங் குறுமுனி
... ... ... ...
பாடிய சான்றோர் பீடுநன்கு உணர
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில்
தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்
எழுதினர் பிழைப்பும் எழுத்துரு ஒக்கும்
பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்
ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்
திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலின்
சிற்றறி வினர்க்குத் தெற்றெனத் தோன்ற
மதியின் தகைப்பு விதியுளி அகற்றி
எல்லையில் சிறப்பின் தொல்லோர் பாடிய
அணிதிகழ் பாடத்துத் துணிதரு பொருளைச்
சுருங்கிய உரையின் விளங்கக் காட்டினன்
நீள் நிலங் கடந்தோன் தாள்தொழு மரபின்
பரிமே லழகன் உரிமையின் உணர்ந்தே'

என்பது பரிபாடல் உரைப்பாயிரம். கந்தியார் என்னும் ஒருவரால் நூல்களில் சில பிழைகள் புகுந்தனவாம். இவர் தம்முடைய புன்சொற்களையும் முன்னையோர் பாட்டிடையே செருகி வந்தனராம். கந்தியாரால் நேர்ந்த இடைச் செருகல்களோடு எழுதினோராலும் பாடினோராலும் மாறுபாடாயிருந்த பொருந்தாப்பாடங்களும் காணப்பெற்றனவாம்.

இவற்றையெல்லாம் நீக்கிப் பண்டையோர் கொண்ட உண்மைப்பாடம் துணிந்தே உரைவகுத்தார் பரிமேலழகர் என்று இப் பாயிரத்தால் தெரியவருகிறது.

பரிபாடல் உரையை விடவும் விரிவானதோர் ஆராய்ச்சி யுரையாகவே அவருடைய திருக்குறள் உரை அமைந் திருக்கிறது. இந்நூலில் பல இடங்களில் அவர் தேர்ந்து கொண்ட பாடங்களையும் பிறர் கொண்ட பாடங்களை எடுத்துக்காட்டி அவர் எழுதியுள்ள குறிப்புகளையும் நோக்கினால், அவருடைய நுண்ணிய புலமை வெளிப்படும். திருக்குறளின் மூலபாடங்களைத் தேர்வதிலும் இப் பரி மேலழகர் பல்வேறு முறைகளால் ஆய்ந்து ஆய்ந்து துணிந் துள்ளார் என்று கொள்ளலாம்.

## 6. பதிப்பாசிரியர்கள் பாட வேறுபாடுகளையும் காட்டியமை

திருக்குறள் மூலச்சுவடிகளையும் உரைகளுடன் கூடிய சுவடிகளையும் ஆராய்ந்து அச்சுப்படிவம் தோன்றியபின், பதிப்பாசிரியர் பலரும் இந்நூலைப் பதிப்பித்து வந்துள்ளனர். உரை நூல்களுள் பரிமேலழகர் உரைதான் நீண்ட நாள்களுக்குமுன் அச்சுருவம் பெற்றது. இவ்வுரையை ஆராய்ந்து முதன் முதல் அச்சியற்றியவர் முகவை இராமானுஜக் கவிராயர். இப்பொழுது நமக்குத் தெரிந்தவரையில் கி. பி. 1840 ஆம் ஆண்டு வெளிவந்த இவருடைய பதிப்பே முதற்பதிப்பு ஆகும். அடுத்து வந்தது திருத்தணிகைச் சரவணப் பெருமாளையரின் பதிப்பு. இஃது பரிமேலழகரின் உரையைத் தழுவிச் செய்யப்பட்ட உரையுடன் கூடி அமைந்தது. இதனைத் 'தெளிபொருள் விளக்கம்' எனவும் வழங்குவர். யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் வெளியிட்ட பரிமேலழகரின் உரைப் பதிப்பு செம்மையாக வெளிவந்த சிறந்த பதிப்பாகும். இது பல முறை பதிப்பிக்கப் பெற்று இப்பொழுதும் கிடைக்கும் நிலையில் உள்ளது. இப்பதிப்பாசிரியர்களும் தங்கள் பதிப்பில் குறளில் பயின்றுவரும் மூலபாட வேறுபாடுகளைச் சுட்டியுள்ளார்கள்.

பின்னர், பரிமேலழகர் உரைக்கு விளக்கங்களும் வேறு குறிப்புகளும் கொண்ட பதிப்புக்கள் வெளிவந்தன. வேதாந்த வித்தகர் கோ. வடிவேலு செட்டியார் பதிப்பும் (1904) கிருஷ்ணாம்பேட்டை குப்புசாமி முதலியார் பதிப்பும் (1924) இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை. பேராசிரியர் மு. இராகவையங்கார் வெளியிட்ட பரிமேலழகருரைப்

பதிப்பும் (1910) மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களின் பதிப்பும் (1928) கையடக்கமாகச் சிறுவடிவில் வெளியிடப் பெற்றவை. பரிமேலழகர் உரைக்குச் சடகோபராமாநுசா சாரியாரின் விளக்கங்களுடன் வெளிவந்த வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் பதிப்பு (1937) இம்முறையில் வெளிவந்த பதிப்புக்களுள் இறுதியாக வந்த முயற்சி என்னலாம். பரிமேலழகரின் உரையை ஒட்டி அமைந்ததாகக் கருதப்படும் பழைய உரை ஒன்று 1961 ஆம் ஆண்டில் டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடாக வந்துள்ளது.

மணக்குடவர் உரையோடு அறத்துப்பால் பதிப்பைக் கப்பலோட்டிய பெருமகனார் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களும் (1917) நூல்முழுமையும் பொன்னுசாமி நாட்டார் என்பாரும் (1925) தந்தனர். இவ்விரு பதிப்புக்களையும் தழுவி இராஜ. சிவ. சாம்பசிவசர்மா அவர்கள் மலர் நிலையத்தின் வழி ஒரு பதிப்புக் கொண்டுவந்துள்ளார் (1958). காலிங்கர்[8], பரிப்பெருமாள் உரைகளைத் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகச் சார்பில் மறைந்த பெரு வித்துவான் தெ. பொ. பழனியப்பபிள்ளையவர்கள் தந்தனர் (1945-1948). இங்குக் குறித்த முந்திய பதிப்புக்களை எல்லாம் பயன்படுத்தித் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் தருமபுர ஆதீனகர்த்தரின் ஆணைப்படி திருக்குறள் உரை வளம் பதிப்பினைத் தமிழுலகுக்கு அளித்தார் (1950, 1951, 1952). இதன் பின் இதே போன்று திருப்பனந்தாள் ஆதீனம் ஸ்ரீ ஆதி குமர குருபர சுவாமிகள் நினைவுத் திருக்குறள் பதிப்பு நிதியிலிருந்து 'திருக்குறள்-உரைக்கொத்து' என்னும் தொகுதியைத் திருமுறைக் கலைஞர் வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள் பதிப்பித்துள்ளார் (1957-1958). கோவை இராமகிருஷ்ண வித்தியாலயத்தின் உதவியால், 'கலைமகள்' பத்திரிகையின் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன் அவர்கள் 'திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு' என்பதனைக் கொண்டுவந்துள்ளார் (1963). இங்கே குறிப்பிடப் பெற்ற பதிப்புக்களில் எல்லாம் பாடவேறுபாடுகளும் அங்கங்கே கொடுக்கப்பட்டுள்ளன. ஒரு சில பதிப்புக்களில் ஒருவர் கொடுத்த பாடம் ஒரு சில குறள்களுக்குப் பிறிதொரு பதிப்பில் காணப்படாமலும் இருக்

கிறது. என்றாலும், எல்லாவற்றையும் சேர்த்து ஒருங்கு திரட்டிப் பார்க்கின்றபோது, 305 பாடல்களில்தான் பாட வேறுபாடுகள் காணக்கிடக்கின்றன.[9] இவற்றுள் உரை யாசிரியர்கள் எடுத்துக்காட்டிய பாடவேறுபாடுகளும் அடங்கும். ஏறத்தாழ மொத்தத்தில் நூற்றுக்கு 22 விழுக்காடு பாடபேதங்களுக்கு இலக்காகியுள்ளன என்பது தெரியவரும்.[10]

இந்த எண்ணிக்கை ஒலி, எழுத்து, சந்தி முதலிய வற்றின் மாறுபாட்டால் நேர்ந்த வடிவ மாறுபாடுகளும் சேர்ந்து அமைந்ததாகும். இவற்றைத் தவிர்த்துப் பார்த் தோமானல் பாடவேறுபாடு என்று கொள்ளத்தக்கவை ஏறத்தாழ செம்பாதி இருக்கலாம்.

# 7. வடிவ வேற்றுமை-பாட வேற்றுமை

இங்கே முக்கியமாக வடிவ வேற்றுமை பாடவேற்றுமை என்பன குறித்துச் சிறிது சிந்தித்தல் இன்றியமையாத தாகிறது. வடிவ மாற்றத்தால் சொல்லின் பொருள் பெரும்பாலும் மாறுபடுவதில்லை. எடுத்துக்காட்டாகச் சில காணத்தகும்: அன்றறிவாம்-அன்றறிவோம் (136); உடையர்-உடையார் (160); ஒன்றன்-ஒன்றின் (253, 256); செய்யாமல்-செய்யாமை (101); இயல்பு-இயல்வு (382); இகவாமை-இகவாமல் (779); அற்றது-அற்றமை (942) என வருவன விகுதிகளின் மாற்றத்தால் பெற்ற வடிவ வேற்று மையே. மனநலத்தின்-மனநலத்தான் (459); குற்றத்தின் குற்றத்துள் (502); தாழ்ச்சியுள்-தாழ்ச்சியில் (671); நூலா ருள்-நூலார்முன் (683); மறையாவழி-மறையாக்கடை (846); மணியில்-மணியுள் (1273) என வருவன ஒத்த உருபுகள் ஒன்றற்கொன்று ஒப்புமை கருதி மாற்றி வழங்க நேர்ந்ததனுல் ஏற்பட்ட வடிவமாற்றம். வைப்பிற் கோர்-வைப்புக்கோர் (24); காமத்துக் காழில் கனி-காமத் திற் காழில் கனி (1191): இவை சந்திவகையால் நேர்ந்த வடிவமாற்றம். நன்கலம்-நன்கலன் (160); நாநலம்-நா நலன் (641) என்பன மகர-னகரம் ஓசை ஒப்புமையால் போலியாக வந்த வடிவ மாற்றங்கள். இவ்வடிவ மாற்றங் களால் ஓசையும் பொருளும் மாறுபட்டுப் போவதில்லை. எனவே, ஒரு சொல்லின் பொருள் மாருவகையில் விகுதி, உருபு முதலியவற்ருல் நேரும் மாறுபாடுகளை நாம் வடிவ வேறுபாடு என வழங்குதல் அமையும்.

பாடவேறுபாடு என்பது இங்ஙனம் ஒரு சொல்லுக்கு மாருக அதே ஓசையையுடைய வேற்றுச்சொல் அல்லது

அதே பொருளுடைய பிறிதொரு சொல் வந்து வழங்குவதாகும். தூற்றும்-தூக்கும் (188); ஆளும்-ஆகும் (251); தவத்தொடு-தனத்தொடு (295); மாணு-இன்ஞ (317); உள்வேர்ப்பர்-உள்ளொப்பர் (487); வேந்தன்-மன்னன் (569); கெடும்-விடும் (601) என்றுற் போல்வனவற்றையே நாம் பாடபேதம் எனக் கொள்ளல் தகும். இவ்வகையில் வரும் பாடபேதம் பொருள் மாற்றத்தைப் பெரும்பான்மை தந்தும், சிறுபான்மை அதே பொருளைச் சுட்டியும் காணப் படும். 'வேந்தன்' என்பதற்கு 'மன்னன்' என வந்த மாற்றம் பொருள் மாற்றம் செய்யாப் பாடவேறுபாடு. ஒரே பொருளுடைய ஒருவகையான சொற்களை ஒன்றற்குப் பிறிதொன்ருகப் பயன்படுத்தி விடுதல் படியெடுப்பாரிடம் இயல்பாக நேரக்கூடியதே. தூற்றும்-தூக்கும் (188) தவத்தொடு-தனத்தொடு (295) முதலிய ஒத்த ஓசையுடைய வாயினும் மாறுபட்டுவந்த சொற்கள் பொருள் மாற்றத்தைத் தருகின்றன. ஆகவே, பாடவேறுபாடு என்னும்போது நாம் வடிவ வேறுபாடு சொல் வேறுபாடு என இருவகையாக அமைவனவற்றையும் கருதுதல் வேண்டும்.

# 8. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் தரும் விளக்கம்

பாடவேறுபாடு வடிவவேறுபாடுகளை வகைப்படுத்திக் காண்பது அவசியம் என்றும், அவை எவ்வெவ்வகையில் பெருகிவருகின்றன என்றும், பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் தாம் பதிப்பித்த திவ்யப் பிரபந்தம் முதலாயிரம் பதிப்புரையில் விளக்கமாக எழுதியுள்ளார்கள். பேராசிரியர் அவர்கள் இப் பதிப்புரையில் கூறிய கருத்துக்கள் பாடவேறுபாடுகளை ஆராய்வார்க்குத் துணை செய்வனவாதலின், அவர்களுடைய உரையையும் ஈண்டுக் காண்பது பொருத்தமாகும். அது வருமாறு :

"பாடரூப பேதங்கள் பற்றி ஒரு சில கூறுதல் தகும். பாட பேதம் என்று குறிப்பது ஒரு சொல்லுக்குப் பிரதியாகவரும் பிறிதொரு சொல்லை. உதாரணமாக, 'கோளரி மாதவன்' (556) என்பதற்கு 'கோளரி வாமனன்' என்று வருவது போல்வன பாடபேதங்கள். 'துரியோதனன்', 'திரியோதனன்' (175) 'முழுசாதே', 'முழுவாதே' (734) என வருவன போல்வன ரூப பேதங்கள். ஒரு சொல்லையே இரண்டு விதமாக வாசித்து உண்மைப்பாடம் இதுவென்று கொள்ளுதலில் மயக்க மடைதலும் உண்டு. 'பரம புருடா', 'பரம் புருடா' (463) என்று பிரதிகளில் காணப்படுகிறது. சில வட சொற்கள் தமிழில் வல்லின 'றகரம்' முதலியன பெற்று வருதலும் முற்கால வழக்கமாயிருந்தது. 'மார்க்கம், மாற்கம்' (902) 'மூர்த்தி, மூற்தி' (473) முதலியன உதாரணங்களாம். இவைகளேயன்றிப் பிழையெனக் கொள்ளும் பல சொற்களும் தரப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பாலும் வைஷ்ணவ கோஷ்டிகளில் உச்சரித்து வந்த முறையை வெளிப்படுத்துகின்றன. அப்பொழுது பிழையென்ற கருத்தேயின்றிச் சொற்கள் உச்சாரண பேதத்தால் எவ்வாறு மாறி வருகின்றன என்பதே நமக்கு முன் புலப்

படுகின்றன. பிழையென்று முன்பு கொண்டன இப்பொழுது உயிர்த் தத்துவத்தோடு விளங்குகின்றன. இம்முறையைத் தற்காலத்து மொழிநூல் சிக்ஷாசாஸ்திர ஆராய்ச்சியாளர் (Phoneticians) பெரிதும் போற்றுகின்றனர். ஒருகாலத்தில் வழங்கிய உண்மை ரூபம் இன்னது என்பதை ஒருவாறு புலப் படுத்துகின்றன. முதலாயிரம் தோன்றிய காலத்தில் எவ்வாறு வேறுபட்டுவந்தன? சாதாரண மக்கள் எவ்வாறு உச்சரித்து வந்தனர்?-என்பவை இவைகளால் வெளிப்படுகின்றன. 'வயி றும்-வயறும்' (509) 'தொடர்-துடர்' (85) 'செவிடு-செகிடு' (481) 'தொலை-துலை' (598) 'வெண்ணெய்-வெண்ணை' (151): இவ் ஒலி பேதங்கள் தமிழோடியையுள்ள தென்னாட்டு மொழிகளில் வடிவவேறுபாடு பெற்று, இன்றைக்குச் சரியான சொல் என்று கொள்ளப்பட்டுள்ளமையும் இங்கே அறியத்தக்கது. உதாரண மாக, தமிழில் திருத்தமான வடிவம் என்று கொள்ளும் 'சிறுக் கன்' (59) என்பது மலையாளத்தில் 'செறுக்கன்' என்றே வழங்கிவருகிறது. இங்ஙனமே, 'கொங்கை' என்பதனை 'கொங்க' என்று வழங்குவர். இவை போல்வனவற்றைப் பாடரூப பேத அனுபந்தத்தில் காணலாம். ஒலிவடிவினின்றே வரிவடிவம் தோன்றியது என்பதைக் கருதும் பொழுது இது எவ்வளவு முக்கியம் என்பதை நாம் அறிந்துகொள்ளலாம். கால அடைவில் ஒலி வேறுபடுதலும் அவற்றிற்குத் தக வரி வடிவுகள் மாறுதலும் மிகச் சாதாரணமான உண்மைகளாகும். இவ்வகையிலே இப்'பிழைகளும்' பயன்படும் என்பது உறுதி. இவைகளேயன்றி ஏடு எழுதுவோரால் நேர்ந்த பிழைகளும் பல திறத்தனவாம். அன்றியும் பாடபரிசோதனையிலும் மூலச் சுவடிகளின் பரிசோதனையிலும் இப்'பிழைகளை' ஆராய்ந்து வகைப்படுத்துதல் விஞ்ஞான சாஸ்திர நோக்குப்படி இன்றி யமையாததாகும்."

பாடவேறுபாடுகளில் பிழைபட்ட வடிவங்கள் காணப் பட்டாலும் அவற்றையும் விடாது தொகுத்தல் வேண்டும் என்பதும், ஒலிபேதத்தால் ஒருகால் நேரும் பிழை வடிவம் பிறிதொருகாலத்து வழக்காய் வருகிறது என்பதும், ஒலி யியல், மொழியியல் ஆய்வாளருக்கும் ஏடுகளைப் பரி சோதிப்பார்க்கும் இவ்வேறுபாடுகளின் உண்மைத் தன் மையை ஓர்ந்து அறிதல் அவசியம் என்பதும் மேலே பேராசிரியர் அவர்கள் கூறியவற்றால் தெரியவரும்.

தமிழ் நாட்டில் திருக்குறளைப் பரிமேலழகர் உரை யுடன் பயில்வதே கல்வி வல்லார் மரபாக வழிவழி வந்திருக்கிறது. ஆதலால், இவ்வுரைகாரர் கொண்ட

பாடமே நடைமுறை வழக்கில் இருந்துவருகிறது. மூல பாட நூல்களை வெளியிடுவாரும் இவருடைய மூலபாடங் களையே தத்தம் பதிப்புக்களில் மேற்கொள்கின்றனர். திருக்குறள் மூலபாடம் என்று கருதி இன்று யாவரும் எடுத்துக்காட்டி வருவதெல்லாம் பரிமேலழகர் கொண்ட மூலபாடமே. ஆகவே, பாடவேறுபாடு காண்கின்ற இப் பகுதியில் பாடம் என்று காட்டப் பெறுபவை பரிமேலழ கரின் மூலபாடம் என்று கொள்ளவேண்டும். இவர் தம் முடைய உரையில் எடுத்துக்காட்டிய மாறுபாடுகளும், இவருக்கு முந்திய உரைகாரர்களாகிய மணக்குடவர், பரிப் பெருமாள், காளிங்கர் முதலியோர் கொண்ட பாடங்களும், சுவடிகளில் காணப்பெற்ற பாடங்களும், மேற்கோளாகக் குறளினை எடுத்தாண்டோர் கொண்ட பாடங்களும் பாட வேறுபாடாகத் தரப்பட்டுள்ளன. இவை இப்பொழுது நமக்குக் கிடைக்கப்பெறும் பல பதிப்புக்களையும் ஒப்பு நோக்கித் தொகுக்கப் பெற்றனவாகும்.

# 9. ஒலி ஒப்புமையால் புகுந்த வேறுபாடுகள்

இனி, ஒலி வேறுபாட்டினுல் பாடவேறுபாடுகளாகக் குறட்பாக்களில் இடம் பெற்றுள்ள மாறுபாடுகளைத் தொகுத்தும் வகுத்தும் பார்ப்போம். ஒருவர் வாய்க்கேட்டு மற்ருெருவர் எழுதும்பொழுது சொல்லுவார் உரைக்கும் வன்மை, மென்மை, நலிவு என்னும் ஓசை நிலைமைகளுக்கு ஏற்ப, ஒத்த ஒலியுடைய மற்ருேர் எழுத்தை எழுதிவிடுதல் இயலும். இவ்வகை ஒலி ஒப்புமையால் நேர்ந்தவை எனக் கருதத்தக்க வேறுபாடுகள் பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| 64 | அமிழ்தினும் | அமுதினும் |
| 151 | நன்று | நன்கு |
| 157 | நோநொந் | நோய்நொந் |
| 246 | பொச்சாந்தார் | பொய்ச்சார்ந்தார் |
| 261 | உரு | உருவு |
| 280 | மழித்தலும் | வழித்தலும் |
| 282 | பொச்சாப்பு | பொய்ச்சாப்பு |
| 341 | னிலன் | னலன் |
| 363 | ஆண்டும் | யாண்டும் |
| 412 | செவிக்குணவு | செவிக்குணர்வு |
| 413 | செவியுணவின் | செவியுணர்வின் |
| 500 | உயிரச்சம் | உயிரெச்சம் |
| 536 | வாயினதுவொப்பதில் | வாஅயின ஃதொப்பதில் |
| 546 | கோலதூஉம் | கோலது |
| 565 | பேஎய் கண்டது | பேய்கண்ட தன்னது |
| 660 | ஏமார்த்தல் | ஏமாத்தல், ஏமாக்கல் |
| 678 | யானையாத் தற்று | யானையார்த் தற்று |
| 706 | பளிங்குபோல் | பளிங்கேபோல் |
| 715 | நன்றென்ற வற்றுள்ளும் | நன்றென் றெவற்றுள்ளும் |
| 750 | இல்லதரண் | இல்லை யரண் |
| 780 | சாகிற்பின் | சாகற்பின் |

| | | |
|---|---|---|
| 790 | இவரெமக் | இவர்நமக் |
| 798 | சிறுகுவ | சிறுகுப |
| 916 | புரையிலாப் | புரைவிலாப் |
| 930 | போதில் | போழ்தில் |
| 940 | இழத்தொறூஉம் | இழத்தொறும் |
| | உழத்தொறூஉம் | உழத்தொறும் |
| 947 | நோயளவன்றிப் | நோயளவின்றிப் |
| 961 | வருப விடல் | வருவ விடல் |
| 1012 | ஊணுடை யெச்சம் | ஊணுடை யச்சம் |
| 1013 | ஊனைக் குறித்த | ஊணைக் குறித்த |
| 1032 | உலகத்தார்க்கு | உலகத்திற்கு |
| 1034 | தம்குடைக்கீழ் | தம்கொடைக் கீழ்க் |
| 1037 | கஃசா | 'கைசா |
| 1040 | அசைஇ இருப்பாரைக் | அசைஇ இரப்பாரைக் |
| 1082 | தானைக்கொண் டன்ன | தானைக்கண் டன்ன |
| 1086 | மறைப்பின் | மறப்பின் |
| 1105 | தோட்டார் கதுப்பினாள் | தோட்டாழ் கதுப்பினாள் |
| 1129 | அனைத்திற்கே | அனைத்தற்கே |
| 1144 | கவ்விது | கவ்வித்து |
| 1168 | என்னல்லது | என்னலது |
| 1176 | இதற்பட்டது | இடர்ப்பட்டது |
| 1177 | உழந்துழந்து | உழைந்துழைந்து |
| 1190 | தூற்றாரெனின் | தூற்றாதெனின் |
| 1195 | கொண்டார் | கொண்டால் |
| 1206 | என்னுளேன் | என்னுள்ளேன் |
| | அவரொடுயான் | அவரோடுயான் |
| 1209 | வேறல்லமென்பார் | வேறல்ல வென்பார் |
| 1212 | சாற்றுவேன் | சாற்றுவென் |
| 1218 | நெஞ்சத்த ராவர் | நெஞ்சத்தா ராவர் |
| 1252 | காமமெனவொன்றோ | காமமெனவொன்று |
| 1264 | கூடிய காமம் | கூடிய காலம் |
| 1267 | புலப்பேன்-புல்லுவேன்-கலப்பேன் | புலப்பென்-புல்லுவென்-கலப்பென் |
| 1271 | உண்கண் | ஒண்கண் |
| 1299 | துணையாவார் | துணையாவர் |
| 1311 | பரத்த நின் | பரத்தா நின் |
| 1328 | நுதல்வெயர்ப்பக் | நுதல்வியர்ப்பக் |

ய, ர, ல, ழ என இவை ஆசெழுத்தாக எதுகைத் தொடைகளில் வந்து பாடல்களிலே 'ஆசெதுகை' எனப் பெயர் பெறுவது உண்டு. இம்முறையிலேயே இவ்விடையின ஓசைகள் சில சொற்றொடர்களிடையிலும் புகுந்து

ஓசை இயைபுடைத்தாய்ப் பேதமின்றிச் சொல் வடிவுடன் ஒன்றி அமைந்துவருதல் காணலாம். எடுத்துக்காட்டாகக் 'கோவை' என வழங்கவேண்டும் சொல்லைக் 'கோர்வை' எனவும், 'காக்க' என்னும் சொல்லைக் 'கார்க்க' எனவும் மரபறியாது இக்காலத்து வழங்குதலைக் கூறலாம். இங்ஙனமே, 'சேவை' என்பதனைச் 'சேர்வை' என்றும், 'அகப்பை' என்பதனை 'அகழ்ப்பை' என்றும், 'மேல்வாரம்' என்பதனை 'மேவாரம்' என்றும் வழங்குதலும் இவை போல்வன பிறவும் இங்குச் சிந்தித்தற்குரியனவாம்.

யகரவொற்று ஆசுபோன்று பயின்று வந்த வடிவ மாற்றத்தை 246, 282 ஆம் பாடல்களில் வரும் பாடவேறுபாடு காட்டும். ரகரவொற்றுப் பெற்றுவந்த வேறுபட்ட வடிவங்களை 412, 413, 660, 678 ஆம் பாடல்களுக்குரிய பாடவேறுபாட்டில் காணலாகும். 64, 930 ஆம் பாடல்களில் ழகரவொற்றுப் பேறுடைய சொல் வடிவங்கள் வந்துள.

குற்றுகரங்களின் ஒலி ஒப்புமையால் வந்த மாற்றமே 'நன்று-நன்கு' (151) என்பது. குற்றியலுகர ஓசையை மிகுத்ததனால் ஏற்பட்ட மாற்றத்தை 916 ஆம் பாடலில் வரும் 'பளிங்குபோல்-பளிங்கேபோல்' என்னும் பாடவேறுபாடு காட்டும். முற்றுகர ஓசையுடையன தெரு-தெருவு, அரு-அருவு என வகரவுகரம் பெறும் இயல்பினதாகும். 261 ஆம் பாடலில் காணும் 'உரு-உருவு' என்னும் வடிவ மாற்றம் இங்ஙனம் அமைந்ததே. எடுத்தலோசையால் சில இடங்களில் ஆய்த ஒலியின் தோற்றமும், வேறு சில இடங்களில் அளபெடை யாதலும், இன்னும் சில இடங்களில் குறில் நெடிலாக நீளுதலுமாகிய மாற்றங்களைப் பெற்று வடிவவேற்றுமை பெறுகின்றன. 'வாயினது வொப்பதில்' (536) என்பது, 'வா அயின ஃதொப்ப தில்' என அளபெடை நீட்சியும் ஆய்தவொலி மிகுதலுமாக வேறுபட்டுள்ளது. 546, 565, 940 ஆம் பாடல்களில் அளபெடை பெற்றும் பெறாதும் பாடவேறுபாடு அமைதல் காணலாம். மேலும், ஓசை யழுத்தத்தால் மெய்யோசை மிகுந்தும் வருகின்ற நிலை சில இடங்களில் உள. இவ்வகை அமைப்பு

'கவ்விது-கவ்வித்து' (1144); 'என்னல்லது-என்னலது' (1168); 'என்னுளேன்-என்னுள்ளேன்' (1206) எனவரும் வடிவவேறுபாடுகளில் அமைந்துவருதல் நோக்கத்தகும்.

நிற்க, இனமான எழுத்துக்கள் ஒன்றற்குப் பிறி தொன்முக மாறுபடுதல் ஒலியமைப்பில் இயற்கையான தொரு மாற்றமே. குறள் 280 இல், 'மழித்தலும்-வழித் தலும்' என்பதில் ம—எழுத்து வ-எழுத்தாக மாறியதன் காரணம் இதுவே. ம-வுக்கு இனமாகப் ப—என்பது கூறப் பெற்ருலும் மோனைத்தொடை அமைப்பில் ம-வுக்கு 'வ' இனமாகக் கொள்ளப்படுதல் இங்குக் கருதத்தகும். 'முகம் வழித்தல்' என்னும் பேச்சுவழக்கு நாஞ்சில் நாட்டில் இன்றும் உள்ளமையும் கவனிக்கற்பாலது. 'வேறல்ல மென்பார்-வேறல்ல வென்பார்' (1209) என்னும் வேறு பாடும் இதனைச் சார்ந்து நோக்குதல் பொருத்தமாம். எதிர் கால இடைநிலைகளாகவரும் 'ப'வும்' வ'வும் ஒன்றற்கு மற் ருென்ருக மாறி வருதலாலும் வடிவமாற்றம் நேர்ந்துள் ளது. 'சிறுகுவ-சிறுகுப' (798), 'வருப-வருவ' (961) என வருவன இதற்குச் சான்றும். இங்ஙனமே உடம்படு மெய் யாகவரும் யகர-வகரங்களில் நியதி கருதாது[11] மாறிவழங் கியதனல், 'புரையிலாப்-புரைவிலாப்' (916) என்னும் வடிவ மாற்றம் நேர்ந்துள்ளது.

உயிரொலிகளில் நேர்ந்த மாறுபாடுகளும் சில உள. அகர எழுத்து அடுத்துவரும் உயிருக்கு ஏற்றவகையில் மாறி வருதலை 'உயிரச்சம்-உயிரெச்சம்' (511), 'ஊனுடை யெச்சம்-ஊனுடை யச்சம்' (1012) எனவரும் மாறுபாடு கள் கொண்டு ஊகித்து அறியலாம். தவிரவும், அ, ஆ, ஐ, ஔ என்பன தொடையமைதியில் இனமாக வருபவை. இவை ஒன்றற்கு ஒன்ருக மாறுபட்டதனல் தோன்றிய வடிவமாற்றங்களும் குறளின் பாடவேறுபாட்டில் காண் கிருேம். உ-வும் ஒ-வும், இ-யும் எ-யும் இயைபுடைத்தாய் வருதலுக்கும் ஓசையமைப்பே காரணமாகும். பின்வரும் குறட் பாட வேறுபாடுகள் இவற்றிற்கு எடுத்துக்காட்டுக் களாம் :

| | | |
|---|---|---|
| தூ ணயாவார் | துணையாவர் | 1299 |
| பரத்தநின் | பரத்தாநின் | 1311 |

| | | |
|---|---|---|
| நெஞ்சத்த ராவர் | நெஞ்சத்தா ராவர் | 1218 |
| நோயள வன்றிப் | நோயள வின்றிப் | 947 |
| அனைத்திற்கே | அனைத்தற்கே | 1129 |
| உழந்துழந்து | உழைந்துழைந்து | 1177 |
| கஃசா | கைசா | 1037 |
| நுதல்வெயர்ப்ப | நுதல்வியர்ப்ப | 1328 |
| சாற்றுவேன் | சாற்றுவென் | 1212 |
| புலப்பேன் | புலப்பென் | 1267 |
| புல்லுவேன் | புல்லுவென் | 1267 |
| கலப்பேன் | கலப்பென் | 1267 |
| தம்குடைக்கீழ்க் | தம்கொடைக்கீழ்க் | 1034 |
| உண்கண் | ஒண்கண் | 1271 |

மேலும், ந, ன, ண-என்னும் இம் மூன்றும் ஒரே இன மாதலோடு ஒலியிலும் பெரிதும் ஒற்றுமையுடையவை. இவற்றுள் ன-ண வடிவத்தாலும் நெருங்கிய ஒப்புமை யுடையவை. 'கனங்குழை-கணங்குழை' (1081), 'ஊனைக் குறித்த-ஊணைக் குறித்த' (1013) எனவரும் பாடவேறு பாடுகள் இங்குக் கருதத்தக்கன. நகர-னகர ஒலிகளில் நேர்ந்த மாறுபட்ட வடிவங்கள் பின்வருவன :

| | | |
|---|---|---|
| அதிநுட்பம் | அதினுட்பம் | 636 |
| தந்நலம் | தன்னலம் | 916 |
| தாம்வேண்டி னல்குவர் | தாம் வேண்டி நல்குவர் | 1150 |
| நன்னிலையர் | நந்நிலையர் | 1189 |
| வரிசையா நோக்கின் | வரிசையா னோக்கின் | 528 |

மகரத்திற்கு னகரம் போலியாகவரும் வழக்கு உண்டு. அறம்-அறன் ; மறம்-மறன் என்றாற்போல ஒருசொல்லின் பொருளை வேறுபடுத்தாமல் ஓரெழுத்திற்கு மாறாகப் பிறி தோரெழுத்து வருதலைப் போலி என்பர்.

| | | |
|---|---|---|
| நன்கலம் | நன்கலன் | 60 |
| நாநலம் | நாநலன் | 641 |
| இடமெல்லாம் | இடனெல்லாம் | 1064 |
| இடமில்லா | இடனில்லா | 1064 |

எனவரும் பாடவேறுபாடுகளைப் போலிவகையான் வந்த வடிவ மாறுபாடாகக் கொள்ளலாம்.

இங்ஙன்மே இடையின ஒலிகளில் ல-ளவும், ள-ழவும் ஒலித்தலால் மாறுபடுதலை இக்கால வழக்கில் மிகுதியாகக் காணலாம். குழந்தைகளின் மழலைப் பேச்சில் இம்மாற்றம் இயல்பாகவே காணக்கூடும்.

| | | |
|---|---|---|
| கொல்லாது | கொள்ளாது | 256 |
| வேலாள் | வேலாழ் | 500 |
| விளியுமென் | விழியுமென் | 1209 |
| அளியின்மை | அழியின்மை | 1209 |

எனவரும் பாடவேறுபாடுகள் மேலதற்குச் சான்ரும்.

வல்லின றகரமும் இடையின ரகரமும் மாறிவருதலினுல்,

| | | |
|---|---|---|
| வன்பாற்கண் | வன்பார்க்கண் | 78 |
| நல்லாறெனினும் | நல்லாரெனினும் | 222 |
| நல்லா றெனப்படுவது | நல்லா ரெனப்படுவது | 324 |
| முரை சான்ற | முறை சான்ற | 581 |

எனவரும் பாடவேறுபாடுகள் குறளகத்தே நேர்ந்துள்ளன.

இருசொற்கள் இணையும்போது நேரும் சந்தி மாற்றங்களும் ஓசை மாற்றத்தால் வருவனவே. உருபுகள் பெயருடன் சார்ந்துவரும் சில இடங்களில் சாரியை பெற்று வருதலும் பெருது வருதலும், ஓரமைப்பிலேயே திரிபு சந்தி மாற்றம், மிக்கொலித்தல், இயல்பாதல் என்னும் வேறுபாடுகளும் இடம் பெறுதல் கூடும்.

| | | |
|---|---|---|
| வைப்பிற்கோர் | வைப்புக்கோர் | 24 |
| கனவினுக்கிங் | கனவிற்கிங் | 1211 |
| பக்கத்துட் டெவ்வோர் | பக்கத்துத் தெவ்வர் | 639 |
| ஆற்றின் நுழைந்து | ஆற்றி னுழைந்து | 130 |
| பிறிதினோய் | பிறிதுநோய் | 315 |
| உயிருடம்பி னீக்கியார் | உயிருடம்பு நீக்கியார் | 330 |
| கீழ்நீர்க் | கீணீர்க் | 929 |
| சினத்தாற்றிச் சீறின் | சினத்தாற்றிற் சீறின் | 568 |
| காமத்துக் காழில் | காமத்திற் காழில் | 1911 |
| பெட்ப செயின் | பெட்பச் செயின் | 1257 |
| கண்ட கண்ணும் | கண்டக் கண்ணும் | 1292 |

இவ்வாறு நேரும் சந்தித் தடுமாற்றத்திற்குக் காரணம் ஒலிச்சேர்க்கையும் அதனல் நேரும் ஒலிமாற்றமுமே ஆகும்.

# 10. வடிவ ஒப்புமையால் வந்தவை

செவி கருவியாகக் கேட்டுணரும் ஒலிகளால் நேரும் மாறுபாடு ஒருபாலாக, சுவடிகளில் எழுத்தைத் தவருகப் புரிந்துகொண்டு எழுதுவதனுல் நேர்ந்த மாறுபாடுகளும் பல. வடிவால் ஒப்புமையுடைய க, ச, த-என்பனவும், த, ந ; கு, டு, ரு-என்பனவும், ந, ங–என்பனவும், ப, ம, ய-என்பனவும், ல, வ-என்பனவும், ன, ள-என்பனவும் மு, மூ-என்பனவும் வடிவத்தால் பெரிதும் ஒப்புமையுடையன. ஐகாரக் குறியீடாம் இரட்டைச் சுழிக்கொம்பிற்கும் (ை) இரண்டு சுழி ன-விற்கும் ஒப்புமையால் தடுமாற்றம் நேரும். மேலும், ஏடுகளில் புள்ளியெழுத்துக்கள் புள்ளியிட்டு எழுதப் பெருமலும் இருக்கும். எகர ஏகார, ஒகர ஓகாரக் குறியீடுகளாக வரும் கொம்புகளில் குறில் நெடில் வேறுபாடு எளிதில் அறியக்கூடாதபடியும் இருக்கும். இவற்றையெல்லாம் ஏடு பெயர்த்து எழுதுவோர் பாட்டின் ஓசை, எதுகை மோனே அமைதி, பின்வரும் சொற்களோடுள்ள இயைபு முதலியவற்றைக்கொண்டு உய்த்துணர்ந்து படித்தல் வேண்டும். தவிரவும் ஒருவர் கையெழுத்துப் போல, மற்ருெருவர் கையெழுத்து இராதன்ருே? எழுத்துருவம் தெளிவாக இல்லாமலிருக்கும்பொழுது கூர்ந்து நோக்கி அவற்றின் உண்மைத் தன்மை காணுதல்வேண்டும். குறளின் பாடவேறுபாடுகளேப் பார்க்கும்போது, எழுத்து வடிவத்தை நிச்சயிப்பதில் உள்ள இடர்ப்பாட்டாலும், அதாவது எழுதுவோர் ஒரு வடிவத்தை ஒப்புமை கருதி மற்ருென்ருகக் கருதுவதாலும் சிற்சில வேறுபாடுகள் ஏற்பட்டிருக்கலாம் என்பது உளங்கொளத்தக்கது.

| | | |
|---|---|---|
| பகவன் | பகலன் | 1 |
| மிகலினிது | மிகவினிது | 856 |
| அலர்நாண வொல்வதோ | அலர்நாண லொல்வதோ | 1149 |
| நிலத்தெறிந்தான் | நிவந்தெறிந்தான் | 307 |

என்பவை ல-வ எழுத்துருவின் தடுமாற்றத்தால் நேர்ந்தன.

| | | |
|---|---|---|
| யெய்யாமை | பொய்யாமை | 296 |
| வேண்டுபவர் | வேண்டுமவர் | 320 |
| மாய்ந்து கெடும் | மாய்ந்து விடும் | 601 |
| மேலாயவர் | மேலாமவர் | 1016 |
| மாற்றும் படை | யாற்றும் படை | 985 |
| செய்பவோ | செய்யுமோ | 1195 |

என வருவனவற்ருல் ப, ம, ய-எழுத்துக்களுக்குள் தடுமாற்றம் வந்தமை புலப்படும்.

'இன்னம் யாம்-இன்மை யாம்' (790) என்பதில் 'னம்' என்பது மையாக வாசிக்கவும், 'நோவல்-நேர்வல்' (1236) என்பது புள்ளியின்றியும் புள்ளிகூட்டியும் வாசிக்கவும் நேர்ந்ததனுல் வந்த பாட வேறுபாடுகளாம்.

| | | |
|---|---|---|
| இன்றிவரும் | இன்றி விடும் | 1042 |
| இதுநகத் | அதுநகத் | 1173 |
| நல்லவர்க் கேளர் | நல்லவர்க் கோரம் | 1305 |
| காதல ரில்லா | காத லவரில், காதலவ ரில்லா | 1208 |

என்பனவெல்லாம் பெரும்பான்மையும் வடிவ ஒப்புமையால் மாறுபட வாசித்துக்கொண்டனவே. பின் வருவனவற்றுள் க, ச, த, ந முதலிய வடிவ ஒற்றுமையுடைய எழுத்துக்கள் மாறுபடக் கொள்ளப்படுதல் காணலாம்:

| | | |
|---|---|---|
| அறிகொன் றறியான் | அரிதொன் றறியான் | 638 |
| அளக்குங்கோல் | அலைக்குங்கோல் | 710 |
| கடிதோச்சி | கடிதோக்கி | 562 |
| ஏமார்த்தல் | ஏமாத்தல், ஏமாக்கல் | 660 |
| இழுக்குத் தரும் | இழுக்கந் தரும் | 911 |
| ஈந்த திவ்வூர் | ஈத்த திவ்வூர் | 1142 |
| நாணூர்கொல் | காணூர்கொல் | 1205 |
| கலத்த லுறுவது | கலக்க லுறுவது | 1259 |
| நினைத்தக்கால் | நினைந்தக்கால் | 1296 |

ஒரு சுழிக்கொம்பும் இருசுழிக்கொம்பும் மாறிவருதலால் நேர்ந்த குறில்-நெடில் மாற்றங்களைக் காட்டுவன கீழ்வரும் பாட வேறுபாடுகள் :

| | | |
|---|---|---|
| புலப்பேன் | புலப்பென் | 1267 |
| புல்லுவேன் | புல்லுவென் | 1267 |
| கலப்பேன் | கலப்பென் | 1267 |
| சாற்றுவேன் | சாற்றுவென் | 1212 |

# 11. எழுதுங்கால் இடமாற்றம் பெற்றவை

படி எழுதுகின்ற காலத்து ஒலிமாற்றத்தாலோ, அல்லது விரைந்து எழுதுதலாலோ ஒருசில விகுதி, உருபு, சொல் பகுதிகளை இடமாற்றி எழுதிவிடுதலும் நிகழக் கூடியதே.

‘யாது கொடுத்துங் கொளல்-யாதும் கொடுத்துக் கொளல்’ (703) என்பதில், கொடுத்தும் என்பதிலுள்ள ‘உம்’ முன்புள்ள ‘யாது’ என்பதனுடன் சேர்த்து எழுதப் பெற்றுப் பாடவேறுபாடு கொண்டுள்ளது.

‘பெருமை சிறுமைதான்-சிறுமை பெருமைதான்’ (980) என்பதில் பெருமை, சிறுமை என்னும் சொற்களே இட மாறியுள்ளன. ‘இருபுனல்-வருபுனல்; வருபுனல்-இருபுனல்’ (737) : இங்கும் சொற்கள் இடம் பெயர்ந்து மாறிக் காணப்படுகின்றன.

‘அஃதொருவற் கொற்கத்தின்-அஃதொருவ னொற்கத்திற்கு’ (414) : இங்கே குவ்வுருவு இடமாற்றம் பெற்றுள்ளது.

‘கனவினுக் கியாது செய்வேன்கொல்-கனவிற்கிங் கியாது சொல் செய்வென்’ (1211) ; ‘தோள்மேல்-மென்தோள்’ (1262) எனவரும் மாற்றங்களும் மேலன போன்றனவே.

## 12. இடைச்சொல் ஆட்சியில் பொருட் சார்பால் ஏற்பட்டவை

ஒரு சில சொற்களில் ஓர் இடைச் சொல் வழக்கிற்குப் பதிலாகப் பிறிதோர் இடைச் சொல் இடம் பெறுகிறது.

| | | |
|---|---|---|
| நன்மையின் நீங்கும் | நன்மையும் நீங்கும் | 194 |
| ஐயத்தின் | ஐயத்துள் | 353 |
| சொல்லைப் | சொல்லின் | 645 |
| யானேவென் | யானேயென் | 1254 |

எனவரும் பாடவேறுபாடுகளில் இடம் பெற்றுள்ள இடைச் சொற்பேறு கவனிக்கத் தக்கது.

வேற்றுமை உருபுகளிலும் மாற்றங்கள் நேர்ந்ததனால், பாடவேறுபாடு பல காணப்படுகின்றன. இவற்றுள் ஐந்தன் உருபும் மூன்றன் உருபும் மாறிவந்த இடங்கள் சில.

| | | |
|---|---|---|
| மன நலத்தின் | மன நலத்தான் | 459 |
| வேட்பத்தான் | வேட்பத்தின் | 646 |

ஐந்தாம் உருபோடு ஏழாம் உருபு மயங்கியதனால் வந்த மாற்றத்தைப் பின்வரும் பாடவேறுபாடுகளில் காணலாம் :

| | | |
|---|---|---|
| குற்றத்தின் | குற்றத்துள் | 502 |
| நூலாருள் | நூலாரின் | 683 |
| வேலாருள் | வேலாரின் | 683 |
| கருமணியின் | கருமணியுள் | 1123 |

இன்னும் சில இடங்களிலே ஏழனுருபுகளில் ஒன்றற்குப் பிரதியாக மற்றென்று இடம் பெற்றும் பாடவேறுபாடு களைத் தோற்றுவித்துள்ளன.

| | | |
|---|---|---|
| தாழ்ச்சியுள் | தாழ்ச்சியில் | 671 |
| நூலாருள் | நூலார்முன் | 683 |
| மறையாவழி | மறையாக்கடை | 846 |
| உணர்ச்சியுள் | உணர்ச்சியில் | 976 |
| மணியில் | மணியுள் | 1273 |

இவ்வேறுபாடுகளால், இல், உள், முன், வழி, கடை என்னும் ஏழனுருபுகள் இயைபுபட்டுப் பாடவேறுபாடு களைத்தந்துள்ளன என்பது விளங்கும். 'ஆற்றுவா ராற்றல்-ஆற்றுவார்க் காற்றல்' (225) என்பது உருபு தொக்கும் விரிந்தும் அமைந்ததனல் நேர்ந்த பாடவேறுபாடாகும்.

பெயர்ச் சொல் வினைச் சொற்களுடன் விகுதி, சாரியை என்பன சேர்ந்துவரும்போது, பொருளமைதி ஓசை யொருமைக்கு ஏற்ப, வேறு விகுதியோ சாரியையோ மாறி வந்து பாடவேறுபாடுகளைப் பெருக்கியுள்ளன. குறளின் பாடவேறுபாட்டு அடைவிலிருந்து பின் வருவனவற்றைச் சான்ருகக் காட்டலாம் :

| | | |
|---|---|---|
| அன்றறிவாம் | அன்றறிவோம் | 36 |
| நகுப | நகுவர் | 1140 |
| என்ப வறியார் | என்ப ரறியார் | 76 |
| விழையப் படுவ | விழையப் படுவர் | 810 |
| யாமு முளேங்கொல் | யாமு முளங்கொல் | 1204 |
| ஒன்றன் | ஒன்றின் | 253, 259 |
| பிறிதொன்றன் | பிறிதொன்றின் | 257 |
| இவை மூன்றன் | இவை மூன்றின் | 360 |
| உடையர் | உடையார் | 160 |
| துணையாவார் | துணையாவர் | 1299 |
| தமரல்லர் | தமரல்லார் | 1300 |
| செய்யாமல் | செய்யாமை | 101, 313 |
| இகவாமை | இகவாமல் | 779 |
| அற்றது | அற்றமை | 942 |
| கிடந்தமை | கிடந்தது | 957 |
| சூழாமல் | சூழாது | 1024 |
| வேண்டாது | வேண்டாமல் | 1037 |
| உறின் | உறில் | 1270 |

| | | |
|---|---|---|
| தரலான் | தரலால் | 131 |
| காக்கினென் | காக்கிலென் | 301 |
| விழையாமை | விழையாரேல் | 692 |
| நோவல் | நோவேம் | 1236 |
| பரிதல் | பரிதி | 1243 |
| புலத்தை | புலத்தி, புலத்தல் | 1301 |
| புல்லா விடல் | புல்லார் விடல் | 1303 |
| சார்புணர்ந்து சார்பு | சார்வுணர்ந்து சார்வு | 359 |
| இயல்பு | இயல்வு | 382 |
| நன்றுல் | நன்றும் | 1038 |
| நான்கும் | நான்கின் | 953 |
| செய்ததிலர் | செய்வதிலர் | 954 |

இவ்வேறுபாடுகளில் விகுதி மாற்றங்களைக் கவனித்தால் அவற்றின் பொருள் மாறுபடாது வடிவஅமைப்பிலே மாற்றம் நேர்ந்தமை பெறப்படும். இடைக் கொட்கின்-இடைக் கொட்பின்' (663) எனவரும் பாடவேறுபாட்டில் இடை நிலையில் மாற்றம் ஏற்பட்டுள்ளது.

# 13. கற்ருராலும் பாடமாறுபாடு வந்து புகுதல்

சொற்களின் பொருள் மாறுபடாத வகையில் உருபு விகுதி, சாரியை, இடைநிலை முதலியவற்றில் மாறுபட்ட வடிவம் தோன்றியது கற்று வல்ல அறிஞர்களால் நிகழ்ந் திருக்கக் கூடியதே. ஒன்றை விடவும் மற்ருென்று பாவின் ஓசைக்குச் சிறந்த அமைப்பு எனக்கொண்டு, கற்போர் தம் விருப்பு வெறுப்புக்களுக்கு இணங்க இங்ஙனம் அமைத்துக் கொண்டனரோ என்று எண்ணவும் இடமுண்டு. யாப் பருங்கல விருத்தியுரையில் ஓர் உதாரண மேற்கோளாகத் தரப்பட்ட குறள்வடிவம் இக்கருத்தினை அரண் செய்வதா யுள்ளது.

> ‘அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
> தவ்வையைக் காட்டி விடும்’ (167)

என்னும் குறள் வடிவத்தில், ‘செய்யவள்’ எனவரும் ஒரூஉ எதுகைக்கு ஏற்ப, ‘ஔவித்து’, ‘தௌவையை’ என்னும் சொற்கள் போலி எழுத்தாகவரும் ‘அவ்’ வடிவம் தந்து பதிப்பிக்கப்பட்டு வருகிறது. தொடைநயச் சிறப்பிற்கு ஏற்ற வடிவம் இதுவே எனக் கருதப்படுகிறது.

யாப்பருங்கல விருத்தியுரைகாரரோ இப் பாட்டை ஔகாரக் குறுக்கத்திற்கு எடுத்துக்காட்டாகத் தந்து,

> ஔவித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
> தௌவையைக் காட்டி விடும்’

என ஔகாரத்திற்குரிய இயல்பான வடிவில் குறட்பாவை யும் அமைத்துக்காட்டியுள்ளார். இதனுல், இவர் கொண்ட வடிவமே பழைய வழக்கு என்றும், போலியெழுத்திட்டு வடிவ மாற்றத்துடன் வழங்கியது யாப்பிலக்கண முறைமை கருதிய புலவர்களால் நேர்ந்தது என்றும் கொள்ள இடமுண்டு.

# 14. இலக்கண வகையால் ஏற்பட்ட மாற்றங்கள்

இலக்கண முறைமையை மனத்துள் கொண்டவர்களால் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று கருதத்தக்க பாட வேறுபாடுகள் சில பின் வருமாறு :

| | | |
|---|---|---|
| யார்ரையும் | யாவரையும் | 509 |
| இவன் முடிக்கும் | இவன் முடிப்பன் | 517 |
| மன்னவன் நாட்ட | மன்னவன் நாட்டில் | 545 |
| அமைவரண் | அமைவரணும் | 743 |
| தங்கிற்றுலகு | தங்கு முலகு | 876 |
| இரப்பவர் சொல்லாடப் | இரப்பார்க்குச் சொல்லாடப் | 1070 |
| செய்தார்க்கு | செய்வார்க்கு | 658 |
| வருந்தினார்க்கு | வருந்துவார்க்கு | 1131 |
| இன்பம் விழையான் | இன்பம் விழையாது | 628 |
| நல்காரை | நல்காமை | 1219 |
| சொல்தெரிதல் | சொல்தெரிய | 717 |
| அமையுமே | அமைந்ததே | 1193 |
| படாஅதி | படாஅது | 1210 |
| சொல்லா விடல் | சொல்லார் விடல் | 697 |
| நள்ளா விடல் | நள்ளார் விடல் | 1912 |
| பற்றா செயினும் | பற்றார் செயினும் | 852 |
| ஓவாவரல் | ஓவார் வரல் | 1205 |
| அஃதின்றேல் | அஃதிலரேல் | 1014 |
| கெழீஇயிலர் | கெழீஇயிலரே | 1194 |
| நட்பது | நட்பதே | 786 |
| பின்னீர | பின்னீர்மை | 782 |
| விழைதகையான் | விழைதகையார் | 804 |
| மிகல் மேவல் | மிகல் மேவும் | 857 |
| இகல் மேவல் | இகல் மேவும் | 857 |
| கீழ்நீர்க் | நீர்க்கீழ்க் | 929 |
| எந்நலத் | யாநலத் | 982 |
| நெஞ்சேயாம் | நெஞ்சே நாம் | 1245 |

வினையெச்ச வாய்பாடுகள் பொருளுக்கு ஏற்ப வாய்பாடு மாறிவரும் இயல்பினை உடையவாம். ஒரு வாய்பாட்டில் காணப்பட்டாலும் பொருளுக்கு இயைபுடைய வாய்பாடாகக்கொண்டு பொருள் கொள்வர். 1234 ஆம் குறளில், 'பணைநீங்கி', 'துணைநீங்கி' என்பவற்றிற்குப் 'பணை நீங்க', 'துணைநீங்க' என மாறிவரும் பாடமும், 1242ஆம் குறளில் 'அவரிலராக நீ' என்பது 'அவரிலராயின் நீ' என மாறிவரும் பாடமும் வினையெச்ச வாய்பாடுகள் மாறியமையால் ஏற்பட்டனவாம். இங்ஙனமே, தன்வினை பிறவினை வாய்பாடுகளும் மயங்கிவந்தமையால் சில பாட வேற்றுமைகள் ஏற்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| நீங்கியான் | நீக்கியான் | 341 |
| நன்மையின் நீக்கும் | நன்மையின் நீங்கும் | 194 |
| போழ | போழ்ப்ப | 1234 |

என வருவன எடுத்துக்காட்டுக்களாம்.

உயர்திணைச் சொற்களிலும் சரி, அஃறிணைச் சொற்களிலும் சரி, சில இடங்களில் ஓர் உரைகாரர் ஒருமை வடிவிலும் மற்றொருவர் அதனையே பன்மை வடிவிலும் பயன்படுத்தியுள்ளார். இவ்வகையாக வந்த பாடவேறுபாடு ஏறத்தாழ முப்பது குறட்பாக்களில் இடம் பெற்றுள்ளன.

திருக்குறள் உரையாசிரியர்களுள் முற்பட்டவராகக் கருதப்படுபவர் மணக்குடவர். இவர் ஒருமையாகக் கொண்ட பாடத்தைப் பன்மையாகவும், இவர் பன்மையாகக் கொண்ட பாடத்தை ஒருமையாகவும் பரிமேலழகர் கொண்டிருக்கிறார். இங்ஙனமே, காளிங்கர், பரிதியார் என்னும் முன்னைய உரையாசிரியர் பாடங்களுக்கும் பரிமேலழகர் பாடங்களுக்கும் ஒருமை-பன்மை வாய்பாட்டு வகையால் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

மணக்குடவருக்கும் பரிமேலழகருக்கும் ஒருமை பன்மை வாய்பாடு காரணமாகப் பாடம் வேறுபட்ட இடங்களை முதலில் நோக்குவோம்.

| பரிமேலழகர் | மணக்குடவர் | |
|---|---|---|
| பெற்றாற்பெறின் | பெற்றார்ப்பெறின் | 58 |
| ஒருவற் கிரத்தல் | ஒருவர்க் கிரத்தல் | 1052 |

இவற்றில் மணக்குடவர் கொண்ட உயர்திணைப் பன்மைப் பாடம் உயர்திணை—ஒருமையாகக் கொள்ளப் பட்டிருக்கிறது. இவ்வாறே மணக்குடவர் உயர்திணை-ஒருமையாகக் கொண்ட பாடத்தைப் பரிமேலழகர் உயர் திணைப் பன்மையாகக் கொண்டதும் உண்டு. பின்வருவன இதற்கு எடுத்துக்காட்டுக்களாம்:

| பரிமேலழகர் | மணக்குடவர் | |
|---|---|---|
| வித்தகர்க் | வித்தகற் | 235 |
| தூதுரைப்பார்க்கு | தூதுரைப்பாற்கு | 682 |

மேலும், 'ஒல்லாதே' (139) என அஃறிணை-ஒருமையாக மணக்குடவர் கொண்ட பாடம் பரிமேலழகரால் 'ஒல் லாவே' (139) என அஃறிணைப் பன்மைவடிவில் கொள்ளப் பெற்றிருக்கிறது. 309 ஆம் குறளில், 'உள்ளிய' என மணக்குடவர் கொண்ட பன்மைப்பாடம் பரிமேலழகரால், 'உள்ளியது' (309) என ஒருமையாகக் கொள்ளப் பெற்றி ருக்கிறது. 1052 ஆம் குறளில் 'இரந்தவை' எனப் பரி மேலழகர் கொண்ட பாடம் 'இரந்தவர்' என மணக்குடவர் கொண்ட உயர்திணைப் பன்மைப் பாடத்திற்கு ஈடாக வந்துள்ளது. இருதிணைப் பொதுப் பெயராட்சியிலும் இவ்விரு உரைகாரரிடையிலும் ஒருமை-பன்மை வேற்றுமை வடிவம் காணப்படுகிறது. பின்வரும் பாடவேறுபாடு களில் இவ்வகை அமைப்பினைக் காணலாம்:

| பரிமேலழகர் | மணக்குடவர் | |
|---|---|---|
| இலனென்று | இலமென்று | 205 |
| தன்னை நினைக்கத் | தம்மை நினைக்கத் | 250 |
| தந்நோய் | தன்னோய் | 315 |

பரிதியார் பன்னிரண்டாம் குறளில், 'துப்பாற்குத்' என ஒருமையாகக் கொண்ட பாடம் பரிமேலழகரால், 'துப்பார்க்குத்' எனப் பன்மையாகக் கொள்ளப் பெற்றிருக் கிறது. 319ஆம் பாடலில் 'தாமே வரும்' என்னும் பாடம் ஒருசில பிரதிகளில் 'தானே வரும்' என்றும் உள்ளது.

ஒருமை-பன்மையாகப் பாடவேறுபாடு காளிங்கருக் கும் பரிமேலழகருக்கும் பல பாடல்களில் காணப்படு கின்றன.

| பரிமேலழகர் | காளிங்கர் | |
|---|---|---|
| வகுத்தான் | வகுத்தார் | 377 |
| வல்லாற்கு | வல்லார்க்கு | 387 |
| ஒருவற்கு | ஒருவர்க்கு | 400 |
| அறிவுடையான் | அறிவுடையார் | 622 |
| உணர்வானைத் | உணர்வாரைத் | 702 |
| அறிவிலான் | அறிவிலார் | 842 |
| அவனை | அவரை | 958 |
| ஒளியொருவற்கு | ஒளியொருவர்க்கு | 971 |
| இளியொருவற்கு | இளியொருவர்க்கு | 971 |
| நாணுவார் | நாணுவான் | 1015 |
| எம்மைக் | என்னைக் | 1205 |
| எந்நெஞ்சத் | என்னெஞ்சத் | 1205 |
| யானிரப்பக் | யாமிரப்பக் | 1212 |
| இவையென்னைத் | இவையெம்மைத் | 1244 |
| என்னினும் | எம்மினும் | 1290 |
| என்றேன் | என்றேமா | 1314 |
| உள்ளினேன் | உள்ளினேம் | 1316 |
| தும்மினேனாக | தும்மினேமாக | 1328 |
| செய்தது | செய்தன | 1240 |

இவற்றை ஆழ்ந்து நோக்கும்போது 1015, 1205 ஆம் எண்ணுள்ள இரு குறள்களைத் தவிரப் பிற இடங்களில் எல்லாம் காளிங்கர் கொண்ட பாடம் பன்மை வடிவமாக வும், பரிமேலழகர் கொண்ட பாடம் ஒருமை வடிவிலும் அமைந்திருக்கக் காணலாம். திருக்குறளில் இறைவனை 'ஆதி பகவன்' (1), 'மலர் மிசை யேகினான்' (3), 'அறவாழி யந்தணன்' (8) எனக் கடவுள் வாழ்த்துப் பகுதியிலும், 'பற்றற்றான்' (350), 'தாமரைக் கண்ணான்' (1103) எனப் பிற இடங்களிலும் ஒருமை வாசகத்தால் குறிப்பதனால், 377 ஆம் பாடலிலும் 'வகுத்தான்' என ஒருமை வடிவான பாடம் பரிமேலழகரால் கொள்ளப்பெற்றது என்று துணிய லாம். இங்ஙனமே ஏனைய இடங்களிலும் பரிமேலழகர் கொண்ட பாடம் குறளாசிரியர் பிற இடங்களிலும் சொல்லிச் செல்லும் மரபினை நுண்ணிதின் ஆராய்ந்து அமைத்துக் கொண்ட பாடங்களா என்பது மேலும் ஆராய்வதற்குரியது.

# 15. ஆசிரியர் உளமறிந்து மரபுவழி அமைதி காணவேண்டும்

தெய்வப் புலவராம் திருவள்ளுவர் பாடலில் உள்ள பாடவேறுபாடுகளையும் உரையாசிரியர்களிடையே காணும் கருத்து மாறுபாடுகளையும் எண்ணிப் பார்க்கும்போது, இவ் வேறுபாடுகளுள் எதுதான் ஆசிரியர் வாக்காக இருத்தல் கூடும் என்னும் ஐயம் நிகழ்தல் இயல்பே. வள்ளுவர் வாக்கு அவர்தம் கருத்தை உணர்த்துதற்குக் கருவியாகக் கொண்ட குறட்பாவின் இலக்கணத்திற்கும், அதற்குரிய தொடைக் கட்டுக் கோப்புக்களுக்கும், மற்றும் அவர்தம் வாக்கில் பயிலும் சொல்-தொகுதிகளுக்கும், மொழி மரபுகளுக்கும் மாறுபடாவண்ணமே அமைந்திருத்தல் வேண்டும். பாவின் சந்த இன்பம் எங்கும் பிறழா வகையில் திருவள்ளுவர் தம் கருத்துக்களைக் குறட்பாவின் வழியாகச் செறித்து இனிது விளக்கிச் செல்கின்றார். ஆங்காங்கே சிற்சில பாடல்களில் பயின்றுவரும் அளபெடை ஓசையைக் கவனித்துப் பார்ப்போமானால், அங்கெல்லாம் செய்யுளின் சந்தம் முற்றுப்பெறவே அந்நீட்சியை ஆசிரியர் கொண்டுள்ளமை புலனாகிறது. பெரும்பான்மை அளபெடைகளும் செய்யுளிசை நிறைக்கவே வந்துள்ளன. இன்னிசைக்காக அளபெடுத்தவை சிலவே. இங்ஙனமே, வலித்தல்-மெலித்தல், நீட்டல்-குறுக்கல், விரித்தல்-தொகுத்தல் என்னும் செய்யுள் விகாரங்களையும் சிற்சில பாடல்களில் மேற்கொள்வதும் பாவின் வண்ணம் கெடாமைப் பொருட்டேயாகும். ஆகவே, நாம் பாட வேறுபாடுகளை ஆராய்ந்து துணியும்போது தொடையின்பத்திற்குச் சிறந்ததான வள்ளுவர் வாக்கின் மரபினை ஒட்டியே பார்த்தல் வேண்டும்.

தொடை நயம் நோக்கிப் பாட்டில் நிகழ்ந்துள்ள மாறுதல்களில் ஒருசிலவற்றைப் பரிமேலழகர் தம் உரை விளக்கத்தில் அங்கங்கே எடுத்துக் காட்டியுள்ளார்.

> ‘இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
> மாசறு காட்சி யவர்க்கு’

என்னும் குறளில் (352), “நீங்கி எனத் தொடை நோக்கி மெலிந்து நின்றது; நீங்க என்பதன் திரிபு எனினும் அமையும்” என்றும்,

> ‘விருப்பறுச் சுற்றம் இயையின் அருப்பறு
> ஆக்கம் பலவும் தரும்’

என்னும் குறளில் (522), “‘அருப்பறு’ என்பது தொடை நோக்கி விகாரமாயிற்று” என்றும் குறிப்பிட்டுள்ளார் பரிமேலழகர். மற்றும் இவர்,

> ‘சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகல் செல்வந்தான்
> பெற்றத்தால் பெற்ற பயன் (குறள் 524)

என்பதில், “பெற்ற என்பதிலுள்ள அகரமும் அதனல் என்பதனுள் அன் சாரியையும் விகாரத்தால் தொக்கன” என்கிருர். அதாவது ‘பெற்றதனுல்’ என்பது ‘பெற்றத்தால்’ என்ருகியது என்பது கருத்து. ‘மேவுவார்’ என்பது தொடை நோக்கி ‘மேவார்’ எனச் செய்யுள் விகாரமாய் நின்றது (1059). ‘பேதை பெருங்கெழீஇ நட்பின்’ (குறள் 816) என்பதில், “கெழீஇய என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது” என்பர். ‘வன்க ணதுவே படை’ (764), ‘ஆற்ற லதுவே படை’ (765) என்னும் இடங்களில் குற்றியலுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத்தான் வந்தது என்று எழுதுகிருர். இங்கே குற்றிய லுகரத்தின் முன்வரும் ‘ஏ’- ‘வன்கணதே’, ‘ஆற்றலதே’ எனச் சந்தி மாற்றம் பெற வேண்டுவது விரித்தல் விகாரத்தால் வகர உடம்படுமெய் பெறலாயிற்று என்பது கருத்தாகும்.

1299, 1300 ஆம் பாடல்களில், ‘தாமுடைய நெஞ்சம்’ எனத் தன்மைப் பன்மையாகிய ‘தாம்’ என்பது உடைய என்பதனோடு சேரும்போது, முதல் மொழியின் முதல் குறுகித் ‘தம்’ என ஆகாதும், மகரமெய் இரட்டிக்காதும் இயல்பு சந்தி கொள்ளப்பெற்றது பாவின் ஓசையினிமை

கருதியதாதல் வேண்டும். ஈரிடத்தும் 'தம்முடைய' என்றிருப்பினும் தளை சிதையாது ஓசையும் பொருளும் ஒன்றி நிற்கும் தன்மையவே. இங்ஙனமே 228ஆம் குறளில் 'தாமுடைமை வைத்திழக்கும் வன்க ணவர்' என வருவதும் நோக்கத்தகும்.[12]

'இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று' (குறள் 1058)

என்னும் இக் குறட்பாவில், 'மரப்பாவை' என்னும் இரண்டாம் அடிக்கு ஏற்ப 'இரப்பாரை' எனவரும் முதலடிப் பாடமே எதுகைத் தொடை நயமுடைய பாடம். "இத் தொடையின்பம் நோக்காது 'இரப்பவர் இல்லாயின்' என்று பாடமோதுவாரும் உளர்" என்று பாவின் மரபினை நினைவூட்டுகின்றார் பரிமேலழகர்.

'மறைபெறல் ஊரார்க் கரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணா ரகத்து. (குறள் 1180)

இங்கே, "அகத்து நிகழ்வதனைப் புறத்துள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலான் ஒப்புமையுண்மையின் அறைபறையாகிய கண் என்றாள். இங்ஙனம் செய்யுள் விகாரமாக்காது 'அறைபறைக் கண்ணார்' என்று பாடமோதுவாரும் உளர்" என்கிறார் உரைகாரர் பரிமேலழகர். இங்கே வந்த தொகுத்தல் விகாரம் தொடையின்பம் நோக்கி அமைந்தது என்பது அவர் கருத்தாதல் வேண்டும்.

ஆகவே, ஒரு பாடத்தை உரிய பாடம் என்று துணிவதற்குப் பாமரபுகளும் துணைசெய்வதாகும் என்பது விளங்கும். பாட்டிற்கு இன்றியமையாத வண்ணம்பற்றித் திருவள்ளுவரே,

'பண்ணென்னும் பாடற்கு இயைபின்றேல் [கண்ணென்னும்
கண்ணோட்டம் இல்லாத கண்' (குறள் 573)

என்னும் பாடலில் உவமையாகச் சுட்டி உணர்த்தியுள்ளார்.

எனவே, ஆசிரியர் தம் நூலுள் ஆளும் பலவகை மரபு களையும் உளத்துள்கொண்டு எது உண்மைப் பாடமாதல் வேண்டும் என்பது துணியப்பட வேண்டும்.

செய்யுளின் மரபை அடியொற்றியும் ஆசிரியப் பெருந் தகை வள்ளுவனாரின் உள்ளக்கிடக்கையை உற்று நோக்கி யும், நாட்டின் பழக்க வழக்க மரபு, மொழி மரபு முதலிய வற்றைக் கருத்தில் கொண்டும் பார்க்கும்போது, பரி மேலழகர் கொண்ட பாடத்தினும் நயமுடையதாக முந்திய உரையாசிரியர் முதலியோர் கொண்ட பாடம் சில இடங் களில் சிறந்து விளங்கக் காணலாம்.

# 16. காளிங்கர் கொண்ட பாடங்களின் சிறப்பு

காளிங்கர் உரையை ஏட்டுப் பிரதியிலிருந்து முதல் முறையாக அச்சிட்டு வெளிப்படுத்திய (1948) பதிப்பாசிரியர் வித்துவான் தெ. பொ. பழனியப்ப பிள்ளையவர்கள் தமது பொருட்பால் முகவுரையில் காளிங்கர்தம் உரையிற்கொண்ட மூலபாடங்கள் பரிமேலழகர் பாடத்தை விடவும் சிறப்புடையனவாகக் காணப்படுதலைச் சில எடுத்துக்காட்டுக்கள் தந்து விளக்கியுள்ளார்கள். அவர்களுடைய ஆய்வுரை வருமாறு :

"காலிங்கருரையிற்கண்ட[13] குறட்பாக்களின் மூலபாடங்கள் பழமையாதலோடு சிறப்புடைய வாதலும் புலப்பாடு பெறும். 'வெருவந்த செய்யாமை' அதிகாரத்தில், 'கடிதோச்சி மெல்ல வெறிக' என்ற பாடமே பரிமேலழகர் கொண்டது (குறள் 562). காலிங்கர் கண்ட பாடம் 'கடிதோக்கி மெல்ல வெறிக' என்பது ஆகும். எறிதல், வீசுதல் என்னும் பொருளதாகிய 'ஓச்சுதல்' என்பதினும், உயர்த்தல் ஓங்குவித்தல் என்ற பொருளதாகிய 'ஓக்குதல்' என்பது பொருட் சிறப்புடையது ஆதலோடு பின் வரும் சீராகிய 'நெடிதாக்கம்' என்பதனோடு ஒரூஉ வெதுகைத் தொடைச் சிறப்புடையதாய்ப் பாடற்கு ஓசை நய மூட்டுதல் தேர்ந்து கொள்க.

'உழவு' என்ற அதிகாரத்தில், 'பலகுடை நீழலுந் தங்குடைக் கீழ்க் காண்பர்' என்று பாடங்கொண்டார் பரிமேலழகர் (1034). காலிங்கர் கண்ட பாடம், 'பலகுடை நீழலுந் தங்கொடைக் கீழ்க் காண்பர்' என்பது. உழுதுண்டுலகூட்டும் வேளாண் மாந்தர்க்கு இலக்கணவகையான் தமக்கெனக் குடையின்மை கண்ட பரிமேலழகர், 'தம்குடை' என்பது 'தமது வேந்தன் குடை' என்று ஆகுபெயர்ப் பொருள்கொண்டு பொருத்தினர்.[14] ஆயின், காலிங்கர் வள்ளுவனார் தெள்ளிய வாய்மொழி 'தங்

கொடை' என்றே கொண்டு இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும் உழவிடை விளக்கும் பழவிறலோர் கொடைத் திறனைக் குறித்ததாகக் கூறினர்.

மற்றும் பரிமேலழகர், 'இலமென் றசைஇ யிருப்பாரை' என்ற குறளுரை விளக்கத்தில் (1040), 'இரப்பாரை என்று பாட மோதுவாரு முளர்' என்றெழுதியது இக்காலிங்கருரைப் பாடங் கண்டென்றே நோக்கிக் கொள்ளுக." (திருக்குறள்-பொருட் பால்: காலிங்கருரை - பரிப்பெருமாளுரை, 1948. முகவுரை பக். iii-iv.)

திரு. வித்துவான் தெ. பொ. பழனியப்ப பிள்ளையவர் களைப் போலவே திருக்குறள்-உரைவளம் பதிப்பினை ஆக்கித் தமிழுலகிற்கு வழங்கிய மகாவித்துவான் ச. தண்ட பாணி தேசிகர் அவர்களும் காளிங்கர் கொள்ளும் பாட வேறுபாடுகளைப் பாராட்டி உரைத்துள்ளார். காமத்துப் பால் தொகுப்பின் முகப்பிலே அவர்கள் எழுதிச் சேர்த் துள்ள 'திருக்குறள் ஆராய்ச்சி' என்னும் பகுதியில் பின் வரும் குறிப்புக் காணப்பெறுகிறது (பக். 114-115).

"இவர் (காளிங்கர்) குறளுக்குக் கொள்ளும் பாட பேதங்கள் மிகச் சிறந்தன. எடுத்துக்காட்டாக, 'நயன் சாரா நன்மையின் நீக்கும்' என்ற குறளுக்கு (194) 'நயன்சாரா நன்மையும் நீங்கும்' எனப் பாடங் கொண்டனர். இதில் நயன் சாராவாய் அவனை நற்குணங்களின் நீக்கும் எனச் சில வருவித்துரைக்கக் கூடிய நிலையின்றி, 'நயஞ்சேராமல் திருமாதும் பொய்க்கும்' என்றது மிக எளிமையிற் பொருள்காண நிற்பதொன்று. அவ்வாறே, 'பிறப்பென்னும் பேதைமை நீங்க' (358) என்றதை 'நீங்கி' எனக் கொண்டார். 'வேண்டாமை யன்ன' என்ற குறளில் (363) 'ஆண்டும்' என்பதற்குப் பதிலாக 'யாண்டும்' என்று பாடங் கொண்டார். 'அன்பகத்தில்லா' என்ற குறளில் (78) 'வன்பால்' என்பதனை 'வன்பார்' எனக் கொண்டார். இத்தகைய இடங்கள் பல. இவற்றால் பொருட் சிறப்பிருத்தலை அறியலாம்."

மேலே குறிக்கப்பெற்ற இரு பதிப்பாசிரியர்களும் காளிங்கர் உரை தெளிவான எளிய உரை என்றும், அவர் கொண்ட பாடங்கள் பல இடங்களில் போற்றற்குரியன என்றும் சிறப்பித்துக் கூறுதல் கொண்டு பரிமேலழகருக்கு முன் பழைய மரபினைக் காத்த பெருமையுடையார் இவ் வுரையாசிரியர் என்பது தெளிவு.

# 17. மணக்குடவர் தரும் நயமுடைய பாடங்கள்

இங்ஙனமே திருக்குறள் உரைகாரர்களுள் முந்தியவர் எனக் கருதப்படுபவராகிய மணக்குடவர் கொண்ட பாடங்களும் சிற்சில இடங்களில் நயமுடையனவாகவே காணப் படுகின்றன.

> 'வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
> கியாண்டு மிடும்பை யில' (குறள் 4)

என முதலடியில் வகையுளியாக வேண்டாமை என்பதனை 'வேண் டாமை' எனப்பிரித்துப் பாடம் கொள்கிருர் பரிமேலழகர். மணக்குடவரோ,

> 'வேண்டுதல் வேண்டாமை யில்லா னடிசேர்ந்தார்
> யாண்டு மிடும்பை யிலர்'

எனச் சொல்வடிவம் சிதைவுபடாமல் இயற்கையாகச் சொற்கள் சீர்களில் அமையும் பாடம் தருகிருர். இவருடைய பாடத்தில் முதலடி இணைமோனை இணையெதுகை நயமும் வாய்ந்து காணப்படுகிறது. மேலும்,

> 'மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
> நிலமிசை நீடுவாழ் வார்' (குறள் 3)

என்னும் குறளினை ஒப்ப இவர் பாடத்தில் சொற்பொருளமைதி யுடைமையும் நோக்கத் தகும்.

இங்ஙனமே,

> 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவ னடிசேரா தார்' (குறள் 10)

எனப் பரிமேலழகர் இரண்டாம் அடியை வகையுளியாகப் பாடங்கொள்ள, மணக்குடவரோ,

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தவர்'

என்று இயல்பாக அமையும் பாடம் கொண்டுள்ளார்.

'தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாமல் சான்று படும்' (குறள் 1032)

என்னும் குறளின் இரண்டாம் அடியில், 'வேண்டாமல் சான்று படும்' என்று பாடங்கொண்டதற்கு ஏற்ப, "ஒரு கையாற் பிடித்த எருவும் இடவேண்டாமல் அமைந்து விளையும்" என்று பொருளுரைக்கின்றார் மணக்குடவர்.

பரிமேலழகரோ,

'தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்' (குறள் 1037)

என்று இரண்டாம் அடியில் வேறுபட்ட பாடம் கொள்கிறார். "பயிர் ஒரு பிடியின்கண் அடங்கிய எருவும் இட வேண்டாமல் பணைத்து விளையும்" என்பது இரண்டாம் அடிக்கு இவர் தரும் உரை. மேலும், "பிடித்து—பிடியின் கண்ணது. பிடித்த என்பதன் விகாரம் என்பாரும் உளர். வேண்டாமல், சான்று என்பன திரிந்து நின்றன" என்று விளக்கமும் எழுதுகின்றார். இவ் விளக்கம் மணக்குடவர் உரையை நோக்கி அமைந்தது என்பது எளிதில் விளங்கும். 'வேண்டாமல் சான்று படும்' என இயல்பான சொற் கொண்ட மணக்குடவர் பாடம் பரிமேலழகரால் அவற்றின் திரிபு சொற்களாலான பாடமாகக் கொள்ளப்படுகிறது. இவற்றால், மணக்குடவர் பாடம் இயல்பாக அமைந்த ஒரு மரபுவழிப் பாடம் என்பது தெளிவு.

# 18. டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகப் பழையவுரைப் பதிப்பு

திருக்குறளுக்கு ஒரு பழைய உரையுடன் கூடிய பதிப்பை அடையாற்றில் உள்ள மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தார் 1961ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்கள். இவ்வுரைப் பிரதி டாக்டர் ஐயர் அவர்கள் தேடித் தொகுத்துவைத்திருந்த ஏடுகளுள் ஒன்று. இந்த ஏட்டுப் பிரதியைக் காத்து அளித்தவர் கொண்டப்ப வாத்தியார் என்பது மட்டும் தெரியவரு கிறது. இவ்வுரையாசிரியரின் பெயர், அவர் வாழ்ந்த காலம் முதலிய வரலாறுகள் ஒன்றும் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. இவ்வுரை பெரும்பாலும் பரிமேலழகர் உரை யையே பின்பற்றி. அமைந்துள்ளது என்பர்.[15] "உரை யின் அமைப்பும் போக்கும் ஆராய்வார்க்கு அது பதினேழு பதினெட்டாம் நூற்றுண்டில் எழுதப்பட்டிருத்தல் கூடும் என்பது புலனுகும்" என்று அப் பதிப்பின் முகவுரையில் சென்னைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் மு. வரத ராசனுர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இந்தப் பழைய உரைகாரர் கொண்ட குறள் மூல பாடத்தில் பாட வேறுபாடுகள் பல காணப்படுகின்றன. ஆகவே, இவர் கொண்ட மூலபாட வேறுபாடுகள் தனிப்பட ஆய்ந்து காண்பதற் குரியனவாம்.

முந்திய உரைகாரர் எவரும் கொள்ளாத மூல பாட வேறுபாடுகளை 117 குறள்களில் இப் பழைய உரைகாரர் கொண்டுள்ளார்.[16] அன்றியும் பிற உரையாசிரியர்கள் பாட வேறுபாடு கொண்ட குறள்களிலும் 48 குறள்களில்

இவர் கொண்ட பாடத்தை வேறு எவரும் கொண்டிலர்.[17] ஆகவே, இவ்வுரைகாரரிடம் மட்டுமே தனிப்படக் காணும் பாட வேறுபாடுகள் 165 குறள்களில் (117 + 48) உள்ளன என்பது கூர்ந்து நோக்கத் தக்கது. மணக்குடவர், காளிங்கர் முதலிய பண்டை உரையாசிரியர்கள் எவரும் கொள்ளாத அளவு இவ்வளவு மிகுந்த வேறுபாடுகள் இவ்வுரையின் மூலபாடத்துள் காணப்படுவது வியப்பைத் தருவதாயுள்ளது.

முந்திய உரைகாரர்களுள் மணக்குடவர், காளிங்கர், பரிதியார் முதலியோர் கொண்ட வேறுபட்ட பாடங்களுள் சிலவற்றை இவரும் தழுவியிருக்கிறார். மணக்குடவர் கொண்ட பாடங்களில் 14 இவர்க்கும் உடம்பாடு.[18] காளிங்கருக்கும் இவ்வுரைகாரருக்கும் 22 குறள்களில் பாட ஒருமைப்பாடு காணப்படுகிறது.[19] பரிப்பெருமாள் கொண்ட பாடங்களில் 4-ம்,[20] பரிதியார் கொண்ட பாடங்களில் இரண்டும்[21] இவ்வுரை மூல பாடங்களிலும் காணப்படுகின்றன. ஆனால், இவை மணக்குடவர், காளிங்கர் கொண்ட மூலபாடங்களும் ஆகும். இதனால், இவ்வுரைகாரர் மணக்குடவர், காளிங்கர் பாடங்களையே மேற்கொண்டார் என்னலாம்.

இப்பழைய உரைகாரர் கொண்ட பாடங்களில் பெரும்பாலனவும் ஒலி ஒப்புமை, உருவ ஒப்புமை காரணமாகத் தோன்றியனவே என்பது கூர்ந்து பார்ப்போமானால் நன்கு விளங்கும். குறில் - நெடில், ஒருமை - பன்மை வேற்றுமைகளாகவும் சில உள்ளன. பொதுவாக இவர் கொண்ட பாடங்கள் எல்லாம் நயமுடையன என்று கொள்வதற்கு இல்லை. இதுபற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் இப் பதிப்பிற்குத் தந்துள்ள முகவுரையில் கூறிய கருத்துக்கள் இவ்வுரைகாரர் பாடங்களின் உண்மை மதிப்பை எடுத்துக் காட்டுவனவாகும். அவர்கள் தரும் விளக்கம் வருமாறு :

"உணரப்பாற்று (11), விசும்பிலார் கோமான் (25), ஆகுதல் நீர்மை பிற (34) முதலான பாட வேறுபாடுகள் பொருந்துவனவாக இல்லை. இல்லதென் இல்லவள் மாண்பாயின் (53), அஞ்சும் அகத்தே நகும் (271), உலகம் பழித்தது ஒழித்து

விடல் (280) முதலான பாட வேறுபாடுகள் சில பொருந்துவன. வேட்பன சொல்லி வினைவல எஞ்ஞான்றும் (697) முதலான சில பாடவேறுபாடுகள் சிறந்தனவாகவும் உள்ளன."

பேராசிரியர் அவர்கள் சொல்லியபடியே மிகப் பல வேறுபாடுகளுடன் கூடிய இவ்வுரைகாரர் மூலபாடங்களுள்ளும் சிறந்தன ஒருசில உள என்பது உண்மையே.

93ஆம் குறளின் இரண்டாம் அடியில்,

'இன்சொ லினதே யறம்'

என் வகையுளியாக அமைந்த பாடமே பரிமேலழகர் முதலிய எல்லா உரையாசிரியர்களும் கொண்டனர். இவ்வுரைகாரர் கொண்ட பாடம்,

'இன்சொலின ஃதே யறம்'

என்பது. இதில் வகையுளியின்றி இனிய ஓசை நயம் சிறத்தல் கவனிக்கத் தகும். இப் பாடத்தை வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியாரும் தம்முடைய பரிமேலழகர் உரைப் பதிப்பில் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

'மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளா டாமரையி னாள்' (குறள் 617)

என்பது இப் பழைய உரைகாரர் கொண்ட மூல பாடம். இக்குறளில், 'மடியுளாள்' என்பதுவே பிறர்கொண்ட பாடம். இவர் பாடத்திலோ, 'மடியுளான்', 'மடியிலான்' என ஒரூஉ முரண் நயம் வாய்ந்துள்ளமை சிறப்பாகும்.

'குணநலஞ் சான்றோர் நலமே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉ மன்று'. (982)

'சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனால்
உழன்று முழவே தலை'. (1031)

இக்குறள்களில் வரும், 'நலமே', 'உழன்றும்' என்னும் பாடங்களையும் ஓசைக்கும் பொருளுக்கும் ஏற்புடையன என்று கொள்ளலாம்.

முந்திய உரைகாரர்கள் பாட வேறுபாடுகளைத் தத்தம் உரைகளில் அங்கங்கே சுட்டிச் செல்வதுபோல இப் பழைய

உரைகாரரும் ஒருசில பாட வேறுபாடுகளையும் தம் உரையுள் குறிப்பிட்டுள்ளார்.

| | | |
|---|---|---|
| 636 : 4 | அதிநுட்பம் | —'அதினுட்பமென்றுரைப் பாருமுளர்'. |
| 638: 1-2 | அறிகொன்றறியான் | —'அறிதொன்றறியான் என்றும் பாடம்'. |
| 1030: 1-2 | இடுக்கண்காலூன்றிட | —'இடுக்கண்கால்கொன்றிட என்று பாடமோதுவாரும் உளர்'. |
| 1081: 4 | கனங்குழை | —'கணங்குழை என்று பாடம் ஓதுவாரும் உளர்'. |
| 1028: 6-7 | வெப்பாக் கறிந்து | —'பாக்கு - எதிர் காலம். வெப்பம் - சூடாயிருத்தல். வேபாக்கென்று பாடமோதுவாரும் உளர். அது பாடமல்ல என்க'. |

இவற்றால் இவ்வுரைகாரர் பாடவேறுபாடுகளை ஆராய்ந்து தெளிந்து தமக்கு எவை எவை ஏற்புடையன என்று துணிந்தாரோ அவற்றையே மேற்கொண்டிருக்கிறார் என்பதும் விளக்கமாகும்.

# 19. பரிமேலழகர் பாடத்தினும் சிறப்புடைய பாடங்கள்

தொடை நயத்தையும் மற்றும் பொருட்சிறப்பு, அணி நலன் முதலியவற்றையும் நோக்கமாகக் கொண்டு ஆராய்ந்து பார்த்தால், சில இடங்களில் பரிமேலழகர் கொண்ட பாடத்தினும் நயமுடைய பாடங்களைப் பாட வேறுபாடுகளிலிருந்து காணுதல் கூடும். எடுத்துக் காட்டாக ஒருசில இடங்களை இங்கே காண்போம்.

'குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது' (குறள் 29)

என்னும் குறளில் 'கணமேயும்' எனப் பாடம் கொண்டு பரிமேலழகர், "கணமே யாயினும் வெகுளப்பட்டாரால் தடுத்தல் அரிது" என்று பொருள்செய்கின்றார். பின், "அநாதியாய் வருகின்றவாறு பற்றி ஒரோவழி வெகுளி தோன்றிய பொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்கு மாகலின் கணமேயும் என்றும், நிறைமொழி மாந்த ராதலின் காத்தல் அரிது என்றும் கூறினார்" என விளக்கம் தருகிறார். இவ் விளக்கத்தைக் கொண்டு பார்ப்போமானால் பரிமேலழகர் 'கணமேயும்' என வினைமுற்றாக்கிக், 'காத்தல் அரிது' என்பதனைத் தனித் தொடராகக் கொள்கின்றார் என்பது தெளிவு. இதற்குப் பரிதியார், 'கணமேனுங் காத்தல் அரிது' என்று பாடங்கொண்டார். 'குண மென்னும்' என்பதற் கேற்ப 'கணமேனும்' என்பதில் ஓசை நயமுளது. 'நுண்பொருள் மாலை' ஆசிரியர் திருக் குருகூர்த் திருமேனி இரத்தின கவிராயரும் பரிதியார் கொண்ட இப் பாடமே தக்கது எனக் காரணம் காட்டி விளக்குகின்றார்.

திருமேனி இரத்தின கவிராயர் தரும் விளக்கம் பின் வருமாறு :

> "கணமேயும் என்று பாடமோதாது கணமேனும் என்க. 'புறம் குன்றிக் கண்டனைய ரேனும்' (277), 'அரம் போலுங் கூர்மையரேனும்' (997), 'என்னுடைய ரேனுமிலர்' (430), 'யாதானு நாடாமால்' (397), 'வானம் வறக்குமேல்' (18), 'செல் லாமையுண்டேல்' (1151) எனப் பெரும்பான்மையும் வருதலான் ஏனும், ஆனும், ஏலும் என்பன ஆயின் என்னும் எச்ச மாத லின் அவ்வாறே பாடம் ஓதுக. 'நிரப்பிடும்பை தானேயுஞ் சாலுங் கரி' (1060) என்பது போலக் கணமேயுங் காத்தல் என்றால் ஏகாரத்தொடு கூடிநின்ற உம்மையாய் அக்கணமும் எனப் பொருள்படுதலால் அது பாடம் அன்று என்க."

நுண்பொருள் மாலையுடையார் காட்டும் காரணங்களை யும் கவனிக்கும் பொழுது 'கணமேனும்' என்னும் பாடமே திருவள்ளுவரின் உளத்திற்கு ஒத்தபாடம் என்பது தெளி வாம்.

> 'மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து' (குறள் 90)

என்னும் குறளில் 'மோப்ப' என்பது பரிமேலழகர் பாடம். பரிப்பெருமாள் கொண்ட பாடமோ 'மோக்க' என்பது. இப்பாடம் 'மோக்க', 'நோக்க' எனத் தலையாகு எதுகை நயமுடைய பாடமாதலால், இதனையே சிறந்த பாடமாகக் கொள்ளலாம்.

> 'நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர
> செய்யா தமைகலா வாறு' (குறள் 219)

இப் பாடலில் நான்காம் சீரில்வரும் 'செயும்நீர' என்பதனை மணக்குடவர் 'செயனீர்மை' என்று கொண்டு உரை எழுதி யுள்ளார். 'நயனுடையான்' என்பதற்கு ஒப்பச் 'செய னீர்மை' என்னும் பாடமே ஒரூஉத் தொடை நயமுடைத் தாய் உள்ளது. ஆதலால், இதுவே பழமையான பாடம் என்றும், சிறந்த பாடம் என்றும் கொள்ளுதற்குரியது.

> 'மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
> தானம் செய்வாரின் தலை' (குறள் 295)

என்பது பரிமேலழகரின் மூலபாடம். இங்கே நான்காம் சீரைத் 'தனத்தொடு' என்று கொண்டார் பரிதியார். 'மனத்

தொடு' என்பதை ஒத்து ஒரூஉத் தொடை நயம் வாய்ந்த பாடம் 'தனத்தொடு' என்பதே. இருவிகற்பமாய் வரும் பாடல்கள் ஒரூஉத் தொடை பெற்று வரும் அமைப்பு குறளகத்து நிரம்பக் காணப்படுகிறது. பொருளால் அன்பும் அருளும் அறனும் இன்பமும் எல்லாம் நிரம்பும் எனப் 'பொருள் செயல் வகை' அதிகாரத்தில் பொருளின் சிறப்பினை வள்ளுவர் பேசுகின்றார். எல்லா வினைகளின் வெற்றிக்கும் ஏதுவான பொருள் தானம் செய்வார்க்கும் இன்றியமையாது வேண்டுமே? ஆதலால், 'தனத்தொடு தானம் செய்வாரின் தலை' என்பதுவே நயமுடைய பாடம். 'வாய்மை' என்பது துறவற இயலில் வருவது கொண்டும், 'தானம் தவம் இரண்டும் தங்கா' (குறள் 19) என வான் சிறப்புக் கூறியவிடத்துச் சுட்டியது கொண்டும் 'தவத்தொடு' என்னும் பாடம் பிறந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

> 'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
> மாணா செய்யாமை தலை' (குறள் 317)

என வரும் குறளில் நான்காம் சீராகவுள்ள 'மனத்தானும்' என்பதனை 'மனத்தானும்' எனக் கொண்டார் மணக்குடவர். மனத்தில் தோன்றும் எண்ணமே சொல், செயல்களாக வளர்ந்து பயன் விளைக்கும் ஆதலானும், தோற்றும் நிலமாகிய மனத்தாலும் இன்னா செய்தலைத் தவிர்க என்றாராயிற்று. 'எண்ணுதலும் செய்தலோ டொக்கும்' என்பராகலின் எண்ணத்திலேயும் இன்னா ஆகாது எனக் கடிந்தாராதல் வேண்டும். 'எனைத்தானும்' என்பதற் கேற்ப 'மனத்தானும்' என்பதையே சிறந்த பாடமாகக் கொள்ளுதல் வேண்டும். இதனை மணக்குடவர் ஏற்றுக்கொண்டிருப்பதனால் இதுவே பழமையான பாடம் என்பதற்கு ஐயமின்று.

> 'கடன் அறிந்து காலம் கருதி இடனறிந்து
> எண்ணி உரைப்பான் தலை' (குறள் 687)

என்பது பரிமேலழகர் பாடம்; காளிங்கர் கொண்ட பாடமோ 'உரைப்பதாம் தூது' என்பது. 'நன்றி பயப்பதாம் தூது' (685), 'தக்கது அறிவதாம் தூது' (686), 'உறுதி பயப்பதாம் தூது' (690) எனத் 'தூது' என்னும் இவ்வதி

காரத்துள் வரும் பிறபாடல்களையும் நோக்க, காளிங்கர் கொண்டபடி 'எண்ணி உரைப்பதாம் தூது' என்பதே பழமையான பாடமாதல் வேண்டும். பரிமேலழகரோ, 'தலை' என்பதற்குத், 'தூதரின் மிக்கான்' என்று உரைகூறி, 'தூது என்பது அதிகாரத்தான் வந்தது' என்று அச் சொல்லைத் தாம் உடன் சேர்த்தமைக்கு விளக்கமும் தரு கிறார். இவ்வாறு அதிகார அடைவைக் கொண்டு 'தூது' என்னும் சொல் வருவிக்க வேண்டாது இயல்பாகவே அது பாடமாக அமைதல் சிறப்பன்றோ?

இவ்வாறே மேலும் பல பாடங்களையும் நாம் பார்ப்போமாயின், பரிமேலழகர் கொண்ட பாடம் இப்பொழுது வழக்கில் பெரிதும் நிலைபெற்று விட்டாலும், வேறு சில பாடங்கள் பழமையும் பொருட் பொலிவுமுடையனவாய் உள்ளமை பெறப்படும்.[22]

# 20. புலவர்தம் மேற்கோள்களில் பாட வேறுபாடு காணப்பெறுதல்

இனி, வேறொரு வகையாலும் திருக்குறளின் பாடவேறு பாடுகளுள் எவைஎவை பழமையானவை, எவைஎவை பொருட் பொருத்தமுற முன்னோரால் கொள்ளப்பெற்றவை என்று அறிய இடமுண்டு. குறட்பாக்களையும், பாடல் அடிகளையும், தொடர்களையும், கருத்துக்களையும் அப்படி அப்படியே தத்தம் நூல்களில் எடுத்தாண்ட புலவர் பெருமக்கள் பலராவர். குறளை எடுத்துத் தம் பாட்டிலேடு பொன்னேபோற் பொதிந்து வைத்துக்கொண்ட முன்னையோர் பாடல்களில் பயிலும் குறள் வடிவங்கள் நமக்கு அவற்றின் உண்மை யுருவினைக் கண்டுகொள்ள ஓரளவு உதவுவன.

எடுத்துக்காட்டாக இரண்டொரு இடங்களைப் பார்ப்போம் :

> ' ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
> நாகம் உயிர்ப்பக் கெடும் ' (குறள் 763)

என்னும் பாடல் 'படைமாட்சி' அதிகாரத்தில் (77) வருகிறது. இவ்வதிகாரத்தில் அமைந்துள்ள பிற குறள்களில் எல்லாம் 'படை' என்னும் சொல்லும் (761, 762, 764, 765 766, 769), இதே பொருளைத் தரும் 'தானை' என்னும் சொல்லுமே (767, 768, 770) பயின்றுள்ளன. 763ஆம் குறளில் மட்டும் 'எலிப்பகை' எனப் 'பகை' என்னும் சொல்லாட்சி இடம் பெற்றுள்ளது. 'பகைமாட்சி' என்னும் 87ஆம் அதிகாரத்தில் இக்குறள் இடம்பெற்றிருக்குமானால் பொருத்தமாயிருக்கும். அங்கே 'பகை' பற்றிப் பேசப்படு

கிறது. இவ்விரு அதிகாரங்களின் போக்கை நாம் ஆராய் வோமாஞல், படைமாட்சியில் வரும் 'ஒலித்தக்கால் என்னும் உவரி' (763) என்னும் பாடலில் 'எலிப்பகை' என்பது 'எலிப்படை' என இருத்தல் கூடுமோ என ஊகிக்க இடமுண்டு.

இக்குறளினை எடுத்தாண்டு பாடிய கம்பர்

'எலியெலாம் இப்படை அரவம் யானென
ஒலியுலாம் சேனையை உவந்து நோக்கினுன்'
(கம்ப. குகப். 10)

எனக் குகன் வாக்கில் வைத்து, 'எலியெலாம் இப்படை' என்று 763ஆம் குறளினை அடியொற்றிப் பேச வைக்கிருர். மேலும், மூலபலவதைப் படலத்திலும் இக் கருத்தினை,

'புற்றினின் றுவல் லரவினம் புறப்படப் பொருமி
இற்ற தெம்வலி யெனவிரைந் திரிதருமெலி'
(கம்ப. மூலபல. 27)

என வேருெரு வகையில் படைகளைக் குறித்துக் கூறுகிருர். எனவே, படைமாட்சியில் வரும் இக்குறளும்,

'ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்படை
நாகம் உயிர்ப்பக் கெடும்' (குறள் 763)

என்று முன்பு வழங்கியிருத்தல் கூடும் எனக் கொள்ளக் கிடக்கின்றது.

இன்னும் பிறிதொரு பாடலைப் பார்ப்போம் :

'இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து' (குறள் 539)

என்பது பொச்சாவாமை அதிகாரத்துள் வருகிறது. இதனைச் சூளாமணி தந்த தோலாமொழித் தேவர்,

'இகழ்ச்சி யிற்கெடு வார்களை எண்ணுக
மகிழ்ச்சி யுள்மதி மைந்துறும் போழ்தெனப்
புகழ்ச்சி நூலுள் புகன்றனர் பூவினுள்
திகழ்ச்சி சென்றசெம் பொன்முடி மன்னனே'
(சூளாமணி. சீயவதை. 56)

என்று தம் பாடலோடு குறளினை இழைத்துப் பொதிந்து

வைத்துள்ளார். திருக்குறளையும் 'புகழ்ச்சி நூல்' என்னும் பெயரால் இவர் குறிப்பிடுகின்றார். இவர்தம் வாக்கைக்கொண்டு பார்த்தால், 'இகழ்ச்சியின் கெட்டாரை எண்ணுக' என்பதே பண்டு வழங்கிய பாடம் எனக் கொள்ளலாம். மணக்குடவர், பரிப்பெருமாள், காளிங்கர் ஆகியோர் கொண்ட பாடமும் இதுவே. இப்பாடத்தால் இக் குறள் பொழிப்பு மோனை நயமும் பெறுகின்றது என்பது சிந்திக்கத் தக்கது. பரிமேலழகரோ, "எண்ணுக எனப் பாடம் ஓதுவாரும் உளர்" என்று பாட வேறுபாடாகத் தம் உரைக்கண் எடுத்துக்காட்டுகின்றார்.

# 21. உரைகாரர் மேற்கோள்களில் பாட வேறுபாடு

'எய்தற் கரிய தியன்றக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயலென் று—வய்யகத்து
ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு'

எனக் காட்டப் பெறும் யாப்பருங்கல விருத்தியுரை (சூ. 60 மேற்கோள்) மேற்கோளில்,

'எய்தற் கரிய தியைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்' (குறள் 489)

'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு' (குறள் 231)

என்னும் இரண்டு குறள் சிறிது மாற்றத்துடன் அமைக்கப் பட்டுள்ளன. இரண்டையும் சேர்க்கப் பாடலாசிரியர் கூட்டி உரைத்தது 'என்று வய்யகத்து' என்பது மட்டுமே. இம் மேற்கோளில், 'இயைந்தக்கால்' எனவரும் குறட் பாடம் 'இயன்றக்கால்' என மாறிவருதல் கவனிக்கத் தகும்.

வீரசோழியம் என்னும் இலக்கண நூலுக்கு உரை கண்ட பெருந்தேவனார், 1202 ஆம் குறட்பாவை மேற் கோளாக எடுத்துக் காட்டுமிடத்து,

'எனைத்தொன் றினிதேகாண் காமம்தாம் வீழ்வார்
நினைக்க வருவதொன் றுண்டு'

என்று கொடுத்துள்ளார் (வீர. சோ. 152. உரை). இப் பாடலின் இரண்டாம் அடியைத் திருக்குறள் உரையாசிரி

யர்கள் 'நினைப்ப வருவதொன் றில்' என்று பாடங்கொண்டு உரை வரைந்துள்ளனர். உரைகாரர் பெருந்தேவனார் கொண்ட பாடமும் பரிமேலழகர் முதலியோர் கொண்ட பாடமும் இங்கு மாறுபட்டு வருதல் கூர்ந்து நோக்கத் தக்கதாம்.[23]

திருக்குறள் பாடல்களைப் பின்னிரண்டடிகளாகக் கொண்டு, அவற்றை விளக்கும் வேறு செய்திகளை ஏனைய இரண்டடிகளில் அமைத்துப் பாடப் பெற்ற திருக்குறள் முதுமொழி வெண்பா நூல்கள் பல உள்ளன. அந்நூல் களில் எல்லாம் அவற்றின் ஆசிரியர்கள் எடுத்துச் சேர்த்துக்கொண்ட குறள் வடிவம் நமக்குத் திருக்குறளின் உண்மையுருக் காண்பதற்கு உதவுவனவாம்.

இவ்வாறாக, முந்திய உரைகாரர், குறளை எடுத்துத் தம் கவியுள் பொதிந்து போற்றிக் கொண்ட புலவர் பெரு மக்களின் பாடல்கள், உரையாசிரியர்கள் மேற்கோளாகக் கொண்டு காட்டும் குறட்பாக்கள், திருக்குறள் முதுமொழி வெண்பாக்கள் முதலியன வெல்லாம் திருக்குறளின் உண்மைப் பாடம் காண்பதற்குத் துணைசெய்வனவாம். அதோடு, இலக்கிய இலக்கண வரன்முறைகளும் இதற்கு ஓர் அளவுகோலே யாகும்.

# 22. மனம் போனபடி குறளைத் திருத்திய பதிப்பாசிரியர்

மேலே காட்டிப் போந்த எவ்வகைப் பரிசோதனையும் இன்றித் தத்தமது விருப்பு வெறுப்புக்கு ஏற்பக் குறட் பாக்களை வேறுவேறுவகையில் சிதைத்து வழங்குதல் பெரும் பிழையாகும். இப்பிழையையும் துணிந்து செய்ய முற்பட்டார் ஒரு வெள்ளைப் பாதிரியார்.[24] இவர்தாம் சென்ற பத்தொன்பதாம் நூற்றுண்டில் மதுரைப் பகுதிக்கு வந்து வசித்த சுகாத்தியர் என்பவர். ஸ்காட் (Scott) என்னும் தம் இயற்பெயரையே இவர் தமிழோசைப் படுத்தித் தமிழ் வழக்கிற்குப் பொருந்தச் சுகாத்தியர் என வைத்துக்கொண்டாராவர்.

இப்பாதிரியார் தமிழ்ப் புலவர் சிலரை அடுத்து இலக்கிய இலக்கணம் கற்ருர். யாப்பிலக்கணமும் பயின்ற இவர் பாடல்கள் எல்லாம் எதுகை மோனைக் கட்டுக்கோப் பில், அதுவும் எல்லாம் தலையாகு எதுகை மோனைகளா கவே இருக்கவேண்டும் என்னும் முடிவுக்கு வந்து விட்டார். எனவே, தமக்குத் தோன்றியபடி குறள்களில் எதுகை மோனைகளை மாற்றி அமைத்தார். தமது மாற்றத்தைத் தக்க தமிழ்ப் புலவர்கள் ஒப்புக்கொண்டால்தான் எல் லாரும் மதிப்பர் என்பதனையும் அறிந்தார்.

அந்நாளில் தமிழ்ப் பணி செய்து ஓய்வுபெற்று முது பெரும் புலவராய் உறையூரில் வாழ்ந்துவந்தார் வித்து வான் தியாகராச செட்டியார். இவர் திருவாவடுதுறை யாதீன மகாவித்துவான் திரிசிரபுரம் மீனுட்சி சுந்தரம்

பிள்ளையவர்களின் தலைமாணவர். எனவே, இவருடைய ஒப்புதலைப் பெற்றால் எல்லாரும் ஏற்பர் என்பதனையும் பிறர்வாயிலாகப் பாதிரியார் தெரிந்து கொண்டார்.

பின்னர், பாதிரியார் தமக்குத் துணையாக ஓர் அன்பரையும் அழைத்துக்கொண்டு தியாகராச செட்டியார் அவர்களைக் காண உறையூருக்குச் சென்றார். இவருடைய வரவின் நோக்கத்தையறிந்த செட்டியாருக்கோ பெருஞ் சினம் மூண்டது. பாதிரியாரோ,

> "'தக்கார் தகவில ரென்ப தவரவர்
> எச்சத்தாற் காணப் படும்'

என்றிருக்கிறதே. இதில் எதுகை நன்றாக அமைய இரண்டாம் அடியை 'மக்களாற் காணப் படும்' என்று திருத்தினேன்.[25] இந்தத் திருத்தம் எவ்வளவு நன்றாகப் பொருந்துகிறது பார்த்தீர்களா" என்று கூறினராம்.

தியாகராச செட்டியார் பாதிரியாரின் அறியாமை கண்டு சினந்து அவரிடம் மேற்கொண்டு பேசாததுமட்டுமன்று; குறளைத் திருத்திய அடாத செயலைச் செய்தவர் முகத்தில் விழிப்பதே பாவம் என்று சொல்லிக்கொண்டே தம் வீட்டிற்குள் சென்று கதவையும் அடைத்துக் கொண்டனராம். பாதிரியாருடன் வந்தவர் எவ்வளவோ வேண்டியும் பெரும் புலவர் செட்டியார் அவர்கள் அவரைப் பார்ப்பதற்கு இசையவே இல்லை. பாதிரியாரும் வேறுவழியின்றித் தாம் வந்த வழியே திரும்பிச் சென்றனராம்.

இந்த நிகழ்ச்சியை டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தாம் எழுதிய 'வித்துவான் தியாகராச செட்டியார்' வரலாற்றில், 'குறளைத் திருத்திய பாதிரியார்'[26] என்னும் பகுதியில் சுவைபட எழுதியுள்ளார்கள்.[27]

இவ்வாறெல்லாம் ஒருவர் தம் மனம் போனபடி திருத்துவது மரபு அறியாக் குறையேயன்றி வேறன்று. முன்னையோர் வாழ்ந்த காலமும் சூழலும் நோக்காது அவர்தம் வாக்குகளைத் திருத்தித் தமிழைத் தூய்மை செய்

வதாகக் கருதுவது வரலாற்று நெறிக்கு முற்றும் மாறு பட்டதாம். இவ்வகையாக யார் திருத்தினலும் தமிழுலகம் அதனை அறவே ஒதுக்கித்தள்ளும் என்பது பின்னுளிலும் தமக்குத் தோன்றியபடி திருத்திய சிலருடைய பதிப்புகள் கற்றவர்களால் மதித்துப் போற்றப் பெருமையும், அவை மேலும் வழங்கப் பெருது ஒழிந்தமையுமே சான்று.

# 23. சுகாத்தியரின் பதிப்பு

சுகாத்தியர் குறளைத் திருத்தியதோடு மட்டும் நிற்க வில்லை. அச்சிட்டு நூலுருவிலும் வெளியிட்டுள்ளார். கி. பி. 1889 ஆம் ஆண்டு மதுரையிலிருந்து இவருடைய பதிப்பு வெளிவந்தது.

"திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்த குறள் மூலமும் சுகாத்தியர் இயற்றிய கருத்துர யட்டவணயும் பொழிப்புரயும்[28] (கருத்துரை யட்டவணையும் பொழிப்புரையும்) இதில் அச்சிடலாயிற்று"

என்று தலைப்புப் பக்கத்தில் தரப்பட்டிருக்கிறது.

திருக்குறளின் பால், இயல் அதிகாரங்களையும் பல் வேறு வகையில் இவர் மாற்றி அமைத்துள்ளார். 'அதிகாரத்தை'ப் 'பதிகம்' என இவர் வழங்குகிறார். 'பாயிரம்' என்பதனை 'நூன்முகம்' என்று கொண்டுள்ளார். பின்னர் இயன்முறைப் பால், இயைமுறைப் பால், இறை முறைப் பால் என இவர் ஒரு புதிய முப்பால் பகுப்பினைச் செய்கின்றார்.

இப் பாதிரியார் தாம் குறளைத் திருத்த முற்பட்டதற்குச் சில காரணங்களை 'உரையாசிரியர் கோட்பாடு' என நூல் முகப்பில் விவரித்துள்ளார்:

"திருவள்ளுவர் தெய்வப் புலவராதலாலும் அவர் தம்மை ஏற்றுக்கொள்ளாத சங்கத்தில் அரங்கேற்றியிருத்தலாலும், இந்நூலைத் தமிழ் வேதமென முன்னையோர் ஏற்றிருத்தலாலும் அவர் எழுதிய திருக்குறளில் எவ்வித வழுவும் இரா

என்னும் நிச்சயத்தாலும் எதுகை மோனை வழுவாதிருந்த அநேகம் குறள்களுக்கும் ஒப்ப மற்றைய குறள்களுக்கு எதுகை மோனை திருத்தி சுத்த மூலங்கண்டு வெளியிடப்பட்டது........"

"திருவள்ளுவ நாயனார் இந்நூலருளிய பயனை உலகிலுள்ளா ரெல்லாம் அடைந்துய்யுமாறு பதிகங்களை முறைப்படுத்தி அவற்றின் கருத்து விளங்கும்படி இட்ட பெயர்ப் பொருள் அதிகாரவுரையில் துலக்கி எதுகைமோனை வழுக்களைந்து ஒவ்வொரு திருக்குறளின் சிறந்த பொருளையும் தோன்றத் தந்து செந்தமிழ் ஆதி முறைப்படி வரைந்து அச்சிற் பதிப்பித் தனம்."[29]

இவருடைய கோட்பாடுகள் எவ்வளவு ஆழ்ந்த சிந்தனை யுடன் இவரைச் செயலாற்றச் செய்துவிட்டன என்பது இவர் திருத்தியுள்ள ஒன்றிரண்டு குறள்களைப் பார்த் தாலே விளங்கிவிடும்.

'அகர முதல வெழுத்தெல்லா மாதி
முகர முதற்றே யுலகு'.

'மற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னெற்ருெடொழா ரெனின்'.

இவை சுகாத்தியர் திருத்தத்திற்கு மாதிரி. முதற் குறளில் 'பகவன்' என்பதனை 'முகரம்' ஆகவும், அடுத்த குறளில், 'கற்றதனால்' என்பதனை 'மற்றதனால்' எனவும், 'நற்றாள்' என்பதனை 'எற்றாள்' எனவும் மாற்றிவிட்டார். 'முதற்றே' எனவும், 'வாலறிவன்' எனவும், 'எனின்' எனவும் பின்னர் அவ்வவ்வடிகளில் வருவதற்கேற்ப இத் திருத்தங்களை அவர் மோனை மோகத்தில் செய்திருக்கிறார். இவர் தம் திருத்தங்கள் எளிதில் விளங்குமா? அதனால் தான் அவற்றிற்கு அவரே உரையும் எழுதியிருக்கிறார்!

சுகாத்தியரின் தொண்டுள்ளம் எத்தகையது என்ப தற்கு மேலே காட்டியவை போதும். இது ஒருவருடைய தவறான நம்பிக்கையின் அடிப்படையில் விளைந்து விட்டது. இப்படிப்பட்ட இவருடைய தொண்டு முதுபெரும் புலவர் வித்துவான் தியாகராச செட்டியார் மறைந்த ஆண்டிற்கு

(கி. பி. 1888) மறுஆண்டு வெளியிடப்பட்டிருக்கிறது. திரு. செட்டியார் அவர்களுக்குப்பின் யாரும் தம் முயற்சிக்குத் தடையாக இரார் என்று துணிந்து சுகாத்தியர் அச்சிட்டார் போலும்.

இப்பதிப்பின் தீயவிளைவுகளைத் தமிழறிஞர்களும் அன்பர்களும் எண்ணாமல் இல்லை. கற்றவர்கள், தமிழ் மரபு உணர்ந்தவர்கள் இப்பதிப்பினை ஏற்பரோ? இதனைப் பரவ விடாமல் ஒழிக்கவே பலரும் முயன்றனர்.

சிறப்பாக, இராமநாதபுரம் சேதுபதி வமிசத்தைச் சார்ந்த பாலவனத்தம் ஜமீன்தார் மாண்புமிகு பாண்டித் துரைத் தேவர் அவர்களின் செந்தமிழ்ப்பற்று இங்குக் குறிப்பிடத்தகும். ஸ்காட் பாதிரியார் ஒருசமயம் மதுரை மாநகரில் பாண்டித்துரைத் தேவர் அவர்களைச் சந்தித்த போது, தம்முடைய புதுமுயற்சி குறித்து அவர்களிடம் விவரித்துக் கூறியதோடு ஒரு பிரதியும் அவர்களுக்குத் தந்தனராம். அதோடு தாம் ஐந்நூறு பிரதிகள் அச்சிட்டதில் இருநூறு பிரதிகளை வேண்டியவர்களுக்குக் கொடுத்ததாயும், மேலும் முந்நூறு பிரதிகள் விலையாகாமல் நெடுநாளாகத் தம்மிடம் உள்ளன என்றும் கூறினராம். அப்பொழுது தேவர் அவர்கள் எஞ்சியபிரதிகள் அத்தனையும் இராமநாதபுரத்திற்கு அனுப்பிவைக்குமாறு சொல்லி, அவற்றிற்குரிய விலையையும் பாதிரியாருக்குக் கொடுத்துவிட்டார்களாம்.

சில நாள்களுக்குப் பின்னர், பிரதிகள் இராமநாதபுரத்திற்கு வந்து சேர்ந்தன. பாண்டித்துரைத் தேவர் அவர்கள் ஸ்காட் துரையின் அறியாமையையும் செருக்கையும் பலர்க்கும் எடுத்துக்கூறி, அவர்கள் முன்னிலையில் மதுரையிலிருந்து வந்த பிரதிகள் அத்தனையும் நெருப்பிலிட்டுத் தீக்கிரையாகச் செய்வித்தார்களாம். "இப்பித்துக் கொள்ளியிடம் எஞ்சியிருந்த முந்நூறு பிரதிகளும் அறிஞர்கள்பாற் சென்று மனத்துன்பம் விளைக்காதிருப்பதற்கும் அறியாதார் திருக்குறளைத் தாறுமாருகப் பாட மோதாமல் இருப்பதற்கும் இதுதான் தக்க பரிகாரம்" என்று யாவரும்

அறியக் கூறித் தேவர் அவர்கள் அகமகிழ்ந்தனராம்.[30] நீக்கிரையாகாமல் தப்பிய சில சுவடிகளே இப்பொழுது சிலரிடம் சிக்கியிருக்கின்றன. அவர்களும் இப் பதிப்பை ஒரு வேடிக்கை விநோதப் பொருளாகத்தான் காப்பாற்றி வருகின்றனர் ; போற்றிப் படிப்பதற்காக அன்று. இவ் வாறாக இப் பதிப்பு இன்று கலைக்கூடத்துக் காட்சிப் பொருளாக ஆகிவிட்டது.

# 24. குறள் நூலின் நிலைபேறு

இப்பாதிரியாரின் முயற்சி வெளிப்படையாக உலகம் அறிய ஏதுவாயிற்று. முன்னர் ஏடுகளில் நூல்கள் வழங்கிய காலத்து எத்தனையோ போலிப் புலவர்கள் சான்றோரின் பாடல்களிடையிலே தம்முடைய போலிப் பாடல்களையும் இடைச் செருகவிட்டனர். தத்தமக்கு ஏற்றபடி மூலபாடங்களையும் மாற்றிக்கொண்டனர். இவர்களுள் கந்தியார், வெள்ளியம்பலத் தம்பிரான் என்போர் குறிப்பிடத்தக்கவராவர். கந்தியாரால் நேர்ந்த இடைச் செருகல்களையும் மாற்றங்களையும் நீக்கி உண்மைப்பாடம் கண்டு பரிபாடலுக்குப் பரிமேலழகர் உரைவகுத்தார் என்று அந் நூலின் உரைப்பாயிரத்தால் தெரியவருகிறது. கம்பராமாயணம், பெரிய புராணம், நளவெண்பா முதலிய பல நூல்களில் இடைச் செருகல் ஏற்பட வெள்ளியம்பலத் தம்பிரான் காரணமாயிருந்தனர் என்பர். இவரால் நேர்ந்த இடைச் செருகல்களை 'வெள்ளிபாடல்கள்' என்று குறிப்பிடுவர்.

இவ்வகையான இடைச் செருகல்கள் எதுவும் குறளில் நேர இடமில்லாதபடி அதிகாரத்திற்குப் பத்தாக ஆசிரியர் திருவள்ளுவரே பாடல்களை அமைத்துச் சென்றுவிட்டார். அதோடு உரைகாரர் பலர் திருக்குறளைப் போற்றி உரை வரைந்தமையும், ஏனைய புலவர்களும் இந்நூலை மதித்துப் போற்றியமையும் ஓரளவு இந்நூல் பெருஞ்சிதைவிலிருந்து தப்ப ஏதுவாயின என்னலாம்.

திருக்குறளை எடுத்தாண்ட பிற்காலப் புலவர்களும் உரைகாரர்களும் குறட்பாவின் வடிவில் சிற்சில பாடவேறு

பாடுகளைக் கொண்டிருந்தாலும் அச்சுப்பதிப்புகள் வந்த பின் அதற்கும் ஒருநிலைபேறு வந்துவிட்டது என்னலாம். முன்னாளில் எழுத்துப் பிரதிகளில் நேர்ந்த அளவு பெரு மாறுதல்கள் இன்று நிகழ இடமில்லை. பெரும்பாலும் திருக்குறளைப் பயில்வோர் பரிமேலழகர் உரையுடனும் அவர் கொண்ட மூலபாடத்துடனும் பயில்வதே பெரு வழக்கு. இந்நாளில் புத்துரைகள் எழுதியோர் பலரும் மேற் கொண்ட மூலபாடம் பரிமேலழகர் தரும் மூலபாடமே. குறள் மூலநூல் அச்சிடுவாரும் அதனையே பின்பற்றி வருகின்றனர். வழக்கில் குறளை எடுத்து மொழிவாரும் எழுதுவாரும்கூட இம் மூலபாடங்களையே வழங்கி வரு கின்றனர். இவ்வாறாகக் காலப்போக்கில் பரிமேலழகர் கொண்ட மூலபாடமே வள்ளுவர் வாக்காகக் கொள்ளப் பெறும் நிலைமை தோன்றியுள்ளது. என்றாலும், பாடவேறு பாடுகளை நுணுகி நோக்கி, வள்ளுவர் வாக்கின் மரபு களையும் ஊன்றிக்கண்டு, ஒப்புநோக்கி எல்லாரும் ஒருப் படும் வகையில் ஒரு மூலபாடப் பதிப்பை அறிஞர் குழாம் கொண்டுவரும் காலமும் இனி நேரலாம். இனிமேலும் குறளில் பாடவேறுபாடுகள் நிகழவிடக் கூடாதல்லவா?

# குறிப்புகள்

1. திருக்குறள் உரைகாரர் பதின்மர் என்பதைத் தெரிவிக்கும் தனிப்பாடல்:

> ' தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
> பரிமே லழகர் பரிதி—திருமலையர்
> மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர் நூற்
> கெல்லையுரை கண்டார் இவர்'. (பெருந். 1538)

2. பாட்டும் சீரும் மணக்குடவர் பாடம் பரிப்பெருமாள் பாடம்

| பாட்டும் சீரும் | மணக்குடவர் பாடம் | பரிப்பெருமாள் பாடம் |
|---|---|---|
| 1081 : 4 | கனங்குழை | கணங்குழை |
| 1178 : 5 | காணுதமைவில | காணுதிமையல |
| 1195 : 2 | கொண்டார் | கொண்டால் |
| 1195 : 4 | செய்பவோ | செய்யுமோ |

3. வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாம் தரம்

என்பது உமாபதி சிவாசாரியாரின் வாக்கு என்பர்.

4. 500, 660, 979—மணக்குடவரும் காளிங்கரும் கொண்ட பாடம். 636—மணக்குடவர்மட்டும் கொண்ட பாடம். 501, 1161—காளிங்கர்மட்டும் கொண்ட பாடம். 662, 1058—இவை இப்பொழுது கிடைக்கப்பெருத பிற உரையாசிரியர்களின் பாடமாதல் வேண்டும்.

5. 500, 539, 660, 809, 821, 958, 1081—ஆகியவை காளிங்கருக்கும் உடம்பாடு. 636, 660, 809, 821, 1139—ஆகியவை மணக்குடவருக்கும் உடம்பாடு.

6. இப் பாடத்தைக் காளிங்கரும் கொண்டுள்ளனர்.

7. பரிமேலழகர் காட்டிய உரைபாடங்களுள் எந்த உரையாசிரியராலும் கொள்ளப்படாதவை: 101, 188, 283, 319, 419, 662, 787, 816, 864, 938, 943, 999, 1058, 1111, 1180, 1208, 1232, 1287.

8. பிற்பதிப்பாசிரியர்கள் 'காளிங்கர்' என்றே கொண்டுள்ளனர்.

9. இந்த எண் தொகை டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையத்தின் வழி 1961 ஆம் ஆண்டில் வெளிவந்த திருக்குறள் பழையவுரைப் பதிப்பைத் தவிர்த்து, ஏனைய பதிப்புக்களில் காணப் பெற்றனவாகும். சாமிநாதையர் நூல்நிலைய வெளியீட்டில் வேறு எந்தப் பதிப்பிலும் இல்லாத அளவு நூற்றுக்கு மேற்பட்ட பாட பேதங்கள் உள. எனவே, அவை தனிப்பட நோக்குதற் குரியனவாம்.

10. டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீட்டுப் பழையவுரைகாரர் பாடபேதங்களையும் சேர்த்துக் கணக்கிட்டால் ஏறத்தாழ நூற்றுக்கு 32 விழுக்காடு பாடபேதங்களைப் பெற்றுள்ளன என்று கொள்ளவேண்டும்.

11. இ, ஈ, ஐ என்னும் ஈற்று மொழிகளுக்கு முன் உயிர் முதல் மொழிவந்தால் யகர உடம்படு மெய்யும், பிற அ, ஆ, முதலிய ஒன்பது உயிர்களுக்கு முன் உயிர் முதல் மொழிவந்தால் வகர உடம்படு மெய்யும் வரவேண்டும் என்பது முறை. ஏ என்பதற்கு வகர உடம்படுமெய்யோடு யகர உடம்படுமெய்யும் வரலாம்.

> 'இ ஈ ஐவழி யவ்வும் ஏனை
> உயிர்வழி வவ்வும் ஏமுனிவ் விருமையும்
> உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்'. (நன். 162)

12. இங்கெல்லாம் பரிமேலழகர் உரையில் இச்சந்தி முடிவிற்குத் தக்க விளக்கம் தரப்படவில்லை. பரிமேலழகரின் உரைக்கு விளக்கக் குறிப்புகள் எழுதி யுதவிய திருக்குருகூர் திருமேனி இரத்தின கவிராயரின் 'நுண்பொருள் மாலையில்' இதுபற்றிய விளக்கம் உள்ளது. அவர் தரும் விளக்கவுரை வருமாறு:

"ஈத்து வினையெச்சத் திரிசொல். 'தம்முடைமை' என நிற்கற்பாலது 'தாமுடைமை' எனவும், முன்னர்க் காமத்துப் பாலில், 'தாமுடைய நெஞ்சந் துணையல் வழி' (1299) 'தமரல்வழி' (1300) எனவும்,

'பூங்கணையார்' என்னும் கோவையாருள் (19) 'பாங்கனையானன்ன பண்பனை' எனவும், 'தெளிய நீ யனைய பொன்னே பன்னு கோலம் தெளிவுறவே' (122) எனவும்,

'வேனில் வெயிற்குலர்ந்த மெய்வறுமை கண்டிரங்கி
வானின் வளஞ்சுரந்த வண்புயற்குத்-தானுடைய
தாதுமே தக்க மதுவும் தடஞ்சினையால்
போதுமீ தேந்தும் பொழில்'

(தண்டி. சூ. 29 மேற்கோள்)

என்பதனுள் 'தானுடைய' எனவும்,

பிற்காலக் கவியிலும், 'தானுடைய மெய்ந்நுடக்கம் தண் மாதவிக் களித்து' எனவும் பெரும்பான்மையும் வரும்.

'தாம் நாம் என்னும் மகர இறுதியும்
யாம் என் இறுதியும் அவற்றோ ரன்ன'

(தொல். எழுத். 188)

என்னும் சூத்திரவிதி பெருது, உருபு புணர்ச்சிக்கும் பொருட் புணர்ச்சிக்கும் மாறுபட்டு வருதலின் இவற்றின்கண் உரையாசிரியர் பரிகரியாமையால், இவ்வுரையாசிரியர் கருத்தும் எம் மனோர்க்கு அறிதல் அரிது என்க.''

இங்கே 'நுண்பொருள் மாலை' யுடையாரும் இச் சந்தி மாறு பாட்டுக்குத் தக்க காரணம் புலப்படவில்லை என்று கூறுகிறார். செய்யுளில் தாம், நாம், யாம் என்பன தம், நம், எம் என முதனிலை குறுகி வடிவு வேறுபட்டு, தனிக்குறில் முன் ஒற்றாய் இரட்டித்து வரும் சந்தியைப் பெருது இயல்பாகவே,

'புள்ளி யீற்றுமுன் உயிர்தனித் தியலாது
மெய்யொடுஞ் சிவணும் அவ்வியல் கெடுத்தே'

(தொல். எழுத். புணரி. 36)

என்றபடி இயல்புசந்தி கொள்ளப்பட்டிருக்கிறது.

இவ்வகைச் சந்தி அமைப்பு திருக்குறளில் மட்டுமன்றி திருக் கோவையார் முதலிய நூல்களிலும் சான்றோர்களால் செய்யுள் வழக்காகக் கொள்ளப்பட்டிருக்கின்றன என்பது மேலே எடுத்துக் காட்டியவற்றால் விளங்கும். எனவே, செய்யுளில் ஓசையினிமை கருதி இங்ஙனம் திரிபு சந்திக்குப் பதிலாக இயல்பு சந்தி கொள் வது ஆன்றோர் வழக்கெனக் கொள்ளுதலே அமைவுடைத்தாம்.

13. இவர் 'காலிங்கர்' என்றே வழங்குகிறார். காளிங்கர் என்னும் பெயர் வழக்குப் பெரும்பான்மையோரால் மேற்கொள் ளப்பட்டிருக்கிறது.

14. 'பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே'

